# ஊஞ்சல் இலக்கியம்

பதிப்பாசிரியர்:
த அழகப்பராசு




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
International Institute of Tamil Studies
டி. டி. டி. ஐ., தரமணி, சென்னை 600 113.

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the book | — | Ūñcal Ilakkiyam |
| Editor | — | T. Azhagapparaju<br>Junior Research fellow<br>International Institute of<br>Tamil Studies<br>Madras-600 113 |
| Publisher & (C) | — | International Institute of Tamil Studies<br>Madras-600 113<br>International Institute of Tamil Studies<br>Madras-600 113 |
| Publication Number | — | 61 |
| Language | — | Tamil |
| Edition | — | First |
| Date of Publication | — | Feb. 1983 |
| Paper used | — | 16 Kg. D/Demy |
| Size of the Book | — | 21 × 18 Cms |
| Printing types used | — | 10 Point |
| Number of Pages | — | iv + 216 |
| Number of Copies | — | 1200 |
| Price | — | Rs. 10/- |
| Printing | — | Sri Gomathy Achagam<br>7, Chinnappa Rawother Street,<br>Triplicane, Madras-5<br>P. Phone: 841478 |
| Binding | — | Card Board. |
| Artist | — | Amudhone |
| Subject | — | ūñcal prabhandha Literatures, Edited and Published from palm—leaf Manuscripts. |

**டாக்டர் ச. வே. சுப்பிரமணியன்**
இயக்குநர்
**உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்**
**டி.டி டி.ஐ. அஞ்சல் சென்னை-600 113**




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் இலக்கிய வகைகள் பற்றியும் ஆய்வு செய்துகொண்டு வருகிறது. அந்நிலையில் அச்சில் வராத இலக்கிய வகைகளையும் அது தொகுத்து வெளியிடுகின்றது. இந்நிலையில் 'கும்மிப்பாடல்கள்' என்ற இலக்கிய வகையில் அச்சில் வராத 9 கும்மிப்பாடல்களைத் தொகுத்து ஆய்வு முன்னுரையுடன் வெளியிட்டுள்ளது. ஊஞ்சல் இலக்கியம் என்ற தலைப்பில் இதுவரை அச்சில் வராத 10 ஊஞ்சல் நூல்களைத் தொகுத்து வெளியிடுகிறது. இதனால் வரலாற்று ஆராய்ச்சிக்கும், ஊஞ்சல் வகை ஆராய்ச்சிக்கும் புதிய திருப்பத்தை இந்நூல் செய்கிறது.

அச்சில் வராத ஊஞ்சல் இலக்கியங்கள் அனைத்தையும் நிறுவன ஆய்வாளராகப் பணி ஆற்றுகின்ற திரு. த அழகப்பராசு அவர்கள் ஓலைச்சுவடிகளில் இருந்து தெளிவாகத் தொகுத்து சிறந்த ஆய்வு முன்னுரையுடன் தமிழ் உலகுக்குத் தந்துள்ளமை பாராட்டத்தக்கது. அவர் சுவடியியல் பயிற்சிபடித்தவர் அதனால் பதிப்புக் கலையைப் பற்றியும் தெரிந்தவர். இந்நிலையில் இந்நூல் எல்லாவகையான தகுதிகளுடனும் அமைந்துள்ளது.

இந்நூலைச் சிறப்பாக அமைத்துத்தந்த ஆய்வாளர் திரு. அழகப்பராசு அவர்களைப் பாராட்டுகிறேன்.

குறுகிய காலத்தில் சிறப்பாக அச்சிட்டுத்தந்த ஸ்ரீ கோமதி அச்சக உரிமையாளர் திரு. சி. சரவணகுமார் அவர்களுக்கு எங்கள் நன்றி உரியது

நிறுவனப் பணிகளுக்கெல்லாம் ஆக்கமும் ஊக்கமும் எப்போதும் தருகின்ற மாண்புமிகு கல்வியமைச்சர் செ அரங்கநாயகம் அவர்களுக்கு எங்கள் நன்றி என்றும் உரித்தாகுக

அன்புள்ள,

**ச. வே. சுப்பிரமணியன்**

## நினைத்துப் பார்க்கிறேன்................

- நூலுக்கு அடித்தளம் அமைத்து, தூண்டுகோலாயிருந்து, ஆக்கமும் ஊக்கமும் தந்து பல்லாற்றானும் துணை நின்று என்னை வழி நடாத்திவரும் நிறுவன இயக்குநர் பேராசிரியர் டாக்டர் ச. வே. சுப்பிரமணியன் அவர்களையும்,
- ஆய்வுக்கு வழிகாட்டி, கருத்துக்களைச் செம்மை செய்தளித்த எனது ஆய்வு நெறியாளர் டாக்டர் ந. கடிகாசலம் அவர்களையும்,
- சுவடியைப்படி எடுத்ததிலிருந்து அச்சுக்குப் படியை உருவாக்கும் வரையில் பலவகையிலும் எனக்குத் துணைநின்ற என் ஆசிரியப் பெருந்தகை மு. கோ. ராமன் அவர்களையும்,
- பதிப்புமுறையின் செம்மையை விளக்கி, செப்பம் செய்து தந்த என் ஆசான் திரு. பூ. சுப்பிரமணியன் அவர்களையும்,
- என்னால் விளங்கிக் கொள்ள முடியாதிருந்த வீரசைவ மரபுகளுக்கு விளக்கம் தந்த பேராசிரியர் ஆ. சிவலிங்கனார் அவர்களையும்,
- கேரளச் சுவடிகள் நூலகத்திலிருந்து ஊஞ்சல்களைப் படியெடுத்துதவிய என் வகுப்புத் தோழி செல்வி இரா. நிர்மலா தேவி அவர்களையும்,
- அச்சுக்குத் தக்க முறையில் படியெடுத்துத் தந்துதவிய திருமதி பிரசன்னா அவர்களையும்,
- சுவடியைப் படியெடுக்க அனுமதி வழங்கிய அரசினர் சுவடிகள் (சென்னை) நூலகத்தாரையும், நன்முறையில் அச்சாக்கித் தந்த ஸ்ரீ கோமதி அச்சகத்தாரையும்,

.....................**நெஞ்சாரப் பணிகிறேன்**

த. அழகப்பராசு

# பொருளடக்கம்

# பதிப்பு விளக்கம்

தமிழில் தொண்ணூற்றாறு என்று கூறப்படும் சிற்றிலக்கிய வகைகளுள் ஊஞ்சல் இலக்கியமும் ஒன்று. பழம் இலக்கியங்கள் இந்த ஊஞ்சலைப் பொழுதுபோக்குத்தன்மையிலும், விளையாட்டு நிலையிலும் சுட்டி நிற்கின்றன. கலம்பகத்தில் பதினெட்டு உறுப்புகளுள் ஒன்றாகவும், பெண்பாற் பிள்ளைத் தமிழில் ஒரு பருவமாகவும் இவ்வூஞ்சல் இடம் பெற்றுள்ளது. இவை ஊஞ்சலைப் பெண்களுக்கு உரியதாகச் சுட்டி நிற்கின்றன. ஆனால் ஊஞ்சல் சிற்றிலக்கியங்கள் ஆண், பெண் இரு பாலருக்கும் பாடப்பட்டுள்ளன. இவ்வகை சிற்றிலக்கியம் கி.பி. 14 ஆம் நூற்றாண்டில் தோன்றியதாகத் தெரிகின்றது. தொடக்க காலத்தில் இறைத் தொடர்பாகவே இந்தச் சிற்றிலக்கியம் தோன்றியுள்ளது. பின்னர் காலப்போக்கில் மானிடர்களுக்கும் இந்த ஊஞ்சல் இலக்கியம் பாடப்பெற்றுள்ளது.

ஐம்பதுக்கும் மேல் ஊஞ்சல் சுவடிகள் காணப்படுகின்றன. அவற்றுள் பத்து ஊஞ்சல் மட்டுமே இங்குப் பதிப்பிற்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளது. சென்னை அரசினர் சுவடிகள் நூலகம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், கேரளப் பல்கலைக் கழகச் சுவடி நூலகம் திருவனந்தபுரம் ஆகிய இடங்களிலிருந்து இச்சுவடிகள் எடுத்துப் பதிப்பிக்கப் பெறுகின்றது.

### அரசினர்க் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம்—சென்னை

இந்த நூலகத்தின் சுவடிகள் நான்கு பதிப்பில் முதலில் வைக்கப்பட்டிருக்கின்றது. இந்தச் சுவடிகள், திருநெல்வேலி மாவட்டத்தைச்சேர்ந்த ஆழ்வார் திருநகரி **சுந்தரம்மா** என்பவரால்

1920—21 ஆம் ஆண்டில் நூலகத்திற்கு வழங்கப்பட்டிருக்கின்றது[1] இந்தச் சுவடி இன்னும் அழிவுபடாது, நல்லமுறையில் எழுத்துக்கள் தெளிவாகவும் உள்ளன. R 450 என்று எண்ணிடப்பட்ட இந்தச் சுவடியின் a, c, d, e, f என்ற பகுப்பின்கீழ் அடங்கிய ஐந்து சுவடி களும் நான்கு நூல்களாகக் கொண்டு பதிப்பிக்கப்படுகின்றது. இந்தச் சுவடி 29.8 செமீ. நீளமும், 3.8 செமீ அகலமும் கொண்ட தாக அமைகின்றது. பக்கத்திற்கு 12 வரிகள் முதல் 15 வரிகள் வரை அடங்கியிருக்கின்றன.

## ஆதிநாதர் ஊஞ்சல் சுவடி

சுவடியின் நீள அகல அளவு ஒற்றுமையினைக் கொண்டும், ஊஞ்சல் சிற்றிலக்கியங்களே எல்லாவற்றிலும் அமைந்திருப் பதைக் கொண்டும் இவற்றை ஒன்றாக இணைத்துக் கட்டி வைத் திருந்தனர் போலும். முதல் மூன்று ஓலைகளின் எழுத்து முறை நான்காவது ஓலையில் மாற்றம் பெற்றுக் காணப்படுகின்றது. இந்த ஊஞ்சல் முழுமை பெறாத ஒன்றாக அமைகின்றது. முதல் 27 பாடல்கள் முழுமையும் காணப்படுகின்றன. ஊஞ்சலின் இறுதியில் அமைகின்ற வாழ்த்துப் பாடலும் இதன்கண் காணப் படவில்லை.

> ''மருளிவாப் போய்நின்ற வேத சாரம்
> வடித்தெடுத்து திரட்டிமுது தமிழ்ப்பா மாலை
> தெளிவிலாத வன்போல''

என்ற பகுதியுடன் 28 ஆம் பாடல் முழுமையின்றி ஓலை குறை யாக முடிவுற்று விடுகிறது. இதற்குமேல் எத்தனைப் பாடல்கள் இருந்தன என்பதும் புலப்படவில்லை. இப்பாடல்கள் கொண்ட சுவடியை உடையவர் தெரிவிப்பின் பின் வரும் பதிப்பிற்குத் துணை புரியும். இதன்பின்னர் பாடல் எழுதப்பட்ட ஓலைகளைக் காணவில்லை. இந்த ஊஞ்சல் முதல் ஓலையின் முதல் பக்கத்தில் (Front Page) தொடங்கி மூன்றாம் ஓலையின் பின் பக்கத்தில் முடிவுறுகின்றது

அடித்தல் ஏதுமின்றி இச்சுவடி தெளிவாகக் காணப்படு கின்றது. இந்தச் சுவடியில் றகரத்தை ற என்று எழுதியுள்ளனர்.

1. A Oriental catalogue of **Tamil manuscripts** Government Oriental manuscripts library, Govt. of Madras 1930, p. 1213.

அது ரகரமா, றகரமா என்ற மயக்கத்தை தருவது இயல்பே. ஆனால் இடம் நோக்கி அவற்றை அணுகும்போது அவை வல்லின றகரம் என்பது புலப்படும். ஆனால் பின்வருவோர் படியெடுக்கையில் அதையும் இடையின ரகரமாகக் கருதி படியெடுத்து விடுகின்றனர்.

இந்த ஊஞ்சல் பாடல்கள் எண்சீர் விருத்தத்தாலானவை. அவற்றை முதல் நான்கு சீரை ஓரடியிலும், அடுத்த நான்கு சீரை மடக்கு அடியிலும் நாம் எழுதுகிறோம். அந்த வேறுபாடு உணர்வதற்காக நான்கு சீர்கள் முடிந்ததும் ஒரு புள்ளி வைக்கப் பட்டிருக்கின்றது.

கருங்குவளைக் காடுசெழுங் கமலம் பூத்த.
காட்சியென திருவுடம்பிற் கருணை பூத்து.

என்ற வரிகள் அதைத் தெளிவுறுத்தும். பாடல் முடிவில் தமிழ் எண் கொடுக்கப்பட்டு அதன் முன்னரும் பின்னரும் ஒரு சிறுகோடு இடப்பட்டிருக்கின்றது.

## சடகோபரூஞ்சல் சுவடி

இந்த நூல் இச்சுவடிக் கட்டின் ஐந்தாம் ஓலையின் முன்பகுதியில் தொடங்கி ஏழாம் ஓலையில் முடிவடைகின்றது. இதில் 23 பாடல்கள் காணப்படுகின்றன சில பாடல்களில் சீர்களும், அடிகளும் மிகுந்து காணப்படுகின்றன.

இச்சுவடியில் பாடல் முடிந்தவுடன் தமிழ் எண்ணிற்கு முன்னும் பின்னும் புள்ளிகள் இடப்பட்டிருக்கின்றன. இந்தச் சுவடியின் எழுத்துமுறை ஆதிநாதர் ஊஞ்சலை எழுதியவரே இதையும் எழுதினார் என்பதை உறுதிப்படுத்துகின்றது. பதினைந்து வரிகள் பக்கம் ஒன்றுக்குக்கொண்ட இந்தச் சுவடியின் ஏழாவது ஓலையில் ஆறு வரிகளுடனே இந்நூல் முடிவடைகின்றது. வாழ்த்துப் பாடல் இல்லை என்றாலும் இந்நூல் முழுமை பெறவில்லை என்று சொல்ல இயலவில்லை. ஏனெனில் நூல் முழுமை பெறாமல் இருக்குமாயின் ஓலையின் பாதியில் எழுதுவதை முடித்திருக்க வேண்டிய அவசியமில்லை.

## வைத்தமாநிதிப்பெருமாள் ஊஞ்சல் சுவடி

இந்தச் சுவடியானது 8 (அ) ஆம் எண்ணுள்ள ஓலையின் முதல் பக்கத்தில் தொடங்கி 9 ஆம் ஓலையின் பின்பகுதியில், அதாவது நான்கு பக்கத்தில் முடிவடைகின்றது. ஆனால் நான்

காம் பக்கத்தில் இரண்டரை வரிகளே காணப்படுகின்றன. அவையும் ஓலையின் தொடக்கத்தில் எழுதப்படாமல், பின்பகுதிக்குக் கீழே எழுதப்பட்டிருக்கின்றது. இதில் பதினோரு பாடல்கள் மட்டுமே காண்ப்படுகின்றன. காப்புப் பாடலை ஆசிரியர் கணக்கில் கொள்ளாது பத்துப் பாடல்களை நூலாகக் கொண்டு அமைத்துள்ளார் போலும்.

இதில் காணப்படுசின்ற எழுத்துகள் மிக வேகமாக ஏடெழுதுவோரால் எழுதப்பட்டமையின் தெளிவின்றி காணப்படுகின்றது. பாடலின் அடி நிலைகளைச் சுட்டும் குறியீடு எதுவும் சுவடியில் இடம்பெறவில்லை. பாடல் முடிவை குறிக்க —அ— என்ற நிலையில் குறியீடு பயன்படுத்தப்பட்டிருக்கின்றது.

இதன் அடுத்த ஓலையில் ஒரு பக்கத்தில் மட்டும் எழுதப்பட்டுப் பின்பக்கம் எழுதாமல் விடப்பட்டிருக்கின்றது. இதில் நான்கு பாடல்கள் மட்டுமே காணப்படுகின்றன. இதன் முன்கண்ட சுவடியைப் படியெடுத்தவரே இதையும் படியெடுத்துள்ளார். **'நாச்சியார் வைத்தமாநிதி வல்லியார் பேரிலூஞ்சற் கவிதை** என்று ஓலைக்குத் தலைப்பிடப்பட்டுள்ளது. நான்கு பாடல்கள் மட்டுமே காணப்படுவதாலும், கோளூரின் வைத்த மாநிதிப் பெருமாளின் வல்லியார் என்பதாலும் இந்தப் பாடல்களையும் இணைத்து, **கோளூர் வைத்த மாந்திப் பெருமாள் ஊஞ்சல்** என்ற நூலில் பதிப்பிக்கப் பெற்றுள்ளது.

## மதுரகவியாழ்வார் ஊஞ்சல் சுவடி

இந்தச் சுவடியில் எட்டுப்பாடல்களைக் கொண்ட ஒரு ஓலை மட்டுமே காணப்படுகின்றது; இலக்கியமும் முடிவு பெற வில்லை. அதற்கான பின்னோலை ஒன்றைக் காணவில்லை. இதன் எழுத்துக்களும் விரைவாக எழுதிச் சேர்க்கப்பட்டது போன்று தெளிவின்றி காணப்படுகின்றது. இதன் பாடல்களைச் செம்மை செய்ய வேறு சுவடிகள் எதுவும் கிடைக்கவில்லை.

சுவடிகளில் எழுதுவோரால் குறித்து வைக்கப்படுகின்ற குறிப்புகள் எதையும் அறியும் வண்ணம் இந்த ஓலையின் முன்பின் ஓலைகள் காணப்படவில்லை.

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனச் சுவடிகள்

இந்தப் பதிப்பில் கோயில் வெள்ளாற்றுச் சுவாமியம்மன் ஊஞ்சல், தருமபுரம் தேனமிர்த நாயகி ஊஞ்சல், திருக்கோவலூர்

பெரியநாயகியம்மன் ஊஞ்சல், ஆறுமுக தேசிகர் ஊஞ்சல் என்ற நான்கு சுவடிகளும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் சுவடிகள்.

சுவடிகளைச் சேகரித்துச் சிறந்தனவற்றை அச்சுருவாக்கம் செய்யும் பணியை நிறுவனம் ஏற்று நடத்தி வருகின்றது. அச் சேகரிப்பு வகையில் இந்தச் சுவடிகள் நான்கும், திருக்கோவலூர் ஆதினம் திருப்பாதிரிப்புலியூர் ஞானியர் மடாலயத்தினைச் சார்ந்தவை. 1980 ஆண்டு அந்த மடத்திலிருந்து நிறுவனம் நன்கொடையாகப் பெற்று பாதுகாத்து வருகின்றது. அந்தத் தொகுப்பில் 86 முழு நூல்களும், 100க்கு மேல் (பல நூல்கள் இன்னதென அறியாதவை) குறை நூல்களும் உள்ளன. அவற்றுள் ஒரு சிறு கட்டு இந்த ஊஞ்சல் சுவடியாகும்.

இதில் காணப்படுகின்ற நான்கு சுவடிகளும் ஒன்றாக ஒரே அளவினதாய் நறுக்கிக் கட்டப்பட்டிருக்கின்றது. நான்கு சுவடி களும் ஒருவரால் எழுதப்படவில்லை. அதன் கையெழுத்து முறை, எழுத்தமைப்பு முறை போன்றவற்றாலும், ஓலையின் தன்மையினாலும் இவை தம்முள் மாறுபட்டுக் கிடக்கின்றன.

ஆசிரியர் தன்னிடம் பாடம் கேட்கும் மாணவர்களிடம் அந்த நூலைப் படியெடுக்கச் செய்து அவற்றை ஒன்றாக்கித் தனது பயன்பாட்டிற்காகப் பாதுகாத்து வைத்திருப்பர். ஆனால் இந்தச் சுவடிக்கட்டை நாம் அந்த வகையிலும் கொள்ளமுடிய வில்லை. ஏனெனில் ஓலையின் தன்மைகொண்டு காலத்தைக் கணக்கிட அவை சிறு கால இடைவெளிக்குள் முன்னும் பின்னும் எழுதப்பட்டிருக்கின்றது. சுவடிகளைச் சேர்த்து வைத்தவர் அவற்றின் அளவு நோக்கி ஒன்றாக இணைத்துக் கட்டியிருப்பதாகத் தோன்றுகின்றது. ஆனால் இந்தச் சுவடி களுள் மூன்றை மடாலயத்தினர்தான் படியெடுத்தனர்; இவற்றை ஒருவரே படியெடுத்துள்ளார். ஒவ்வொரு சுவடியிலும் அதைக் குறிக்கும் வண்ணம் **சிவசண்முக மெஞ்ஞான தேசிகன் திருவடி வாழ்க** என்ற தொடர் காணப்படுகின்றது. **தருமபுரம் தேனமிர்தநாயகி ஊஞ்சலில்** அவ்வகைக் குறிப்புக் காணப்படாத தால் அது இந்த மடாலயத்திற்கு பின்னர் வந்து சேர்ந்த சுவடி யாகத் தோன்றுகின்றது. அதன் தன்மையும் இந்தச் சுவடிகளின் காலத்திற்குச் சற்று முந்தையது போன்று சிதைவுளுடன் காணப் படுகின்றது.

## கோயில் வெள்ளாற்றுச் சுவாமிஅம்மன் ஊஞ்சல் சுவடி

இந்தச் சுவடி 23 செமீ. நீளம், 3 செமீ. அகலம் உடையதாக இருக்கின்றது. இந்தச் சுவடியில் தொடக்கத்திற்கு முன்னர் **சிவசண்முக மெஞ்ஞான தேசிகன் திருவடி வாழ்க** என்று குறிப்பிடப்பட்டு அடுத்து சுவடியிலுள்ள நூலின் தலைப்புக் கொடுக்கப்படுகின்றது. இதில் பக்கத்திற்கு ஆறு வரிகள் வீதம் காணப்படுகின்றன. இரண்டு பக்கமும் எழுதப்பட்ட மூன்று ஓலைகளும், ஒரு பக்கத்தில் மட்டும் ஐந்து வரிகள் மட்டுமே எழுதப்பட்டுள்ள ஒரு ஓலையும் (3 + 1 = 4) காணப்படுகின்றன. எழுத்துக்கள் மிகவும் தெளிவாகவும் அழகாகவும் காணப்படுகின்றன.

இதில் குறில் நெடிலுக்கு வேறுபாடின்றி எல்லாச் சுவடிகளைப் போன்று (குறிலாகவே) எழுதப்பட்டிருக்கிறது. ஆனால்

றீங்காரம்
கீதம்

என்று நெடிலாகவும் எழுதப்பட்டுள்ளது. இந்தச் சுவடியைப் பொறுத்தவரை 'ெ' 'ே' என்ற இந்த இரண்டு கொம்புகள் மட்டும் வேறுபாடின்றி 'ெ' என்று ஒற்றைக் கொம்பாகவே எழுதப்பட்டுள்ளது. இதனாலும் இவை பிற்காலச் சுவடிகள் என்பது உறுதிப் படுகின்றது.

பாடல் முடிவில் சுவடிகளின் முறைப்படி தமிழ் எண்கள் இடப்பட்டிருக்கின்றது. அதற்கு முன்னும் பின்னும் நாம் கணிதத்தில் பயன்படுத்துகின்ற சமக்குறி (is equal to) போன்று போடப்பட்டுள்ளது. அதாவது பாடல் ஒன்றுக்கு = க = என்பது போன்று அதன் குறியிடும் முறை அமைந்துள்ளது. ஒவ்வொரு ஓலையின் தொடக்கப் பக்கத்திலும் (Front page) **சிவம்** என்று எழுதப்பட்டுள்ளது. இறுதிப்பாடல் (வாழி) முடிந்ததும் = = யக = என்று முடிவுநிலைச் சுட்டும் குறியீட்டையும் காண்கிறோம்.

இந்தச் சுவடியின் இறுதியில் ஒரு குறிப்புக் காணப்படுகின்றது.

> "தெட்சிணமல்லிகாற்சுணம் என்று புராணம் சொல்லுகின்ற கோயில் வெள்ளாறெனகின்ற தலத்து சுவாமி அம்மன் பெயரில் திருவூசல் தோத்திரம். பரசிவாற்பண மஸ்து சிவசண்முக மெஞ்ஞான தேசிகன் திருவடி வாழ்க"

என்பதே அக்குறிப்பு. ஸ்ரீசயிலத்திற்கு மல்லிகாற்சுணம் என்பது பெயர்; கர்நூல் மாவட்டத்தில் இருக்கின்ற ஸ்ரீசயிலம் போன்று தெற்கே அமைந்திருக்கும் கோயில் வெள்ளாறும் சிறந்த திருத்தலமாதலால் அதை ஒப்பு நோக்கி இதை தெட்சிணமல்லிகார்ச்சுணம் என்று அழைத்திருக்கின்றனர்.

## தருமபுரம் தேனமிர்த நாயகி ஊஞ்சல் சுவடி

இது 22. 1 செ. மீ. நீளமும் 2. 5 செ. மீ. அகலமும் உடையதாகத் தோன்றுகின்றது இதில் 'ஹரி ஓம் நன்றாகக் குருவாழ்க குருவே துணை' என்ற முன்குறிப்புடன் காணப்படுகின்றது. இந்தச் சுவடிக்குத் தலைப்புகொடுக்கப் படவில்லை.

'சீர்புகழும் தருமபுரம் சிறந்து வாழும்
தேனமிர்த நாயகிபொன் னூஞ்சல் பாட,

என்ற தொடக்கப் பாடலின் தொடக்க வரிகளைக் கொண்டே இப்பெயர் அறிய வந்தது.

இது இருபுறமும் எழுதப்பட்ட ஐந்து ஓலைகளைக் கொண்டுள்ளது. பக்கத்திற்கு ஐந்து முதல் ஆறு வரிகளே எழுதப் பட்டுள்ளன. ஓலை பண்படுத்துவதில் செம்மையுறாமல்—முழுமை பெறாமல் இருக்கின்றது. ஓலை மிகவும் இளம் ஓலையாகத் தெரிகின்றது. அதனால் எழுத்துக்கள் அதிகமாக அழுத்தி எழுதப் படாமல் மேலோட்டமாகவே எழுதப் பட்டுள்ளன. எழுத்துக்கு எழுத்தும், வரிக்கு வரியும் அதிகமாக இடம்விட்டு எழுதப் பட்டிருக்கின்றது. அதனால் எழுத்துகள் மிகத்தெளிவாக விளங்குகின்றன.

குறில் நெடில் வேறுபாடுணறுமாறு எழுதப்பட்டுள்ளது. ஒருபாடல் முடிந்ததும் உ என்ற முறையில் பிள்ளையார் சுழியினை இட்டு அந்தப் பாடலைத் தமிழ் எண்ணில் குறித்துள்ளனர். அத்துடன் பாடலின் ஒவ்வொரு அடி முடிவிலும் '—' என்றபடி கோடிடப் பட்டிருக்கின்றது. த்து, ப்பு, க்கு என்பன இணைக்கப் பட்டுக் கூட்டெழுத்து முறையில் எழுதப்பட்டுள்ளது. இவற்றைத் தவிர வேறு குறிப்புகள் எதுவும் இச்சுவடியில் காணப்படவில்லை.

## திருக்கோவலூர் பெரிய நாயகியம்மன் ஊஞ்சல்:

கோயில் வெள்ளாற்றுச் சுவாமி அம்மனின் ஊஞ்சலை எழுதியவரே இதையும் எழுதியுள்ளார். அளவிலும் (23 செமீ நீளம், 3 செமீ அகலம்) ஒத்துக் காணப்படுகின்றது. இதில் மிகச் சிறு எழுத்துக்களால் எழுதப்பட்டு பக்கத்திற்கு ஒன்பது வரிகள் காணப்படுகின்றன. இதிலும் ஓலையின் தொடக்கப் பக்கத்தில் **'சிவ'** என்று எழுதப்பட்டிருக்கிறது. விடுபடுகின்ற எழுத்துக்கள் அந்த எழுத்துக்குக் கீழேயே எழுதப்பட்டிருக்கின்றன. பாடல் முடிவில் முன்னர் கண்டதுபோன்றே = என்ற நிலையில் சமக்குறி இடப்பட்டிருக்கின்றது.

ஐந்தே பக்கங்களில் நூலை முடித்துள்ள ஓலை முடிவில்,

**திருச்சிற்றம்பலம் = சிவசண்முக மெஞ்ஞான தேசிகன் திருவடி வாழ்க—சிவம்** என்று மரபுப்படி குறிப்புக் காணப்படுகின்றது. இதில் முன்னர் கண்டது போன்று குறில் நெடில் வேறுபாடு உணர்த்தும் வண்ணமும், ஒற்றை இரட்டைக் கொம்புகள் வரும் போது 'ெ' மட்டுமே இட்டு இடம் நோக்கி உணரவிட்டுவிட்டனர்.

## ஆறுமுக தேசிகர் ஊஞ்சல் சுவடி

23. 1 செமீ நீளமும், 3 செமீ அகலமும் கொண்டதாக இச் சுவடி காணப்படுகின்றது. மூன்று ஓலைகளில் பக்கத்திற்கு ஒன்பது வரிகள் வீதம் காணப்படுகின்றன. முன்னும் பின்னும் நாம் கண்ட சிவசண்முக தேசிகரை வாழ்த்தும் நிலை இங்கும் காணப்படுகின்றது. பாடல் முடிவைக் குறிக்கின்ற சமக்குறிகள் இங்கும் காணப்படுகின்றன. இதில் வடமொழிக் கூட்டெழுத்து கிரந்த எழுத்து அமைப்பில் அமைக்கப் பெற்றுளது.

சுவடியின் இறுதியில் காணப்படுகின்ற குறிப்பில் வரும் சிவாற்பணமஸ்து என்பதைச் சான்றுக்குக் காட்டலாம். சிவாற்பணமஸ்து என்பது.

சிவாற்பணமஸ

து

என்று எழுதப்பட்டிருக்கின்றது. இந்தச் சுவடிகளில் காணப்படு கின்ற எழுத்தமைப்பு, பாடல் முடிவுக் குறியீடுகள் போன்றவை முன்னர் கண்ட இரண்டு சுவடிகளோடு மிகவும் ஒத்துச் செல்கின்றது.

## அரசினர்க் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம் —திருவனந்தபுரம்

திருவனந்தபுரம் அரசினர்க் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்தில் ஏழு ஊஞ்சல் இலக்கியச் சுவடிகள் காணப்படுகின்றன. அந்த ஏழுச் சுவடிகளுள் இரண்டு சுவடிகள் மட்டுமே இங்குப் பதிப்பிற்கு எடுத்துக் கொள்ளப் பட்டுள்ளது.

## வள்ளி தெய்வானை ஊஞ்சல் சுவடி

'ஊஞ்சல் பாட்டுகள்' என்று தலைப்பிடப்பட்டுள்ள சுவடியில் இது முதலாவதாகக் காணப்படுகின்றது. இந்தச் சுவடியின் எண் 9316 (a) என்பது. இது முன்னர் அட்டவணை அமைத்தோர் பாகுபாட்டிற்குத் தந்த எண்ணாகும். இதில் ஏழு பாடல்கள் மட்டுமே காணப்படுகின்றன. அதைத் தொடர்ந்து அடுத்தநூல் தொடங்கி விடுகின்றது. எனவே இது முடிவுபெறாத நிலை பெற்றிருந்தாலும் அதைப்பற்றிய குறிப்பேதும் சுவடியில் காணப் படவில்லை. மேலும் ஊஞ்சலின் இறுதியில் அமையும் 'வாழி' பாடல் இதில் இடம் பெறவில்லை. இந்தச் சுவடி பற்றிய மற்றைய குறிப்புகள் ஏதும் கிடைக்கவில்லை.

## திருமண ஊஞ்சல்

9316(a) என்ற எண்ணுள்ள சுவடியில் காணப்படும் இரண்டாவது நூல் இது. இந்த ஊஞ்சல் சுவடியில் மொத்தம் 12 பாடல்கள் காணப்படுகின்றன. இவை இரண்டு சுவடிகளும் (திருமண ஊஞ்சலும், வள்ளி தெய்வானை ஊஞ்சலும்) 28.3செ.மீ. நீளமும் 4.7 செ. மீ. அகலமும் உடையதாகக் காணப்படுகின்றது. ஓலை சிதைவின்றி நல்லநிலையிலேயே காணப்படுகின்றது. இதில் பக்கத்திற்குப் பன்னிரெண்டு வரிகள் வீதம் எழுதப்பட்டுள்ளன. இது கி. பி. 1852 ஆம் ஆண்டு சித்திரை மாதம் 22 ஆம் தேதி திங்கட்கிழமையன்று எழுதப்பட்டதாகக் குறிப்பு காணப்படுகின்றது.

'கலியாண ஊஞ்சல் ஏடு நன்றாக'—என்று தொடங்கும் இந்த ஊஞ்சல் **திருமலை யாதிப, குமர குருபரன் துணை நன்றாக** என்று போற்றிப் பரவி நூலைத் தொடங்குகின்றது. திருமலை யாதிபன், குமர குருபரனாகிய முருகன் இங்குப் போற்றப்படுகிறு.

றான். இங்குத் திருமலை என்பது திருப்பதி என்ற மயக்கத்தையும் தோற்றுவிக்கும். ஆனால், இது அதுவன்று; குற்றாலத்திற்கு அருகே உள்ள 'திருமலை' என்னும் முருகன் ஆலயமாகும். எனவே இந்த ஊஞ்சல் திருநெல்வேலி மாவட்டம் குளத்தூரில் நடை பெற்ற மணங்களை வாழ்த்தப் பாடியதாகவும், அவ்வாறு பாடும் போது இதைப்பாடிய புலவன் தனது வழிபடு கடவுளை வேண்டு தல் செய்ததாகவும் நாம் கொள்ள முடியும். இதில் காணப்படு கின்ற எழுத்துமாற்ற முறைகளும் இச்சுவடி தோன்றிய—எழுதப் பட்ட பகுதியைச் சுட்டுவதாக அமைகின்றது.

### ஏடுகள்—பெயரமைப்பு

ஏடுகளின் பதிப்புமுறையில் ஒழுங்கு கருதி சுவடியில் இருக் கின்ற பெயர்களை எல்லாம் ஒரு நிலைப் படுத்தி அவற்றின் பெயர்கள் திருத்தம் செய்யப்பட்டுள்ளன.

'ஆதிநாதர் ஊஞ்சல் கவிதை' என்று இருந்தப் பெயர் **ஆழ்வார் திருநகரி ஆதிநாதர் ஊஞ்சல்** என்றமைக்கப் பட்டிருக் கின்றது. கோளூரில் அமைந்திருக்கும் இறைவன் திருமால் மீது பாடப் பட்டிருக்கின்ற ஊஞ்சல், **கோளூர் வைத்த மாநிதிப் பெருமாள் ஊஞ்சல்** எனப் பெயர் பெற்றது.

திருமால் மீது பாடப்பட்ட இவ்விரண்டு ஊஞ்சல் இலக்கியங் களுக்கும் அடுத்து சீரிய வைணவத் தொண்டர் நம்மாழ் வாரைப் போற்றிப் புகழ்கின்ற ஊஞ்சல் **சடகோபர் ஊஞ்சல்,** என்றமைந்துள்ளது. அதற்கடுத்த நிலையில் திருமாலின் அடியார்க்கு அடியாரான மதுரகவி ஊஞ்சல் **மதுரகவி ஆழ்வார் ஊஞ்சல்** என்ற நிலையில் அமைக்கப் பட்டுள்ளது. இந்த நான்கு சுவடிகளும் சென்னை அரசினர்க் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்தி னின்றும் எடுக்கப்பட்டது.

அடுத்த நிலையில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தைச் சேர்ந்த நான்கு சுவடிகள் இடம் பெறுகின்றன. இவற்றில் மூன்று நூல்கள் சைவ சமய இறைவியரைப் பற்றியதாக அமைகின்றது. ஒன்று மட்டும் மடத்தின் தலைவர் ஆறுமுக தேசிகர் மீது பாடப் பட்டுள்ளது. 'தருமபுரம் தேனமிர்த நாயகி பொன்னூஞ்சல்' என்பதில் பொன்னை நீக்கியும், கோயில் வெள்ளாற்றுச் சுவாமி யம்மன் பேரில் திருவூஞ்சல் என்பதினின்றும் பேரில், திரு என்பன

வற்றை நீக்கியும், திருக்கோவலூர் பெரிய நாயகி அம்மன் பேரில் திருவூஞ்சல் என்பதிலும், 'பேரில்' 'திரு' என்பனவற்றை நீக்சியும் முறையே, அவற்றின் பெயர்கள் **'தருமபுரம் தேனமிர்த நாயகி ஊஞ்சல், கோயில் வெள்ளாற்று சுவாமி அம்மன் ஊஞ்சல், திருக்கோவலூர் பெரிய நாயகி அம்மன் ஊஞ்சல்'** என்று அமைக்கப் பட்டுள்ளன. 'திருவூசல்' என்று ஏட்டில் குறிக்கப்பட்டிருக்கின்ற ஊஞ்சல் ஆறுமுக தேசிகர் திருஊசல் என்பதால் அதற்கு **ஆறுமுக தேசிகர் ஊஞ்சல்** என்று பெயராகின்றது.

இதற்கடுத்த நிலையில் இடம் பெறுகின்ற 'வள்ளி தெய்வாணை பேரில் ஊஞ்சல் பாட்டு' என்பது **வள்ளி தெய்வாணை ஊஞ்சல்** என்று மட்டுமே அமைகின்றது. கலியாண ஊஞ்சல் என்ற பெயர் கொண்ட ஊஞ்சல் **திருமண ஊஞ்சல்** என்று மாற்றம் பெறுகின்றது.

## வைப்புமுறை

பதிப்பிக்க எடுத்துக்கொண்ட இந்தப் பத்துச் சுவடிகளை இம்முறைப் படுத்தி வைத்ததும் காரணம் கருதியே. இறைவனுக்குப் பாடப்படும் ஊஞ்சல் திருமாலுக்கு மட்டும் அமைகின்றது. சிவனுக்கோ, முருகனுக்கோ அமையவில்லை. எனவே முப்பெருங் கடவுளருள் காத்தற்கடவுளாம் திருமாலுக்கு அமைந்த ஆழ்வார் திருநகரி ஆதிநாதர் ஊஞ்சலும், கோளூர் வைத்தமாநிதிப் பெருமாள் ஊஞ்சலும் முதற்கண் வைக்கப்பட்டன. ஆண்டவன் இலக்கியங்கள் முதற்கண் அமைக்கப்பட்டமையின் வைணவ அடியார் இலக்கியமான' 'சடகோபர் ஊஞ்சல்' அடுத்து வைக்கப் பட்டது. நம்மாழ்வாரின் தொண்டரான மதுரகவியாழ்வார் ஊஞ்சல் வைணவ ஊஞ்சல் இலக்கியத்தின் இறுதி நிலையைப் பெறுகின்றது.

அடுத்த நிலையில் இறைவனின் நாயகியர் வீரசைவ மரபுப் படி போற்றப்படுகின்ற ஊஞ்சல் இடம் பெறுகின்றது. இங்கு பார்வதி, தேனமிர்தநாயகி, பெரிய நாயகி என்ற மூவருரையும் தனித்தனியே புகழ்ந்துரைக்கும் இலக்கியங்கள் அடுத்து இடம் பெறுகின்றன. இவை வீரசைவ மரபினவாதலின், திருக்கோலூர் வீரசைவ மடத்தின் முதல் குருமூர்த்திகளான ஆறுமுக தேசிகர் மீது பாடப்பட்ட ஊஞ்சல் அடுத்த இடத்தினைப் பெறுகின்றது.

வள்ளி தெய்வாணை ஊஞ்சல் அதன் பின்னர் இடம் பெறுகின்றது. இறைநிலையில் இறுதியில் இந்த இலக்கியம் வைக்கப்படுகின்றது. இருவர் மீது இணையப் பாடப்படுதலின் இது இறுதி நிலையில் வைக்கப்பட்டது. சைவ சமய நூல் இது ஒன்று மட்டுமே. இறைநிலையின்றி மக்கள் நிலையில் அமைந்ததால் 'திருமண ஊஞ்சல்' ஊஞ்சல் பட்டியலின் இறுதி இடத்தைப் பிடிக்கின்றது.

## சுவடியும் ஒப்பீடும்

சுவடிகள் பதிப்பிக்கும் பணிக்கு ஒரு நூலின் பல சுவடிகளின் ஒப்பீடு அவசியமாகின்றது. அப்படி ஒப்பிடுவதற்கான சுவடிகள் இல்லாதபோது அந்த நூலைப் பதிப்பிப்பது இடப்பாடு தருவதாக அமைகின்றது என்று பழம் பதிப்பாளர்கள் கருதுகின்றனர்.[2] ஆனால் அப்படி ஒப்பிடுவதற்கான சுவடிகள் கிடைப்பது மிக மிக அருமையாகின்றது. சிறந்த இலக்கணங்கள், இலக்கியங்கள் போன்றவற்றிற்கு வேண்டுமானால் சில சுவடிகள் கிடைத்திருக்கலாம். ஆனாலும் அவை இப்போது இருப்பது அரிது. அவை காலவெள்ளத்தால் காக்க முடியுமால் தாமே அழிந்திருக்கும். இன்றைய நிலையில் பதிப்பிற்கு எடுத்துக் கொள்கின்ற சுவடிக்கு ஒரு பிரதி சரியானதாகக் கிடைப்பதே அரிதாக இருக்கின்றது.

அவ்வகையில் ஒப்பிடுவதற்கான சுவடி ஒன்று மட்டுமே கிடைத்தது. **திருக்கோவலூர் பெரியநாயகி அம்மன் பேரில் திருவூஞ்சல்** என்ற ஒரு சுவடியும் நிறுவனத்தில் இருக்கின்றது. இவை இரண்டும் ஒரு நூலின் இருவேறு படிகள். இவ்விரண்டையும் ஒப்பிடுகையில் சிற்சில பாட வேறுபாடுகள் அன்றி, சில பாடல்கள் முன் பின் மாற்றம் பெற்றிருந்ததைத் திருத்தம் செய்ய முடிந்தது. சொற்களின் பொருள், தெளிவில்லாத இடம், சிதைந்த பகுதிகள் இவற்றைச் செம்மை செய்ய இச்சுவடி ஒப்பீடு துணைபுரிந்தது.

---

2 மு. சண்முகம் பிள்ளை, (பதி) திருவேங்கட நாதன் வண்டு விடு தூது, முன்னுரை.

இது மட்டுமன்றி ஓலையிலிருந்து படியெடுக்கப்பட்ட தாளை ஒப்பிடுகின்ற நிலையும் இதன்பாற்பாடும். இந்த ஒப்பீடு முன்னைய ஒப்பீடு போன்று இல்லாது சில நேரங்களில் மட்டுமே துணைபுரியும். அந்தப் படியெடுத்த பின்னர் சுவடிகள் இராமபானம் போன்றவற்றால் உழப்பட்டு சிதைவு பெற்றிருக்கின்ற போது அங்கு என்ன பாடம், என்ன சொல் இருந்தது என்று ஊகம் செய்யாமல், அதை தாளில் கண்டு உண்மை பாடத்தினை உறுதி செய்து கொள்ளமுடியும். ஆனாலும், படியெடுக்கப் பட்ட எல்லாம் சரியானவை என்றோ சிறந்தவை என்றோ கொள்ளலாகாது. வேறு சுவடிகள் இல்லாத போது இவையும் துணைபுரியும். சென்னை அரசினர்க் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்தில் உள்ள ஆழ்வார் திருநகரி ஆதிநாதர் ஊஞ்சல், கோளூர் வைத்த மாநிதிப் பெருமாள் ஊஞ்சல், சடகோபர் ஊஞ்சல் ஆகிய மூன்று சுவடிகளுக்கும் படிகள் கிடைத்தன. அவற்றின் உதவியால் நூலுள் சில திருத்தங்களைச் செய்ய முடிந்தது. அந்தப்படிகள் எழுதிய பின்னர் அங்குள்ள மற்றொருவரைக் கொண்டு சுவடியையும் தாளையும் ஒப்பிட்டு இருவரும் கையொப்பம் இட்டு அந்தப் படியை உறுதி படுத்து கின்றனர். சில போழ்து ஒப்பிட்டதாகக் கையெப்பம் மட்டும் இடப்பெற்று விடுவதும் உண்டு.

## பதிப்புச் சீர்மை

அசை, சீர், அடி என்ற வேறுபாடுகள் இல்லாமல் தொடர்ந்து சங்கிலி போன்று எழுதப் பட்டிருக்கின்ற ஓலைகளிலிருந்து அவற்றைப் பிரித்து, பகுத்துணர்ந்து யாப்பு ஒழுங்குமுறை களால் செப்பம் செம்யப்பட்டிருகின்றது. அப்பாடல்கள் எல்லாம் எண்சீர் விருத்தத்தில் அமைந்திருக்கின்றன. அவற்றின் யாப்பமைவு உணர்ந்து அவை காய், காய், மா, மா —காய், காய், மா, மா என்ற அமைப்பு நிலையில் சீர் பிரித்துச் செம்மை செய்யப்பட்டிருக்கின்றது. அவற்றுள் காய்ச் சீருக்குப் பதில் ஒரோ வழி விளச்சீரும் இடம்பெறக் காண்கிறோம்.

விருத்தத்தின் முறைப்படி பாடல்கள் இயற்றப் பட்டிருந் தாலும், சில பாடல்கள் குறையாகவும், சில பாடல்கள் மிகுதி யாகவும் அடிகளைக் கொண்டு அமைந்திருக்கின்றன. அதைப் படைத்த புலவரால் குறைவாக வரிகள் விடப் பட்டிருக்க முடியாது. பின் வருவார் கற்றல்—கற்பித்தில்—எழுதுதல்—

எழுதுவித்தல் போன்றவற்றால் இப்பிழைகள் நேர்ந்திருக்க லாம்.

ஆறுமுக தேசிகர் ஊஞ்சல் பாடலில், (பா, 2)

'அருள்மேனி சாத்திவரும் கோவ லூர் வாழ்.
ஆறுமுக தேசிகனே ஆடீர் ஊஞ்சல்'

என்றஅடி மிகுதியாகக் (ஐந்தாவது அடியாகக்) காணப்படு கின்றது. ஆனால் அந்த அடி ஊஞ்சலமைப்பில் பாடலிறுதியில் அமைய வேண்டிய ஒன்றாகும். எனவே இப்பாடலின் இடையில் இருக்கின்ற ஏதோ ஒரு அடி அதிகமாக எழுதிச் சேர்க்கப் பட்டிருக்கின்றது போலும்.

தருமபுரம் தேனமிர்த நாயகி ஊஞ்சலில், ஊஞ்சலில் இறுதி யாக அமையும் வாழ்த்துப் பாடல் இரண்டு அடிகளுடன் மட்டுமே காணப்படுகின்றது.

உருவளரும் ஊரவர்பல் லுயிரும் வாழி
உரைவாண ரடிவணங்கி உரைத்த விந்தப்
பொருளுதனைப் பிழைபொறுப்போர் பெருமை வாழி
பேசுமிவை துதிப்பர்மிக வாழி தாமே

இப்படி மேலும் சில பாடல்கள் அடியளவில் மிகுந்தும், குறைந்தும் காணப்படுகின்றன.

சிலவற்றில் அடியின் சில பகுதிகள் மட்டும் எழுதப் படாமல் விடப்பட்டிருக்கின்றது. இவை, படியெடுத்தோர் முன் சுவடியில் இல்லாத பகுதியை நிரப்பாது விட்ட இடங்களாகவும் அமைகின் றன. பெரும்பாலான எழுதுநர்கள் அவற்றை நிரப்பியே எழுது கின்றனர். அப்படிச் சிதைதந்த சில இடங்களில் இன்னதாக இருக்கும் என்று ஊகித்து நிரப்பப் பெற்றுள்ளது. அவை ( ) இக்குறியிட்டுக் காட்டப்படுகின்றன. சிதைந்து, நிரப்பப்படாமல் —நிரப்பமுடியாமல் சில இடங்கள் அவ்வாறே விடப்பட்டிருக் கின்றன. அப்படி விடப்பட்டிருக்கும் போது ......... என்று புள்ளி கள் இடப்பட்டிருக்கின்றன.

பதிப்பிக்கும் போது பாடல்களில் சில சிக்கல்கள் நேர்ந்தன. அவை திருத்தப்பட்ட நிலை, முறை போன்றன எல்லாவற்றை யும் சுட்டிக் காட்டவில்லை. குறிப்பிடத்தக்க மாற்றங்களை மட்டும் இங்குச் சுட்டிச் செல்வது நலம் பயக்கும்.

## ரகர—றகரப் பயன்பாடு

ஓலைச் சுவடிகளில் ரகரம் றகரம் இரண்டும் பயன்படுத்தப் படுகின்றன. அவற்றுள் வல்லின றகரமே மிகுதியும் பயன்பாட்டைப் பெறுகின்றது. சுவடிகளில் ர கரம் பயன்படுத்த வேண்டிய இடங்களில்கூட றகரம் பயன்படுத்தப்பட்டிருப்பதை அறிகின்றோம் இன்றைய நிலையினைப் போன்று எழுதுபொருளும். எழுதப்படுபொருளும் அவ்வளவு எளிதாகக் கிடைக்கவில்லை. எழுதப்பயன்படும் சுவடிகளைத் தயாரிப்பதின் கடினம் கருதி இவர்களும் எழுதும் முறையிலும் சில நெறிமுறைகளைக் கொண்டிருந்தனர்.

ரகரம் பயன்படுத்த வேண்டிய இடங்களில் றகரம் பயன் படுத்துவதையும் அவ்வகையில் கொள்ளலாம். ஏனெனில் முடிந்த வரை எழுத்துக்களைக் குறைத்து எழுதுவதும் அவர்கள் கொண்ட போக்காகத் தென்படுகிறது. ரகரம் பயன்படுத்தப்படும்போது ஈறொற்று நிலையில், ஒற்றுகளைப் பயன்படுத்த வேண்டி இருக்கின்றது. ஆனால் வல்லினத்திற்கு அடுத்து மற்றொரு ஒற்று அமையாது. எனவே அவ்வகையில் பழஞ்சுவடிகள் ரகரத்திற்குப் பதிலாக றகத்தைப் பயன்படுத்தினாலும், அதனருகிலும் ஒரு ஒற்றை அமைக்கின்ற தன்மையைக் காண்கின்றோம்.

கோர்த்து — கோற்த்து
சேர்த்து — சேற்த்து
மார்க்கம் — மாற்க்கம்[3]

என்பன அவற்றை விளக்கவல்ல சில சான்றுகளாகும். இவை பெரிதும் பிற்காலச் சுவடி எழுதுவோரால் செய்யப்பட்ட மாற்றமாகத் தெரிகின்றது.

இப்படி ரகர, றகர ஒற்றுகளைக் கொண்டுப் படைக்கப் படுகின்ற சொற்களில் மட்டுமன்றி வேறு சில இடங்களிலும் ரகரத்திற்குப் பதில் றகரத்தைப் பயன்படுத்துவதைச் சில சுவடிகளில் காண்கிறோம். பின்வரும் சொற்கள் அதற்குச் சான்று பகரும்.

---

3. வள்ளி தெய்வானை ஊஞ்சல், பா. 1

நாரியர் — நாரியற்
நாராயனேந்திரன் — நாறாயனேந்திரன்[4]

இவ்வமைப்பு முறையை நாம் எல்லாச் சுவடிகளிலும் காண்ப தரிது. இவை சுவடி எழுதுவோரால் உண்டாக்கப்படுவன; எனவே அவை எழுதுவோருக்குத் தகக மாறுபட்டமையும்

நாம் இங்குக் கவனிக்கத்தக்கது மற்றொன்று உண்டு. எழுத் தமைப்பு முறையில் இடையின ரகரம் சுவடியில் 'ா' என்று கால் போன்றே எழுதப்படும். வல்லின ரகரம் அங்கு ர என்று எழுதப் படுகின்றது[5]. இந்த எழுதமைப்பு முறையில் தெளிவில்லாத வர்கள் சுவடி எழுதும் பணியில் ஈடுபடும்போது மேற்கண்ட றகறத்திற்கானப் எழுத்தை ரகறமாகக் கொண்டு படியெடுத்து விடுகின்றனர். அவ்வகையிலும் இந்தப் பிழை ஏற்பட வாய்ப் பிருக்கின்றது. றகரத்தை நாம் கண்ட குறியீடு போன்று எழுது வதைப் பிற்காலச் சுவடிகளில் காணமுடியவில்லை. பதிப்பிற்கு எடுத்துக்கொண்ட சுவடிகளில், சென்னை அரசினர்க் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்தில் இருந்து எடுக்கப்பட்ட சுவடியில் இவ் வமைப்புமுறை காணப்படுகின்றது.[6] இதனால் நாம் திருவனந்த புரம் சுவடிகள் நூலகம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனச் சுவடிகள் இவற்றில் காணப்படுகின்ற ஊஞ்சல் சுவடிகளின்றும் சென்னை நூலகச் சுவடிகள் காலத்தால் முற்பட்டவை என்பதை அறிகின்றோம்.

இந்த ரகர, றகரங்களை மாற்றி எழுதுவது சில நேரங்களில் பெருஞ்சிக்கலையே உண்டாக்கி விடுகின்றது.

உரையிலா மோனமென்றைக் கருள்வை என்னா
ஒருபதுநாள் அருளுவதென் றோதெண்ணாராய்
உரைதிங்கள் தனிலுணர்ந்து கோமென் றாசாற்கு
உணர்த்துபெரி யாம்பிகையே ஆடீர் ஊஞ்சல்

என்ற பாடலில்[7] ஒருபது எனத் தொடங்கும் மடக்கடியின் ஈற்று சீரில் உள்ள **ரகரம்** கவனிக்கத்தக்கது.

---

4. திருமண ஊஞ்சல் பா. 4.
5. ஆழ்வார் திருநகரி ஆதிநாதர் ஊஞ்சல்; (பெரும்பாலான பாக்கள்)
6. பதிப்பில் அடங்கிய முதல் நான்கு சுவடிகள், சுவடி எண் R 460 a, b, d, & e (ஒரு சுவடியில் நான்கு ஊஞ்சல் இலக்கியங்கள் உள்ளன)
7. திருக்கோவலூர் பெரிய நாயகியம்மன் ஊஞ்சல், பா. 4.

திருக்கோவலூர் ஆதினத்தின் முதல் குருமூர்த்திகளான ஆறுமுகதேசிகர் ஆராத்தியர் வழியாகக் காரண பஞ்சாக்கர மந்திரத்தை உபதேசம் பெற்றார். ஆறுமுகதேசிகர் ஆராத்திய ராக வந்த இறைவனிடம் அதற்கடுத்த நிலையினதான **மகாகாரண பஞ்சாக்கரம்** எப்போது கிடைக்கும் என்று இறைஞ்சினார். ஆராத்தியர் (இறைவன்) ஒருபது நாளில் கிடைக்கும் என்று அதற்குப் பதிலிறுத்து மறைந்தார். அவ்வண்ணமே பத்தாம் நாளில் ஆறுமுகதேசிகர் வீரபத்திர கடவுளின் வழி அம்மந்திரத்தை உபதேசம் பெற்றார். இது ஆறுமுகதேசிகரின் இறையருள் விளக்க வந்த ஒரு கதை. அதன் அடுத்த நிலையான **பாவனாதீத ஒரு வார்த்தை** கிடைக்கப் பெறும் காலத்தை இப்பாடலின் பின்வரிகள் சுட்டுகின்றன.

**எண்ணாராய் உரைத்திங்கள்தனில் உணர்த்துகோம்** என்று வரும் அந்தத் தொடருக்குப் பொருள் விளக்கம் முழுமை யாகப் பெறமுடியவில்லை. ஆறுமுகதேசிகர் பற்றி வரும் கதையில் இந்நிலை நான்கு வருடங்களில் கிடைக்கும் என்று சுட்டப்படுகின்றது.[8] அந்தக் கதையையும் அதனுடன் தொடர்பு பெறும் இந்நிகழ்ச்சியையும் ஒருங்கிணைத்து வைத்து நோக்கும் போது நமக்கு அதன் உண்மை புலப்படுகின்றது. நான்கு வருடங்கள் என்பதைக் கவிக்கும், கவிதை யாப்பமைப்புக்கும் ஏற்ப நாற்பத்தெட்டு மாதங்கள் என்று இசைக்கின்றார் நூலாசிரியர்.

**''எண்ணாறாய் உரைதிங்கள்தனில் உணர்த்துகோம்'** என்னும் போது ($8 \times 6 = 48$) அதை நுகரமுடிகின்றது. சுவடியில் காணப்படுகின்ற 'ர' கரம் அவ்வாறே அமையின் இச்சிக்கல் தீர்வு பெறாது போய்விடும். எனவே இது போன்று மிகுந்த வேறுபாடு தரும் நிலையிலும், இவ்வாட்சிகள் மாற்றம் பெறுகின்றன.

## ழகர - ளகர மாறுபாடு

தமிழின் சிறப்பு ழகரத்தினை அமைக்க வேண்டிய இடங் களில் 'ளகரத்தையும்' 'ல்கரத்தையும்' அமைத்து விடுகின்ற நிலையினைச் சில சுவடிகளில் காணமுடிகின்றது. அவ்வாறு ழகரம் - ளகரமாக மாற்றி எழுதப்படுவதைத் திருநெல்வேலி மாவட்டத்திற்கு உரியதாகக் கருதுகின்றனர். இந்தச் சுவடி அம்மாவட்டத்தில் படைக்கப்பட்டிருக்கலாம். அல்லது ஏடு எழுதி

8. கோவில் ஆதினக் குருமணி, பக். 35—41.

யோர் திருநெல்வேலி மாவட்டத்தைச் சார்ந்தோராக இருக்க லாம். பிற மாவட்டத்துச் சுவடிகளிலும் சில நேரங்களில் இந்தப் பண்பைக் காணமுடிகின்றது.

உம்பர் புகழ் — உம்பர்புகள்
மகிழ்ந்து — மகிள்ந்து [9]
இருளொழியும் இருளொளியும்[10]

என்பன அவற்றுள் சில. இவ்வகையில் நாம் சான்றுக்குக் காட்டிய சுவடிகள் முழுமையும் இதே அமைப்பினைக் கொண்டு நிற்க வில்லை என்பதும் குறிப்பிடத்தக்கது.

'கருமுகில்கள் தவள்ந்துலவு பொழில்கள் சூழும்[11] என்னும் தொடரில் **தவள்ந்து** என்பதில் ழகரத்திற்குப் பதிலாக ளகரம் பயன்பட்டுள்ளது. ஆனால் பொழில்கள் என்பதில் ழகரம் ளகரமாக, பொளில்கள் என்று அமையாது **பொழில்கள்** என்றே உள்ளது.

ஒருவர் சொல்ல மற்றவர்கள் எழுதும் நிலையில் சொல் பவரின் ஒலிப்பு நிலையைக் கேட்பவர் சரியாகப் புரிந்து கொள் ளாததாலும், சொல்பவரே சரியாக உச்சரிக்காததாலும் இவ்வகை நிகழ்வுக்ள் சுவடிகளில் இடம் பெற்றிருக்கக் கூடும். நாம் இந்த ழகர, ளகர நிலையில் மற்றொன்றினையும் காணமுடிகின்றது. ழகரத்திற்குப் பதில் ளகரம் எழுதுவது போன்று, ள்கரத்திற்குப் பதில் ழகரம் எழுதுவதையும் காணமுடிகின்றது.

"எங்கள் குளத்தூரய்யன் இனிதாய் வேட்ட
புகழ் குளத்தூரய்யன் ஈன்ற
எங்கள் குளத்தூரய்யன் ஈன்ற சீலன்
குளத்தூரய்யன் மதலை [12]

என்று பல இடங்களில், **குளத்தூரய்யன்** என்று பாடமிருந்தாலும்,

"சிந்தை மகிழும் **குழத்தூரையன்** [13]

---

9. வள்ளி தெய்வானை ஊஞ்சல், பா. 2, 3
10. ஆறுமுகதேசிகர் ஊஞ்சல், பா. 2
11. திருமண ஊஞ்சல், பா. 3
12. திருமண ஊஞ்சல், பா. 2, 3, 9, 10
13. திருமண ஊஞ்சல், பா. 1

என்ற நிலையிலும் ஒரு பாடம் இருக்கின்றது. எனவே இங்கு ளகரத்தை ழகரமாக மாற்றி எழுதும் நிலையையும் காண முடிகின்றது.

## சொல்லமைப்பும் யாப்பும்

எதுகை, மோனை இவற்றைக் கருத்தில் கொண்டு இலக்கியப் படைப்பாளன் சில சொற்களை மாற்றி அமைக்கிறான் அவ்வாறு அமைக்கப்படுகின்ற சொற்கள் பேச்சு வழக்குச் சொற்களாக மிகுதியும் அமைகின்றன.

துசம், இசை, வசன என்ற சொற்களுக்கேற்ப எதுகையாக 'உசந்திடு' என்ற சொல்லைப் பயன்படுத்தி இருக்கின்றார் ஆசிரியர்[14] **உயர்ந்திடு சிம்மாசனம்** என்பதை **உசந்திடு சிம்மாசனம்** என்று அமைக்க எதுகையமைப்பு முறையே காரணமாகின்றது.

தருமபுரம் தேனமிர்தநாயகி ஊஞ்சலில்[15] செம்பவளம், பைம்பொன், உம்பர் புகழ் என்று பாடலின் தொடக்க அடிகள் அமைந்துள்ளன. அந்த அமைப்பு நோக்கி இரண்டாமடியில். **இன்பவைடூரியம்** என்பதை **இம்பவயிடூரியம்** என்று அமைக்கின்றார் கவிஞர். இவ்வகை அமைப்புகளை நாம் பெரும்பாலான சுவடிகளில் காணமுடிகின்றது.

## ஒற்றுகள் இடுதல்

அவசியமில்லாத இடங்கள் சிலவற்றிலும் ஓர் ஒற்றினைச் சேர்த்து எழுதும் பண்பினைச் சுவடிகளிள் காண்கிறோம். ஒரு சொல்லுக்குள்ளேயும், இரண்டு சொற்கள் இணையும் போது சந்தி நிலையிலும் இவ்வகை ஒற்றுகள் சுவடிகளில் எழுதப் பட்டுள்ளன.

தையல் — தைய்யல்

தென்கரந்தை—தென்ங்கரந்தை

இவற்றுள் முன்னதில் இடையில் ஒற்று இல்லாத **தையல்** என்ற சொல்லினிடையில் முன்னர் இருக்கின்ற உயிர்மெய்க்கு ஏற்ப யகரமெய் சேர்க்கப்பட்டுள்ளது.

---

14. வள்ளி தெய்வானை ஊஞ்சல், பா. 2
15. தருமபுரம் தேனமிர்த நாயகி ஊஞ்சல், பா. 4

**தென்கரந்தை** என்ற சொல்லில் 'ணகர' ஒற்றுக்குப் பின்னர், அதன் முன்னர் வருகின்ற ககர உயிர்மெய்க்கு ஏற்ப 'ங'கரத்தைப் பெய்து **தென்ங்கரந்தை** என்று அமையும்படி ஒற்றுடன் ஒற்று பெய்து அமைத்திருக்கின்றனர். **அகத்தியர்** என்ற சொல் **அகஷ்த்தியர்** என்று குறிப்பிடப்பட்டிருப்பதும் இதன் பாற்படும். இம்மூன்று சான்றுகளும் ஒரு நூலினின்று எடுக்கப்பட்டது என்பது நோக்கற்பாலது. (வள்ளி தெய்வானை ஊஞ்சல்)

இரண்டு சொற்கள் தம்முள் இணையும் போது இடையில் ஏற்படுகின்ற ஒற்றுகளும் - ஒற்றுடன் ஒற்றாக அமைந்துள்ளது.

சகமதனில்த் தருமமெனும் [16]
மழையைக் காணில்ப் புயல் பூத்த [17]

இவற்றுள்- சகமதனில்—தருமமெனும், காணில்—புயல் என்பவற்றுள் முறையே தகர, பகர ஒற்றுகள் மிகையாக இடம்பெறுகின்றன.

## எழுத்து மாற்றம்

நாம் இன்றைய நிலையில் பயன் படுத்துகின்ற எழுத்து முறைக்கும், பண்டைய எழுத்து முறைக்கும் பல மாற்றங்கள் இருந்ததை அறிகின்றோம், தருமபுரம் தேனமிர்த நாயகி ஊஞ்சல் சுவடியில் ஈகாரத்தைக் குறிக்க இ⁰ என்று எழுதியிருப்பதைக் காணலாம்[18] அந்த முறையே எல்லாச் சுவடிகளிலும் பின்பற்றப்படுகிறது என்றும் கூறமுடியவில்லை. மட்டுமன்றி இது ஆசிரியர் சுவடியல்ல பின்னர் வந்தோர் பெயர்த்தெழுதிய சுவடி. எனவே இதை ஆசிரியரோ, இந்தச் சுவடியின் மூலச் சுவடியினை எழுதியவரோ, இவரோ பயன்படுத்தி இருக்கக்கூடும். ஆனால் இந்த ஏட்டை எழுதியவர் இதே முறையினைப் பிற இடங்களிலும் பயன்படுத்துகின்றாரா என்று அறிய இவர் எழுதிய வேறு சுவடி எதுவும் கிடைக்கவில்லை.

---

16. தருமபுரம் தேனமிர்தநாயகி ஊஞ்சல், பா. 7
17. ஆழ்வரர் திருநகரி ஆதிநாதர் ஊஞ்சல், பா. 1
18. தருமபுரம் தேனமிர்ந்த நாயகி ஊஞ்சல், பா. 7

தமிழில் இம்மாற்றம் வரிவடிவ நிலையில் மாறுபட்டுக் காணப்படுகின்றது. 'அ'வுடன் ஒரு சுழித்தலைச் சேர்க்க 'ஆ' வருகிறது. 'உ'வின் மேல் சுழித்தலுடன் தொடர்பு கொண்டுள்ள 'ள'வை இடும்போது 'ஊ'வாகின்றது. 'எ' கரத்தின் இறுதியில் ஒரு சாய்வுக்கோடு இட 'ஏ'வாக மாறுகிறது. அதுபோன்றே 'ஒ' கரத்தின் இறுதியில் அமையும் சுழியுடன் சேர்ந்து 'ஓ' காரம் உருப்பெறுகின்றது. ஆனால் இந்த இகர—ஈகாரம் மட்டும், இகரத்தின்மீது சுழிப்போ, சாய்வுக்கோடோ, ஊகாரம் போன்ற ளகரமோ பெறாது தனி எழுத்துத் தோன்றியிருக்கின்றது. ஆனால் இங்குக் காணப்படும் எழுத்து இகரத்தின்மீது சுழிக்கப் பட்டிருக்கின்றது நம்மை அப்படிச் சிந்திக்க வைத்தது. இந்த நிலையை அறிஞர்கள் முடிவு செய்வார்களாக.

## மேலும் சில குறைகள்

விரைவாக எழுதுதல், அதிகமாகப் பொருள் பெற வேண்டும் என்னும் அவா, கவனமின்மை இவற்றாலும் சுவடியில் காணப்படும் சிதைவுகள், எழுத்துத் தெளிவின்மை போன்ற வற்றாலும் குறைநேர்தல் உண்டு. அவ்வகையைச் சார்ந்த பிழைகள் சிலவற்றையும் நாம் இந்தச் சுவடிகளில் காணலாம்.

**பிறவி** என்ற சொல்லை எழுதப் புகுந்தவர் 'பிற' என்று மட்டும் எழுதி வகர இகரத்தை விட்டுச் சென்றிருக்கின்றார். **திகழவரும் பிறயினில் உதித்து** என்பது **பிறவியினில்** உதித்து என அமைதல் வேண்டும்.[19] இப்படிச் செய்யப் பட்டிருக்கின்ற திருத்தங்கள் எல்லாம் சுட்டப்படாமலே பதிப்பில் திருத்தம் செய்யப்பெற்றுள்ளன.

கன்னலிளங் கமுகுமிளங் கதலி நாட்டிக்
**கனகமண்டபத்தில்** கமலந் தூக்கி [20]

என்ற பாடலில் சீர்பிழை நேர்ந்து தளை சரியாக அமையவில்லை. இந்தப் பாடலின் ஐந்தாம் சீர் (மடக்கடியின் முதல்சீர்) காயாக அமைதல் வேண்டும். ஆனுல் அம்முறைப்படி இன்றி 'கனகமண்ட

19. மேற்படி, பா. 9
20. வள்ளிதெய்வானை ஊஞ்சல், பா. 5.

பத்தில் கமலந்தூக்கி' என்பது சீர் குறைவு பெறுகிறது. ஏடெழுதியோன் **'மணி'** என்ற சொல்லை விட்டு எழுதினமையின் இந்தச் சிக்கல் உருவாகி இருக்கின்றது. **'கனகமணி'** மண்டபத்தில் என்று அந்தத் தொடரை அமைத்தால் பாடல் நிறைவு பெறும்.

கனகமணி மண்டபத்தில் கமலந் தூக்கி

என்ற முறையில் அமைந்து சீரும் தளையும் செப்பம் பெறுகின்றன.

சடகோபர் ஊஞ்சல் சுவடியிலும், அதனின்றும் படியெடுத்த தாளிலும் (பா, 14) [21]

'செந்தழவண் சடகோபன்'

என்று ஒரு தொடர் காணப்படுகின்றது. இதைக் கூர்ந்து நோக்கின் ஓரெழுத்து (மி) விடப்பட்டிருப்பதை அறிய முடியும். **செந்தழவண்** என்பது **செந்தமிழ்வண்** என்று அமையின் சீரும் பொருளும் சிறக்கும். அந்தப் பாடலில்,

வருக்கை முட்புறத்த கனியின் தேனும்

என்று ஒரு தொடர் அமைந்திருக்கின்றது. இது இரண்டு காய்ச்சீர் இரண்டு மாச்சீர் மடங்கி வந்த எண்சீர் விருத்தமாதலால் **வருக்கை** என்ற ஐந்தாம் சீர் காய்ச்சீராக அமைதல் வேண்டும். ஆனால் இங்கு மாச்சீராக வருகின்றது. இதைத் திரும்பத் திரும்பப் படித்து ஊன்றிக் கவனித்தால் **'பலா'** என்ற சொல் விடப்பட்டிருப்பதை உணரலாம். இவ்வகையில் அத்தொடர்.

'வருக்கைபலா முட்புறத்த கனியின் தேனும்'

என்று அமைந்து செம்மையுறுகின்றது.

இவ்வகையில் நாம் மற்றொருவகை பிழையையும் காணமுடிகின்றது. எழுத்துகளை விட்டு எழுதுவதில் உள்ள சிக்கல்

---

21. 1955-56 ஆம் ஆண்டில் R 460 என்னும் சுவடி (அரசினர்க் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம், சென்னை) படியெடுத்துத் தாள் வடிவில் (R 5957) நூலகத்தில் இருக்கின்றது.

போன்றே சேர்த்து எழுதுவதிலும் பிழை ஏற்பட்டு, பதிப்புச் சிக்கலைத் தோற்றுவிக்கின்றது.

'பொலிருநது நினறாடி ரூசல'

என்று சுவடியில் காணப்படுகின்ற தொடர் '**போலிருந்து நின்றாடி ரூசல்'** என்று எழுதப்பட்டது[22]. ஆனால் அதற்கு முன்னர் வருகின்ற மனமகிழ்ந்து என்னும் சொல்லுடன் போலிருந்து என்பது எவ்வகையிலும் பொருந்தி அமையவில்லை.

ஆழ்வார் திருநகரி ஆதிநாதர் 'பொலிந்து நின்றபிரான்' என்று அழைக்கப்படுகின்றார். அவரை நம்மாழ்வாரும் பிறரும் 'பொலிந்து நின்றார்' 'பொலிந்து நின்றபிரான்' என்றெல்லாம் போற்றுகின்றனர். இப்புறச் செய்தி கொண்டு நாம் மேற்கண்ட சொல்லை நோக்கும்போது அச்சொல்லின் உரிய வடிவம் புலப்படுகின்றது.

**'போலிருந்து'** என்பதில் உள்ள 'ரு' வை நீக்கினால் நமக்குச் சீர்—பொருள் புலப்பாட்டில் உள்ள சிக்கல் நீங்கி உண்மை பாடம் உறுதிபெறும். போலிருந்து என்பது **பொலிந்து** என மாற்றம் பெற்று அமையும்.

இதை உறுதிப்படுத்த நமக்கு,

மாதவர் உளங்களிப்பப் **பொலிந்து நின்றார்**
மண்டலமோர் அடியளப்பப் **பொலிந்து நின்றார்**
மேதகுசீர் கருமுகில்போல் **பொலிந்து நின்றார்**
மீறுமத கரியழைப்பப் **பொலிந்து நின்றார்**
மூதார மேனடிப்பப் **பொலிந்து நின்றார்**
முக்கண்ண னிரப்பொழிப்பப் **பொலிந்து நின்றார்**
போதுலவு திருத்துழாய்ப் **பொலிந்து நின்றார்**
புகழ்க்குருகை **பொலிந்துநின்றா** ராடீ ரூஞ்சல்

என்ற அந்த ஊஞ்சலின் பாடல் ஒன்று (10) துணை நிற்கின்றது.

---

22. ஆழ்வார் திருநகரி ஆதிநாதர் ஊஞ்சல், பா. 6.

பாடல்கள் எளிமையாக விளங்கும் வண்ணம் அமைந்துள்ளன. எனவே பொழிப்புரை விளக்கவுரை போன்றன தராது குறிப்புரை மட்டுமே தரப்பட்டுள்ளது. அந்தக் குறிப்புரைகள் அடிக்குறிப்பில் கொடுக்கப்பட்டுள்ளன.

இலக்கியத்தின் கருத்துகள் விளங்கவும், அவற்றின் முழுமையினை உணரவும் அந்தந்த ஊஞ்சல் இலக்கிய மூலத்திற்கு முன்னர் ஒவ்வொரு நூலுக்கும் தனித்தனி தொகுப்பு முன்னுரைகள் தரப்பட்டுள்ளன அவை பாடல் முறைப்படியின்றி கருத்துகளின் முறை கொண்டு அமைக்கப்பட்டுள்ளன. அதில் இடம் பெறும் சிறப்புச் செய்திகள், சிறந்த தொடர்கள், சொல் பயிற்சிகள் போன்றனவும் ஆங்காங்கே தரப்பட்டுள்ளன. அதனால் உணரப்படும் வரலாற்றுச் செய்திகளும் சுட்டப்படுகின்றன.

இந்தப் பத்து ஊஞ்சல் இலக்கியங்களுக்கும், ஆசிரியர் பெயர் அறியக் கூடவில்லை. சிறப்புடன் படைக்கப்பட்ட இவ்விலக்கியப் படைப்பாளர்களை அறிய முடியாதது வருத்தத்திற்குரிய ஒன்றாக அமைகின்றது.



# ஊஞ்சல் இலக்கியம் தோற்றமும் வளர்ச்சியும்

## சிற்றிலக்கியங்கள்

தமிழ் மொழி நீண்டதொரு இலக்கிய வரலாற்றைப் பெற்ற மொழி. அம்மொழியில் பண்டைக்காலந் தொட்டு இன்றுவரை இலக்கியப் படைப்பாளர் வாழ்ந்த காலம், அவர் கொண்ட கருத்துக்கோவை, அவரிடம் மிளிரும் கற்பனையாற்றல் இவற்றைக் கொண்டு புதுப்புது இலக்கிய வகைகள் தோன்றிய வண்ணம் இருக்கின்றன.

இலக்கிய வகைப்பாட்டில் வடிவமும், பொருண்மையும் சிறப்பிடம் பெற்றிருப்பதைப் பாட்டியல்கள் கொண்டு உணர முடியும். தமிழில் இலக்கிய வகைகள் பெருகி வளர்வதற்கு ஒரு வகையில் பக்தி இயக்கமும் காரணமாக அமைகின்றது. சிற்றிலக்கியங்களின் உருவாக்கத்திற்கு வழியமைத்துக் கொடுத்தவர்கள் நாயன்மார்களும் ஆழ்வார்களும்; வழியமைத்துக் கொடுத்தது அவர்தம் இறைக்கொள்கை. பக்திப் பொருண்மையே பெரும்பாலான சிற்றிலக்கியத்தின் பெருக்கத்திற்குக் காரணமாக அமைகின்றன.

அவ்வகையில் தோன்றிய சிற்றிலக்கியங்கள் பலவாறாகப் பல்கிப் பெருகி வளர்ந்துள்ளன. ஆனால் அவற்றுள் ஈடும் எடுப்பும் பெற்று வளர்ந்து மக்களிடை வாழ்வன சிலவே. அவ் வளர்ச்சி நிலையில் வைத்துப் போற்றத் தகுந்த இலக்கியங்களுள் ஊசல் இலக்கியங்களையும் இணைக்கலாம்.

இந்தச் சிற்றிலக்கிய வகைகளைத் தொண்ணூற்றாறு என வகுப்பர்.

> பதினாறை ஆறிற் பெருக்கி பிரபந்தத் தந்தாதி
> பலவகை எடுத்து ரைக்கின்[1]
>
> பிள்ளைக் கவிமுதல் புராணம் ஈறாத்
> தொண்ணூற் றாறெனும் தொகைய தான[2]

---

1. பிரபந்ததீபிகை, நூற்பா. 28
2. பிரபந்த மரபியல், நூற்பா. 1

என்று வரையறை செய்கின்ற பிரபந்த தீபிகையும் பிரபந்த மரபியலும் காலத்தாற் பிற்பட்டன. குடுமியாமலை சுப்பிரமணிய பாரதி,

பிரபந்தந் தொண்ணூற் றாறா மவை
சாதகமாய்ப் பிள்ளைக் கவியே[3]

என்கிறார். இவை தவிர சதுரகராதியும், வேறு சில இலக்கியங்களும் இலக்கியவகையைத் தொண்ணூற்றாறு என்று சுட்டி நிற்கின்றன.

தொண்ணூற்றாறு என்று சிற்றிலக்கியங்களை வகைப் படுத்திப் பேசுகின்ற நூல்கள் தருகின்ற பட்டியல்களிலும் நாம் பல மாற்றங்களைக் காண்கின்றோம். பன்னிரு பாட்டியலில் இலக்கணம் கூறப்படும் சிற்றிலக்கிய வகைகள் எழுபத்து நான்கு, அறுபத்திரண்டு, அறுபத்தைந்து என்று முறையே மு. அருணாசலம், டாக்டர் ச. வே. சுப்பிரமணியன், மு. சண்முகம்பிள்ளை ஆகியோரால் குறிக்கப்படுகின்றது[4] மேலும் ஒரு பாட்டியலில் கூறப்படுகின்ற இலக்கியங்கள் எல்லாம், மற்றொரு பாட்டியலில் கூறப்படுவதில்லை. அவ்வகையில் தனித் தனியே கணக்கிடும் போது, அவை தொண்ணூற்றாறு என்ற எண்ணிக்கையைக் கடந்துவிடுகின்றது.

பாட்டியல் நூல்களில் குறிக்கப்படுன்ற சில இலக்கிய வகைகள் இதுகாறும் கிடைத்திலது. அவை தருகின்ற நூல்களின் பட்டியல்களுக்குப் பிறகு பலவகைச் சிற்றிலக்கியங்கள் தோன்றியுள்ளன; தோன்றி வருகின்றன; இவற்றையெல்லாம் கருத்திற் கொண்டு நோக்கும்போது, நமக்குத் தொண்ணூற்றாறு என்ற எண்ணிக்கைச் சரியானதாகப் படவில்லை.

வடமொழியியலார் பிரபந்தம் தொண்ணூற்றாறு என்றனர். அதுகொண்டு சிற்றிலக்கியங்களையும் அவ்வாறு அழைக்க முற்பட்டிருக்கலாம். சமயத் தத்துவக் கோட்பாட்டு வல்லார் சமயசாத்திரவகை தொண்ணூற்றாறு என்று குறிப்பர்

3. பொருட்டொகை நிகண்டு, 125
4. இ. சுந்தரமூர்த்தி தூது இலக்கியங்கள், தமிழிலக்கிய கொள்கை—7, ப. 330

அடியார்க்கு நல்லார் **பாசண்டம்** என்பதற்கு தொண்ணூற்றாறு வகை சமயசாத்திரக்கோவை[5] என்று பொருளுரைக்கின்றார். இந்த வரையறையைக் கொண்டு சிற்றிலக்கியங்களையும் தொண்ணூற்றாறு என்றுரைத்தனர் போலும்.[6] மேலும் மேலும் கிளைத்து வளர்ந்துகொண்டு வரும் இலக்கிய வகைகளை அப்படி ஒரு கூட்டுக்குள் அடக்க முயல்வது சரியன்று. எனினும் அவ்வழக்கு எப்படியோ நிலை பெற்று விட்டது.

### ஊஞ்சல்—சொல்லாய்வு

ஊஞ்சல் என்ற சொல்லுக்கு இணையாக அதைக்குறிக்க 'ஊசல்' என்னும் சொல்லும் இலக்கியங்களில் ஆளப்படுகிறது. மலையாள மொழியில் ஊஞ்சல் என்பது ஊஞ்ஞால் ஊஞ்ஞல் என்றும் வழங்கப்படுகின்றது. குஞ்ஞால் என்றும் ஊஞ்சலை அழைப்பதாகத் தெரிகின்றது. இதைக் குஞ்சலம்என்று வழங்கு வதையும் காணலாம்.

'தாப்பு' என்ற பெயரும் ஊஞ்சலைக் குறிக்க இலக்கியங் களில் வழங்கப்படுவதைக் காணலாம்[7] 'தான் நிற்கும் நிலையி னின்று முன்னும் பின்னும் அசைதல்' என்னும் பொருள் கொண்ட ஊஞ்சலை நாம் நன்னூல் போன்ற இலக்கண நூல்களில் குறிப்பிடப்படும் தாப்பிசைப் பொருள்கோளுடன் ஒப்பு நோக்கிச் சிந்திக்கலாம்.

இடைநிலை மொழியே யேனையீ ரிடத்தும்
நடந்து பொருளை நன்னுதல் தாப்பிசை

என்பது நன்னூல் நூற்பா[8]. அவிநயம், நேமிநாதம், இலக்கண விளக்கம், இலக்கணக் கொத்து, தொன்னூல் விளக்கம் சுவாமி நாதம், முத்து வீரியம், தமிழ்நூல் போன்ற பல இலக்கணநூல்கள்

---

5. உ. வே. சாமிநாதையர் சிலப்பதிகார மூலமும் அடி யார்க்கு நல்லார் உரையும், பக். 246—535
6. மு. சண்முகம்பிள்ளை சிறுபிரபந்தங்கள், தமிழிலக்கியக் கொள்கை-2, ப. 73
7. திருஞான சம்பந்தர் தேவாரம், திருமயிலை, பா. 9
8. நன்னூல்—சொல்—பொதுவியல், நூற். 416

தாப்பிசைப் பொருள்கோளை இதே பொருள்பட விளக்கு கின்றன[9]. இங்குச் சுட்டப்படும் 'தாப்பு' என்பது தாம்பு என்பதின் திரிந்த வடிவமாக கருதப்படுகின்றது.

தாம்பு எனற்பாலது வலித்து நின்றது; தாப்பு—தாம்பு ஊஞ்சல் இடைச்சொல் தாப்பிசை எனின் ஊஞ்சல் போல் இரு மருங்கும் செல்லும் சொல் என்பது பொருள்—என்று கொடுக்கப் படும் விளக்கம்[10] தாப்புக்கும் ஊஞ்சலுக்கும் இடையேயுள்ள தொடர்பினைப் புலப்படுத்துகின்றது.

கிணற்றில் நீரிறைக்கும் கயிற்றுக்குத் **தாம்பு** என்பது பெயர். மாடு கட்டும் கயிறும் கிராமங்களில் தாம்பு என்று வழங்கப்படும். முன்னது தண்ணித் தாம்பு எனவும், பின்னது மாட்டுத் தாம்பு எனவும் அழைக்கப்பெறும். இவ்விரண்டு கயிறுகளும் முன்னும் பின்னும் அசைகின்றன. இவற்றையும் தொடர்புபடுத்தி ஊஞ்ச லுடன் காணயியலுமா என்பது சிந்திக்கத் தக்கது.

அணிநூலார் தாப்பிசைப் பொருள்கோளை இடைநிலை விலக்கு என்பர்[11] அசைதலினின்றும் விலகி நிற்கின்ற தன்மையே இங்கு 'விலக்கு' என்று குறிப்பிடப்படுகின்றது. எனவே ஊஞ்சல், தாப்பு, தாம்பு, இடைநிலை விலக்கு என்பன தம்முள் தொடர் புடையனவாகக் கருதத் தக்கன. ஊஞ்சலைக்குறிக்க ஊசல், துருவை, துடுப்பு, தூரி, விண்டாட்டு என்ற சொற்கள் நிகண்டு களில் வழங்கப்படுகின்றன.[12]

## ஊஞ்சலும் ஊசலும்

ஊஞ்சல், ஊசல் என்ற இரண்டு சொற்களும் இலக்கியங்களில் பயின்று வருகின்றன. சங்க இலக்கியங்களில் 'ஊசல்' என்ற சொல் மட்டுமே பயின்று வருகின்றது. ஊஞ்சல் என்னும் சொல் முதன் முதலில் வில்லிபாரதத்தில் தான் இடம் பெறுவதாகத்

---

9. பொருள்கோள், ச. அரங்கராசன், பக். 3-17
10 மோசசு பொன்னையா, நன்னூல் (உரை) ப. 320
11. கே. இராஜகோபாலாச்சாரியார், இலக்கணவிளக்கம் அணியியல், ப. 117
12. கயாதரம் நூற். 272, பிங்கலம் நூற். 1670, அரும் பொருள் விளக்க நிகண்டு நூற். 80, நானார்த்த தீபிகை நூற். 17.

தெரிகின்றது. இலக்கிய ஆட்சிகள் அனைத்தையும் வைத்து நோக்கும் போது, **ஊசல்** என்பதே மிகுதியாக ஆளப் பெற்றிருக்கின்றது. அதன் வினை வடிவங்களாக ஊக்க, ஊங்க என்பன சங்க இலக்கியங்களில் பயின்று வந்துள்ளன. சென்னைப் பல்கலைக்கழகப் பேரகராதியில் மேற்கண்ட கருத்துகளை உட்கொண்டு

ūcal—ஊஞ்சல்

என்று விளக்கம் தரப்பட்டுள்ளது.[13] மொழியியல் ஞாயிறு தேவநேயப் பாவாணர் அவர்கள் 'ஊஞ்சல்' என்பதினின்று ஊசலைத் தோற்றுவிக்கின்றார்.[14]

உந்து—உஞ்சு
உஞ்சு—உஞ்சல்
உஞ்சல்—ஊஞ்சல்

என்று ஊஞ்சலுக்கு விளக்கம் தந்து, பின்னர் அந்த ஊஞ்சலினின்றும், ஊசலை வருவித்துக் காட்டுகின்றார்.

பாவாணரின் வருவித்தல் முறைக்கும் நாம் காரணம் காட்டலாம். ஐந்து என்ற எழுத்து வழக்கு பேச்சு வழக்கில் அஞ்சு என்று ஆவது போன்று உந்து என்பதினின்று உஞ்சு என்பது தோன்ற வாய்ப்பிருக்கின்றது. அத்துடன் தொழிற் பெயராக்க விகுதியான அல் இணைய உஞ்சு + அல்—உஞ்சல் என்று மாற்றம் பெற்றிருக்கின்றது. எனவே இவர் கொண்ட வருவித்துக் காட்டும் முறை விதிக்குட்பட்டதாகவே அமைகின்றது.

பொதுவாகத் தேவநேயப் பாவணர் அவர்களின் சொல்லாக்க சொல்லாய்வு—சொல்லமைப்பு போன்றவற்றைப் பற்றிய கருத்துகள் ஏற்றுக் கொள்ளக் கூடியனவாய் அமைகின்றன. அவர் சொல்லும் முறையும், ஆய்வின் இறுதியில் சரியாக அமைகின்றது. ஆனால் அதை எப்படி அவர் வருவித்தார்? அதற்கு என்ன முறையைப் (Method) பின்பற்றினார் என்பது விளங்கவில்லை.

நமக்கு அடுத்து நிற்கும் வினா ஊஞ்சல் என்னும் சொல்லின் மொழி முதல் 'உகரம்' குறிலிலிருந்து நெடிலானதா? நெடிலிலிருந்து குறிலானதா? என்பது. மொழியில் சொற்களின் முதல்

---

13. சென்னப் பல்கலைக்கழகப் பேரகராதி, ப. 491
14. தேவநேயப் பாவாணர், முதல் தாய் மொழி, ப. 52

ஒலி குற்றிலிருந்து நெடிலானதா? நெடிலிலிருந்து குறிலானதா என முடிவு சொல்ல முடியாத இடங்கள் பல உண்டு. அவற்றுள் இதுவும் ஒன்று. தேவநேயப் பாவாணர் கருத்துப் படி குறில் நெடிலானது என்று முழுமையாக ஏற்க இயலவில்லை.

Peyar—Pēr

என்பதில் குறில் நெடிலாக மாற்றம் பெற்றிருக்கின்றது. அதில் ஒரு உயிர் கெட்டு, முதல் எழுத்து நீட்சி பெறுகின்றது. ஆனால்

உஞ்சல்—ஊஞ்சல்
உசல்—ஊசல்

என்பவனவற்றில் அத்தகைய மாற்றம் எதுவும் நிகழாமல் குறில் நெடிலாக மாறியதாகக் காட்டப் படுகின்றது. ஆனாலும் நம்மால் இதற்கு முடிவான வரையறுத்த விளக்கம் தர இயல வில்லை.

தமிழ், மலையாளம், கன்னடம், தெலுங்கு, துளு, கொலாமி, நாய்க்கி, பர்ஜி கதபா போன்ற பல மொழிகளில் **ஊஞ்சல்** சொல் பல்வேறு இடங்களில் இடம் பெறுகின்றது. அவற்றின் துணை கொண்டு, மூலதிராவிடமொழியில் ஊஞ்சல் சொல்லை மீட்டுருவாக்கம் (Re construction) செய்த அறிஞர்கள் ūñc— என்பது வரை சுட்டிச் செல்கின்றனர். [15]

எனவே ஊஞ்சல் என்ற சொல்லை முந்தைய வடிவமாகவும் அதனின்று தோன்றிய வடிவமாக ஊசல் என்ற சொல்லையும் கொள்ள முடிகின்றது. இதற்கு நமக்குத் தேவநேயப்பாவாணர் அவர்களின் வருவித்தல் முறையும், டாக்டர் பர்ரோ, டாக்டர் எமனோ என்ற இரண்டு அறிஞர்களின் திராவிடமொழி—மூல திராவிடம் (Photo Draividian) மீட்டுருவாக்கமும் துணை நிற்கின்றன சொல்லில் புதிதாக ஒரு ஒலி தோன்றுவதினும், வழக்கிலிருக்கும் ஒலி குறைந்து சொல்லுருவாகும் தன்மையினைக் காண்கின்றோம். அந்நிலையில் ஊஞ்சலில் உள்ள ஞகரமெய்கெட்டு 'ஊசல்' என்று சொல் தோன்றிருத்தல் முறையானதும் இயல்பானதுமாகும்.

---

15. Dravidian Etimological Dictionary. T. Burrow &. M B Emeneau 1961, P. 56

**ஊஞ்சலாடும் பண்பு**

இன்றைய நிலையிலும் கிராமங்களில் வயல்வெளிக்கருகில் உள்ள மரங்களிலும் தோப்பு மரங்களிலும் ஆற்றோர, குளத்தோர, ஏரியோர மரங்களிலும் ஏறி—இறங்கி விளையாடும் பண்பினைக் காண்கின்றோம். சில வேளைகளில் தாழ்வான கிளைகளில் அமர்ந்து அல்லது நின்றாடி மகிழ்வுபெறும் நிலையினையும் காணமுடிகிறது. ஆலமரத்தின் விழுதுகளைப் பிடித்துக்கொண்டு ஒருவர் ஆட்ட ஆடுவதும், அல்லது தாமே ஆடுவதும் கிராமப்புரங்களில் இன்றும் நிகழ்ந்து வருகின்றது.

நாம் மேற்குறித்த இடங்களில் பணிக்காகச் செல்லும் மக்கள் தங்கள் குழந்தைகளையும் உடன் அழைத்துச் செல்வதுண்டு. அவர்கள் தங்கள் கைக்குழந்தைகளை ஏணை போன்று துணியால் கட்டி அதிலிட்டு உறங்க வைப்பர். ஆனால் மரக்கிளைகள் உயரமான இடத்தில் இருக்கின்றபோது அவர்களால் துணிகளைக் கொண்டு மட்டுமே ஏணை கட்டுவது என்பது முடியாது. அப்போது அதற்காக அவர்கள் கயிற்றைத் தேடிக்கொண்டு போவதில்லை. அங்கேயே இயல்பாகக் கிடைக்கின்ற கொடிகளைப் பயன்படுத்துகின்றனர். **ஓணாங்கொடி** என்ற ஒருவகையான கொடி இதற்குப் பெரிதும் துணைபுரியும்.

ஓணாங்கொடி என்பது வயல் வரப்புகளிலும், ஏரி ஆறு போன்ற நீர்நிலைகளின் கரைகளிலும் படர்ந்து வளரும் ஒரு கொடி வகை. இது கயிற்றினைப் போன்ற அழுத்தமான ஒன்று. அதன் தன்மைக்கேற்ப இரண்டு அல்லது மூன்று கொடிகளை ஒன்றாக இணைத்து நாற்று, புல், கதிர் போன்றவற்றைக் கட்டும் கயிறாகக் கிராமங்களில் பயன்படுத்துவது இன்றும் வழக்கிலிருக்கின்ற ஒன்றாகும். அந்தக் கொடிகளை இணைத்து குழந்தையின் ஏணை அமைப்பிற்கும் பயன்படுத்துவர்.

அங்குப் பணிபுரியும் தொழிலாளிகளின் மற்ற சிறுவர்—சிறுமியரும் அந்த மரத்தினருகில்தான் இருப்பர். அந்த ஏணையின் அமைப்பு, தான் அமர்ந்தாடும் மரத்தின் தன்மை, ஆடும் இயல்பு போன்றன கொண்டு அவர்கள் சிந்திக்கத் தொடங்குகின்றனர். 'போலச் செய்தல்' என்னும் உணர்வால் தாங்களும் அவ்வாறே செயல்பட எண்ணுகின்றனர் அவர்களின் சிந்திப்பின் பயனாகப் போலச் செய்தலின் உணர்வால ஊஞ்சலின் தொடக்க நிலையிலமைந்த ஏணை போன்ற ஒரு அமைப்பு தோன்றியிருக்கலாம்.

இதன் தொடர்ச்சி—வளர்ச்சி பல நாட்களுக்குப் பின்னர் கயிறாக மாற்றம் பெற்றுள்ளது. மேலும் ஒணாங்கொடி இரண்டு நாட்களில் உலர்ந்து வாடிவிடும் தன்மையதாக இருப்ப தால், அக்கொடிகளை அடிக்கடி எடுத்து—தொடுப்பது கடினமாக அமைந்து விடுகின்றது. எனவே கயிற்றினைக் கட்டி ஊஞ்சல் ஆட முற்பட்டிருக்கின்றனர். கயிற்றில் ஆடுவதும் தொடர்ந்து நெடு நேரம் நிகழமுடியாது. எனவே அமர்வதற்கு ஏற்ப வைக்கோல், புல், கோரை வகைகள் போன்றவற்றை வைத்துக்கட்டி இருக்கை யமைத்து அதில் ஆடினர். இவ்வகையில் ஆண்களைவிட பெண் கள் விருப்பம் மிகுந்து செயல்பட்டிருக்க வேண்டும். வசதியாக அமர்ந்தாட பனை மட்டைகள், பலகைகள் போன்றவற்றை இருக்கைக்கு அமைத்துப் பெண்கள் ஆடிமகிழ்வர்.

ஆண்கள் பெரும்பான்மையும் அமர்ந்து ஆடுவதில்லை; நின்று கொண்டு ஆடுவதை அவர்கள் மேற்கொண்டிருந்தனர். அல்லது அமர்ந்தாடும் நிலையில் வைக்கோல், புல் போன்றவற்றுடனேயே தங்கள் ஊஞ்சலாட்டத்தை முடித்துக் கொள்கின்றனர். பலமணி நேரம் பெண்கள் தொடர்ந்து ஆடுவதால் பலகை போன்ற அமைப்புத் தேவைபட்டது.

படிப்படியாக இவ்வூசல்கள் அழகு நிலையும் நுண்டன்மையும் நிறைந்து நாம் இன்று காணும் ஊஞ்சல் போன்ற அமைப்பினைப் பெற்றுவிட்டன. பெரும்பான்மையும் பெண்களாட, சில நேரங் களில் ஆண்களும் ஆடுவர். அவ்வாறு ஆண்கள் ஆடும்போது அமர்ந்தாடுவதினும் நின்றாடுவதையே மேற்கொள்வர். அமர்ந் தாட நேரும்போது எதிர்முகமாக இருவர் மாறி அமர்ந்து கால் களால் தரையில் உந்தி விசை அழுத்தி—வேகம் அதிகரித்து ஆடுவர்.

இயல்பாகத் தோற்றம் பெற்ற ஊஞ்சலாட்டம் பொழுதுபோக்கு ஊஞ்சலாக உருப்பெற்ற பின்னர் ஊஞ்சலாடுகின்ற வழக்கத்தைக் கிராமப்புறங்களில் அதிகமாகக் காணவியலாது. சில விழாக் காலங்களில் இவ்வாட்டம் ஆடப்பெறுவதுண்டு. ஆலய விழாக் களில் திருவிழா நாளின்போது இறைவன்—இறைவியை நீராட்டி அலங்கரித்து ஊஞ்சலில் வைத்து மணம் செய்வித்து, ஆட்டி இன்புறுகின்றனர் இறையடியார்கள். இந்த ஊஞ்சலுக்கென்றே சில கோவில்களில் ஊஞ்சல் மண்டபங்கள் அமைந்திருக்கின்றது. **மணவிழா** அல்லது **ஊஞ்சல்விழா** அந்த மண்டபத்தில் நடை

பெறுகின்றது. அப்போது ஊஞ்சல் பாடல்கள் பாடப்படுகின்றன. சில தலங்களில் அவ்வாறு விழாவின்போது ஊஞ்சல் பாடல்கள் பாடப்படாமல் புலவன் தன் கற்பனையின் வளத்தை மட்டுமே கொண்டு இவ்வூசல் இலக்கியம் படைக்கப்படுவதுண்டு.

அதற்கெனப் புலவர்களால் ஊஞ்சல் பாடல்கள் பாடப்படாத போது, பழம் இறைப்பாடல்களைப் பாடுவதை வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர். சைவ சமய ஆலயங்களில் திருவாசகத்தின் திருப்பொன்னூசல் பகுதியையும், வைணவ சமயத்துக் கோவில் களில் அஷ்டபிரபந்தத்தில் அடங்கியுள்ள நாயகர், நாயகியார் ஊஞ்சல்களையும் இசையுடன் பாடி மகிழ்கின்றனர்.

மணவிழாவின் போது ஊஞ்சலில் மணமக்களை வைத்துப் பிறர் ஆட்டி அவர்களை மகிழ்விக்கின்றனர். அவ்வகையிலமைந்த ஊஞ்சல் 'திருமண ஊஞ்சல்' என்று அழைக்கப்படும். இறைவன் இறைவியரைப் புகழ்ந்து பாடும் பாடல்களை இவர்களுக்குப் பாடுவதும் உண்டு. ஊஞ்சல் பாடல்கள் என்று பொதுவாக வழக்கிலுள்ள பாடல்களுடன், பாடுவோர் கற்பனை யைக் கலந்து பாடுவதும் உண்டு. சில நேரங்களில் அவர்களுக் கென்று ஊஞ்சல் பாடல்கள் எழுதப்படுவதுமுண்டு. அவ்வாறு எழுதப்படுபவர்கள் எழுதியவருக்குத் தொகை கொடுத்து வந்தனர். இந்நிலை செல்வந்தர்கள் நிலையிலுள்ளோர்களுக்கு மட்டுமே நடைபெற்றிருக்கின்றது. இப்பொருள்பெறும் பயன் பாட்டு நோக்கமின்றி பொதுநிலையில் வாழ்த்தும் வண்ணம்— செய்திகளைக் கூறும் வண்ணம் ஊஞ்சல் பாடல்கள் அமைவதும் உண்டு.[16]

இவையன்றி பண்டிகைகளின் போதும் ஊஞ்சலாடுவதைச் சில இடங்களில் காணமுடிகின்றது. ஓணம், திருவாதிரைப் பண்டிகைகளின்போது ஊஞ்சலாடுவதை கேரள மக்கள் வழக்க மாகக் கொண்டிருக்கின்றனர். அதையொட்டி அப்பகுதியைச் சார்ந்த தமிழ்நாட்டு மக்களும் இப்பண்டிகைகளில் ஊஞ்சலாடு வதை வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர்.

---

16. இவ்வகையில் ஒரே மேடையில் 1832 ஆம் ஆண்டு ஒரு திங்கட் கிழமையன்று நடைபெற்ற மூன்று திருமணங்களை வாழ்த்துவதாக அமைந்த சுவடி ஒன்று கேரள அரசினர்க் கீழ்த்திசைச் சுவடி நூலகத்திலிருந்து எடுத்தெழுதப்பட்டு இங்கு இறுதியாகப் பதிப்பிக்கப் பட்டிருக்கின்றது.

## தென்பாண்டிநாட்டு ஊஞ்சல்

இந்த ஊஞ்சலாடும் வழக்கம் இடத்திற்கு ஏற்ப மாறுபட்டு அமைகின்றது. ஆடும் முறை—ஆடுவோர்—ஆடுங்காலம் போன்ற வற்றில் நாம் வேறுபாட்டைக் காண முடிகின்றது. எல்லாப் பகுதி மக்களின் ஊஞ்சல் ஆட்டத்தினைப் பற்றிப் பேசுவது நீளும் எனவே, விரிவஞ்சிச்—சான்றுக்குத் தென்பாண்டி நாட்டு ஊஞ்சல் பண்பை மட்டும் விளக்கலாம்.

ஊஞ்சாலடுவதற்கு, பனைநாரால் நன்கு முறுக்கப்பட்ட வடம் (கயிறு) ஊஞ்சல் கயிறாகப் பயன்படுத்தப் படுகின்றது. ஊஞ்சல் பெரும்பான்மையும் புளிய மரங்களில் நேராக—சமநிலையில் செல்லும் கிளைகளில் கட்டப்படுகின்றது. பிறமரங்களில் ஊஞ்சல் கட்டப்படுவதாகத் தெரியவில்லை. மூன்றுபேர் ஊஞ்சலில் நின்றாடினாலும் ஒடியாத அளவுக்கு வலிமை வாய்ந்தது புளியமரமாகும்.

'புடித்தாலும் புடித்தான்
புளியங்கொம்பா புடித்தான்'

என்ற பழமொழி நமக்கு அத்திறனை மேலும் விளக்கவல்ல சான்றாக அமைகின்றது.

வடத்தின் இரண்டு முனைகளையும் புளியங்கொம்பில் கட்டுவர். வடத்தில் ஊஞ்சலாடுவோர் இருந்து ஆடுவதற்கு வசதியாக இந்தக் கயிறு பூமியிலிருந்து மூன்று அல்லது மூன்றரையடி உயரத்தில் தொங்கும்படிக் கட்டவேண்டும். சிறுவர், சிறுமியர் ஆட அமையும் ஊஞ்சல்கள் ஓரிரு அடி உயரத்தில் தொங்குமாறு அமைப்பர்.

ஊஞ்சலாடுபவர் இருந்து ஆடும்போது கயிற்றில் மட்டும் இருந்தாடுவது முறையானதன்று; நெடுநேரம் ஆடவும் இயலாது; அதற்கு இருப்புப் பலகையாக பனை மட்டைகளைப் பயன்படுத்துகின்றனர். பனை மட்டைகளின் முட்களைச் (கறுக்குகளை) சீவி எடுத்து உட்புறம் தரையை நோக்கி அமையுமாறு அக்கயிற்றிடையில் வைத்துப் பிணைக்கின்றனர். இதற்கு ஒரு மட்டை மட்டுமே பெரும்பான்மை பயன்படுவதாகத் தெரிகின்றது. அதன் நீளம் நாம் காணும் ஊஞ்சல் பலகைகளைப் போன்று நீண்டில்லாமல் குறுகியதாகவே அமைகின்றது.

ஆடிமாத காலத்தில் ஊஞ்சலாடுவதை இம்மக்கள் பெரும் பான்மையும் வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர். ஆடிமாதத்தின் முதல்நாளை இவர்கள் **ஆடிப்பிறப்பு** என்று கொண்டாடுகின்றனர். அந்தக் கொண்டாட்டத்தில் அம்மாதம் முழுதும் ஊஞ்சாலடுவதை மேற்கொள்கின்றனர். ஆடிமாதமல்லா பிற மாதங்களில் ஊஞ்சலாடும் முறையும் இங்கு இடம் பெறாமலில்லை. இது தவிர சித்திரை, வைகாசி ஆகிய கோடை மாதங்களில் பள்ளிபயில் மாணவ மாணவியர் கோடை விடுமுறையை ஊஞ்சலாடிக் கழிக்கின்றனர்.

ஆண் பெண் இருபாலரும் ஊஞ்சலாடுகின்றனர். ஏழுவயது சிறுவர், சிறுமியர் முதல் 20 வயது நிரம்பிய இளைஞர்களும் ஊஞ்சலாடி மகிழ்கின்றனர். ஆண் ஆட்ட ஆண் ஆடுவதும், ஆண் ஆட்ட பெண் ஆடுவதும், பெண் ஆட்ட பெண்ணாடுவதும், பெண்ணாட்ட ஆண் ஆடுவதும் உண்டு.

ஒருவர் ஆடுவது மட்டுமன்றி மூவர் ஊஞ்சலாடும் வழக்கமும் உண்டு. இப்படி மூன்றுபேர் ஆடும்போது கீழே இருந்து ஒருவர் ஆட்டவேண்டிய அவசியமில்லை. ஒருவர் ஊஞ்சலில் அமர்ந்திருப்பார். இன்னொருவர் ஊஞ்சலில் இருப்பவரின் இருபக்கங்களிலும் காலை ஊன்றி நிற்பார். மற்றவர் நிற்கின்ற— இரண்டாமவருக்கு நேரெதிராக இரண்டு பக்கமும் காலைஊன்றி நிற்பார். இவ்வாறு நிற்பவர்கள் வடத்தினைப் பிடித்துக் கொள்வது அவசியமாகின்றது. ஊஞ்சலில் அமர்ந்திருப்பவர் தரையில் காலை ஊன்றி ஊஞ்சலை மெதுவாக இயக்குவார். உடனே நிற்பவரில் ஒருவர் தமது காலால் அழுத்தி—கயிற்றை இழுத்து ஊஞ்சலை ஊக்குவார். அப்போது மற்றவர் காலால் எதிர்ப்புறம் நோக்கி ஊக்குவார். இருவரும் மாறி மாறி ஊக்கி ஊஞ்சல் புளியமரத்தின் கிளைகளில் மோதும் அளவுக்குக்கூட ஊக்குவர்.

ஊஞ்சலாடும் போது, ஆட்ட அளவில் வரும் எண்ணிக்கையைக் கணக்கிட அங்குச் சில பாடல்கள் பாடப்படுகின்றன.

**பாடல்**

| நின்று ஊஞ்சலை ஊக்குவோர் | ஊஞ்சலில் ஆடுபவர் |
|---|---|
| நண்டென்ன நண்டு | பால் நண்டு |
| பாலென்ன பால் | கள்ளிப் பால் |

கள்ளியென்ன கள்ளி கொடுங்கள்ளி
கோடென்ன கோடு நாய்க் கோடு
நாயென்ன நாய் வேட்டை நாய்
வேட்டையென்ன வேட்டை பன்னி வேட்டை
பன்னியென்ன பன்னி ஊர்ப் பன்னி
ஊரென்ன ஊர் அரிசியூர்
அரிசியென்ன அரிசி சோற்றரிசி
சோறென்ன சோற் பழஞ்சோற்
பழமென்ன பழம் வாழைப்பழம்
வாழையென்ன வாழை கரு வாழை
கருயென்ன கரு முட்டைக் கரு
முட்டையென்ன முட்டை தாரா முட்டை
தாரா என்ன தாரா தண்ணித் தாரா
தண்ணி என்ன தண்ணி குளத்துத் தண்ணி
குளம் என்ன குளம் **கன்னங்குளம்**

இறுதி வரிகள் அந்தந்த ஊர்ப்பெயருக்கு ஏற்ப மாற்றி அமைக்கப்படும். சில பாடல்கள் 'ஏலேயேலோ குஞ்ச யேலோ' என்றும் முடிவதுண்டு.

## ஊஞ்சல் பாடல் தோற்றம்

தொடக்க நிலையில் ஊஞ்சல் விளையாட்டு பாடல் இடம் பெறும் ஆட்டமாக அமையாமல் ஆடலாக மட்டுமே அமைந்துள்ளது. பெரும்பாலான விளையாட்டுகளில், அவை தோன்றி வளர்ந்து பல காலம் கடந்த பின்னரே பாடல் உருவாகி இருக்கிறது என்பது இங்குக் கருதத் தக்கது. விளையாட்டின் எண்ணிக்கைக்கு வரையறை கொடுக்கவும், ஆடலின் சோர்வுநிலை போக்கும் பொருட்டும். இந்தப் பாடல்கள் தோன்றியிருக்க வேண்டும். இப்பாடல்களின்கண் துன்பம் மிகுதியும் பேசப் படாமல், இன்பமாய் பொழுதுபோக்குந் தன்மையவாய் அமைந்து காலப்போக்கில் இலக்கிய உரு ஏறியிருக்கக்கூடும்.

சங்கப் பாடல்கள் பெரும்பான்மையும் ஊஞ்சல் ஆட்டம் பற்றி மட்டுமே பேசுகின்றன. கலித்தொகை பாடல்கள் சில, பாடலுடன் கூடிய ஆட்டமாக ஊஞ்சலாட்டத்தைச் சுட்டி நிற்கின்றன. சங்க இலக்கியத்திற்குப் பின்னர் தோன்றிய சிலப்பதிகாரத்தின் **ஊசல் வரியில்** இது ஆடலும் பாடலும் கொண்டதாக அமைக்கப்படுகின்றது.

ஆனால் ஊஞ்சல் சிற்றிலக்கியங்கள் ஊஞ்சல் இருந்தோ இல்லாமலோ புலவர்களால் கற்பனை வளம் செழியப் பாடப் படுவன. இதில் ஆடுதல் பற்றிய குறிப்பு குறைவாகவோ இல்லாமலோ இருக்கலாம்.

## ஊஞ்சல் வகைத் தொகை—பகுப்பாய்வு

ஊஞ்சல் வகையினைப் பொது நிலையில் இரண்டாகப் பகுக்கலாம்

(1) இலக்கிய ஊஞ்சல்

(2) நாட்டுப்புற ஊஞ்சல்

இவ்விரண்டிற்கும் அடிப்படையிலேயே வேறுபாடுண்டு. இப்படிப் பாடப்பட வேண்டும் என்ற கருதுகோளை முதன்மைபடுத்தி, வரையறை கொண்டு, ஒரு குறிப்பிட்ட வட்டத்திற்குள் தனது கற்பனையைச் செலுத்தி புலவனால் படைக்கப்படுவது முன்னது. பின்னது தனக்கென்று குறிப்பிட்ட கட்டுப்பாடோ, வரை யறையோ இல்லாமல், கற்பனைச் செழிப்பினைக் கட்டுக்குள் அடக்காமல் அவிழ்த்துவிட்டுப் பறக்கத் தொடங்குவது. அது ஊஞ்சல் தொடர்பானதாக இருக்கலாம்; அல்லது இல்லாமல் இருக்கலாம். ஆனால் அதில் ஆட்ட வரையறை என்ற நோக்கம் இடம்பெறும். முருகியல் நோக்கில் இரண்டும் ஒன்றியிருந்தாலும், படைப்பியல் நோக்கில் வேறுபடுகின்றன.

இலக்கியம் என்ற வகைப்பாடு மேலும் கிளைக்கக்கூடிய தன்மைத்து. இதனை அடிப்படை நிலையில்,

இலக்கிய **ஊஞ்சல்**
**ஊஞ்சல்** இலக்கியம்

என்ற இரண்டாகப் பகுக்கலாம்.

இலக்கிய **ஊஞ்சல்** என்பது இலக்கியத்தில் ஊஞ்சல் என அமையும். சங்ககாலந் தொடர்ந்து இன்றுவரை எழுந்திருக்கின்ற இலக்கியங்களில் வரும் ஊஞ்சல் தொடர்பான குறிப்புகள் இதன்பாற் படும் ஊஞ்சல் இலக்கியம் என்பது, குறிப்புகள் உறுப்புகளாக மாற்றம்பெற்று—அவை இலக்கியவகையாக உருவெடுத்து, சிற்றிலக்கியம் என்ற முத்திரையைப் பெற்றதைக் குறிக்கும். வேறு வகையில் சொல்வதானால் வளர்ந்து வாழும் ஊஞ்சல் சிற்றிலக்கியங்களைக் குறிக்கும். இவ்விரண்டில் முன்னது தொடக்கம் பின்னது தொடர்ச்சி அல்லது வளர்ச்சியாகும்.

இலக்கியப் பகுதியைத் தொடர்ந்து விழாவூசல் விழாவல்லா ஊசல் என்று இரண்டாக்க முடியும். விழாக்கள் என்னும்போது பண்டிகைளும் அதன்கண் அடங்குதல் முறைமை. திருமணம், ஓணம், திருவாதிரை, ஆடிப்பெருக்கு, நலுங்கு போன்ற காலங்களில்—விழாக்களில்—பண்டிகைகளில் ஆடப்படும் ஊஞ்சல் அவ்வப்பெயரைத் தாங்கி நிற்கும்.

திருமண ஊஞ்சல் என்பது இரண்டாகக் காண இடமளிக்கின்றது. பொதுவாக உள்ள ஊஞ்சல் பாடலை அதாவது, பொன்னூஞ்சல் பாடல்களையோ, நாயகியார் ஊஞ்சல் நாயகரூஞ்சல் இவற்றின் பாடல்களையோ பாடி மணமக்களை ஊஞ்சலில் வைத்து ஆட்டி மகிழ்விப்பதும், ஆடி மகிழ்வதும் முதல் வகையினது. மணமகனும்—மணமகளும் எழில்கோலம் கொண்டு திருமணமேடையில் அமர்ந்திருக்கும் காட்சியைக் கண்ட புலவன் புகழ்ந்து ஊஞ்சல் பாடல்களைப் படைப்பது இரண்டாம்வகை. இங்குப் புலவன் பாடும் பாடல்களில் பாடப்படுவோரின் முன்னோர் சிறப்பு, அவர்தம் பெருமை பண்பு இவற்றுடன் அவர்களைப் புகழ்ந்து வாழ்த்துதல் போன்றன இடம்பெறும்.

முன்னர் ஒரு குறிப்பிட்ட இறைவன் அல்லது இறைவி பற்றி—இறைவன், இறைவி இருவர் பற்றி ஊஞ்சல் பாடல்கள் பாடியிருப்பான். அவற்றையே பின்வருவோரும் திரும்பவும் இசையும் பக்தியும் பெருகப் பாடி அத்தலத்து இறைவன், இறைவியரை பரவுவதும் உண்டு. அது அந்தந்த ஆலயத்திற்கு என்று விழாக்காலமாகக் கொள்ளப்பட்ட நாட்களிலே மட்டும் நிகழும். அப்போது இருவரின் உருவமும் மூலஸ்தானத்திலிருந்து—நேரம் பார்த்து—நாள்பார்த்து வெளிக்கொணரப்பட்டு நீராட்டப்படும். ஊஞ்சல் சுத்தம் செய்யப்பட்டு, பொட்டு வைத்து அலங்காரம் செய்யப்படும். குறித்த நேரத்தில் ஊஞ்சல் மண்டபத்திலோ, ஊஞ்சலுக்கென்று அமைக்கப்பட்ட இடத்திலோ துணிகளிட்டு ஒப்பனை செய்யப்பட்டு இறைவன் (வி) ஊஞ்சலில் வைத்துப் பாடல்பாடி ஆட்டப்படுவர். அதனைக் **கல்யாண உற்சவம்** என்றும் **ஊஞ்சல் விழா** என்றும் அழைப்பர்.

ஓணவிழா என்பது திருமாலின் பிறப்பு நாளான ஓணநாளில் கொண்டாடப்படுவது. இன்றைய தமிழகத்தில் இவ்விழா கொண்டாடும் வழக்கில்லை. ஆனால் பழந்தமிழ் நாட்டின் பகுதியாகிய சேரநாட்டில் இவ்விழா மலையாள மக்களால் சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றது. ஆனால் இது ஒரு சமயவிழாவாக

இல்லாமல் நாட்டு விழாவாக்க கொண்டாடப்படுவது குறிப்பிடத் தக்கது. இன்று ஆவணி அவிட்டம் என்று குறிக்கப்படும் ஒன்றே அன்று ஓண நாளாகக் கருதப்பட்டது.[17] இன்றும் கேரளாவிலும் அதை ஒட்டிய தமிழ்நாட்டுப் பகுதியிலும் ஊஞ்சல் இடம் பெறுகின்றது. தமிழ்நாட்டுப் பகுதியில் ஊஞ்சலை ஓணநாள் மட்டும் அதற்கென்று அமைக்கப்பட்டு இருக்கின்ற கால்களில் மாட்டி ஆடி மகிழ்வர். மற்ற நாட்களில் அவற்றைக் கட்டி வைத்து விடுகின்றனர். இரண்டு மரங்களுக்கிடையே ஒரு மரத்தைக் கட்டி அதில் ஊஞ்சல் தொங்கவிட்டு ஆடி மகிழ்கின்ற வழக்கம் கேரளாவில் இன்றும் உள்ளது. அப்போது பாடல்பாடி ஆடுகின்றனர்.

ஒன்றாவது கரிமலை மேலே
ஒருமயில் ஆடுதே—
யார் சொல்லி ஆடுது
என்தேவதாரு பொன்மயிலே—

யக்ஷிகளும் முனிவர்களும்
சொல்லித்தான் ஆடுதா

சரிதான்! சரிதான்! பொன்மயிலே
நாளைவந்திங்கு ஆடிடுவாயா—

ரண்டாவது கரிமலை மேலே
ரண்டுமயில் ஆடுதே

யார்சொல்லி ஆடுது
என் தேவதாருப் பொன்மயிலே

---

17 ஆவணி மாதத்தே திருவோண நட்சத்திரத்தில் வர வேண்டிய பௌர்ணமி அடுத்த அவிட்ட நாளிலும் வரக் கூடியது என்பதும் அப்போது அவ்விரண்டு நட்சத்திரங் களும் சடங்கு, விழா முதலியன நடத்துதற்கு உரியவை யாம் என்பதும் அறியத்தக்கன. அந்தணர் முதலியோர் ஆண்டுக்கொருமுறை புதுப்பூணூல் தரித்துப் புரியும் சிராவணச் சடங்கு நிறைமதி நாளான ஆவணி ஓணத் துக்கு உரியதேயாயினும் அஃது அடுத்த அவிட்ட நாளி லும் நிகழ்வதும் அதனால் ஆவணியவிட்டம் என்றும் அச் சடங்கு பெயர் கொண்டு வழங்குவதும் இங்கே ஒப்பிடத் தக்கன.

—கட்டுரை மணிகள், மு. இராகவையங்கார், பக். 29.

யக்ஷிகளும் முனிவர்களும்
சொல்லித்தான் ஆடுதா
சரிதான்! சரிதான்! பொன்மயிலே
நாளையும் வந்திங்கு ஆடிடுவாயே

என்பது போன்று மூன்று நான்கு என்று தொடர்ந்து பத்துவரை செல்லும் என்று குறிக்கின்றனர்.[18]

இந்த நாளில் / நாட்களில் ஆடப்படுகின்ற ஊஞ்சல் **ஓண விழா ஊஞ்சல்** அல்லது **ஓண ஊஞ்சல்** என்று அழைக்கப்படுகின்றது. இதுபோன்றே மற்ற விழாக்களும் அவ்வப்பெயருடன் ஊஞ்சல் இணைய அமைகின்றன.

விழாவல்லாத ஊஞ்சலை இறைத் தொடர்பு ஊஞ்சல், தனி மனிதத் தொடர்பு ஊஞ்சல் என்று இரண்டாக்கலாம். இறைத் தொடர்பு ஊஞ்சல்கள் சைவம், வைணவம், வீரசைவம், பௌத்தம் என்ற நான்கு மதங்களுக்கும் அமைவதால் அவற்றை யும் மதப் பெயர் கொண்டு குறிக்கலாம். இவ்விறைத் தொடர் பான இலக்கியத்தை இதன் தொடர்பு நிலையில் வாழ்த்துப் பாடல், வாழ்த்து இலக்கியம் என்று முறைப்படுத்தலாம். வாழ்த் துப் பாடல் என்பது ஊஞ்சலில் இறைவன் இறைவியை வைத்து முன்னையோரின் பக்திப் பனுவல்களை மதத்திற்கேற்பப் பாடி மகிழ்வது. இரண்டாவது வகையினது இறைத் தொடர்பான ஊஞ்சல் சிற்றிலக்கியத்தைச் சுட்டுவது. இறைநிலை ஊஞ்சல் வேறு வகையில், இறைவன், இறைவி, இறையடியார் என்றும் பாகுபடுத்தப்படும். தனி மனிதர்கள் பற்றிய ஊஞ்சல்கள் மன்னர், தலைவர், (பகுதி) ஊர்த்தலைவர், பொதுமாந்தர் (செல்வந்தர்) போன்றோருக்கு அமைந்திருப்பதை அறிகின்றோம். இவற்றை நாம் குலம் / குலமின்மை அல்லது சார்பின்மை என்ற வகையிலும் காணலாம். வேளாளருக்கும், செங்குந்தருக்கும் அமைக்கப்பட் டிருக்கின்ற ஊஞ்சல்கள் குலச்சார்பினவாகின்றன.

## இலக்கியத்தில் ஊஞ்சல்

ஊஞ்சல் பற்றிய குறிப்புகளும், செய்திகளும் பல்வேறு நிகழ்ச்சி களுடன் தொடர்புபடுத்தப் பட்டுப்பேசப்படுகின்றன. இத்தன்மை

18. மலையாள நாட்டுப்புறப் பாடல்கள், (மொ. பெ) தமிழவன், ப. 33

கால அமைப்பிற்கேற்பவும், இலக்கியத் தன்மை, சூழல் இவற்றைப் பொருத்தும் தம்முள் மாற்றம் பெற்றமைகின்றன. ஊஞ்சல் பற்றிய செய்திகள் சங்க காலம்தொடங்கி இன்றைய இலக்கியம் வரை பரவலாக இடம்பெற்று வருகின்றன. இலக்கியங்களில் வருகின்ற ஊஞ்சல்' 'ஊசல்' என்ற சொற்கள் குழை, குண்டலம் போன்றன ஆடுவதையும் மன உளைச்சலையும் குறிப்பதாக அமைகின்றன.

சங்ககால இலக்கியங்களில் வரும் ஊஞ்சல் அசோக மரம், ஞாழல்மரம், வேங்கை மரம், வேம்புமரம் போன்ற மரங்களில் கட்டப்பட்டதாகக் குறிக்கப்படுகின்றது. ஊசல் ஆடுவோர் உயர்ந்த கிளைகளில் நீண்ட கயிற்றைக் கட்டி ஆடுவது வழக்கம். அப்பொழுதுதான் வேகமாக ஆடுவதற்கு வசதியாகவும் அவ்வாறு ஆடும்போது கீழே விழாமல் இருக்க ஏதுவாகவும் அமையும்

ஊஞ்சல் பெண்களுக்குரிய விளையாட்டாகவே தொடக்க காலந்தொட்டு அமைந்திருக்கின்றது. சங்ககால இலக்கியங்களில் ஆண்கள் ஆடியதாகக் குறிப்பேதுமில்லை. ஆனால் பொழுது போக்கிற்காக அமைக்கப்பட்ட ஊஞ்சல்களிலும், திருமணத்தின் போது அமைக்கப்படுகின்ற திருமண ஊஞ்சல்களிலும். திருவிழா நேரங்களில் உருவாக்கப்படுகின்ற ஊஞ்சல்களிலும் பெண்கள் மட்டுமின்றி ஆண்களும் ஆடி மகிழ்ந்தனர். சங்ககால மகளிர் 'ஊசல் மேவல்சேயிழை மகளிராகத்' திகழ்ந்தனர். அங்குச் சுட்டப் படுகின்ற ஊஞ்சல்கள் பெண்களுடன் தொடர்பு படுத்தப் படுவ தோடின்றி குரங்கின் ஊஞ்சலாட்டத்தில் **பெண் குரங்கு** என்று சுட்டுவது நினைந்தின்புறக் கூடியது.

சங்ககால இலக்கியத்தில் பல பாடல்கள் தலைவன் ஆட்ட தலைவி ஆடியதைக் குறிக்கின்றன. அது அவர்களே மனதால் அறிந்து ஆடியதும். விரும்பிக்கேட்க ஆடியதுமாகும் தோழியர் விளையாட்டு நிலையில் தலைவியை ஆட்டியதையும் நாம் சங்க நூல்கள் வழி அறிகின்றோம். எனவே சங்க ஊசல்கள் காதல் நிலையிலும் விளையாட்டு நிலையிலும் அமையக் காண்கின்றோம். அகநானூற்றுப் பாடல் ஒன்று தலைவி ஆடிய நிலை, அவளைத் தலைவன் ஆட்டிய நிலை இரண்டையும் விளக்குகின்றது.

நெல்லி நீடிய கல்லறை கவாஅண்
அத்த ஆலத்து அலந்தலை நெடுவீழ்
தித்திக் குரங்கில் திருந்த உரிஞு
வினையுடை முன்கை அளைஇ

பயிலரும் பிணையில் பசுங்காழ்க் கோவை
அகலமை அல்குல் பற்றிக் கூந்தல்
ஆடுமயிற் பீலியிற் பொங்க நன்னும்
தானமர் துறைவன் ஊக்க ஊங்கி

(அகம், 385)

மரத்திலே தழும்பேறும்படி கட்டி ஊஞ்சலாடிய நிலையைக் குன்றம் கண்டு தலைவிக்கு நிலை உணர்த்தி தலைவனுக்கு அறிவுறுத்தவும் வேண்டிக் கபிலர் படைத்த நற்றிணைத் தோழியின் கூற்று வெளிப்படுத்துகிறது.

கருங்கால் வேங்கைச் செவ்வீ வாங்குசினை
வடுக்கொளப் பிணித்த விடுமுரி முரற்சிக்
கைபுனை சிறுநெறி வாங்கிப் பையென
விசும்பாடு ஆய்மயில் கடுப்பயான் இன்று
பசுங்கா ழல்குல் பற்றுவன் உளக்கிச்
செலவுடன் விடுகோ தோழி

(நற்றிணை, 222)

ஊசல் அமைப்பு, சூழலுக்கும் இடத்திற்கும் தேவைக்கும் ஏற்ப பல்வேறு மாற்றங்களைப் பெறுகின்றன. மலையின் கண்ணும், தினைப்புனத்தினருகிலும், அருவியருகிலும், படப்பையிலும் ஊஞ்சலமைத்ததைச் சங்க இலக்கியங்கள் வழியாக அறிய முடிகின்றது.

மேற் குறித்தனவற்றுள் அருவியின்கண் அமைக்கப்பட்ட ஊஞ்சல், மகளிர் விளையாடுதற் பொருட்டு அமைக்கப்பட்டது. தினைப்புனத்தில் கதிர்முற்றிய காலத்தில் அங்குக் காவல்காக்கும் மகளிர் பொழுதுபோக்குந் தன்மையதாகவும் விளையாட்டுத் தன்மையதாகவும் ஊஞ்சல் அமைக்கப்பட்டது. இவ்வகை ஊஞ்சல் கதிர்முற்றுங் காலத்திற்கேற்ப மாறுபடுந் தன்மைத்து. உப்பங்கழியில் அமைந்த ஊஞ்சலில் ஆடியது கடற்கரை சார்ந்த மகளிரின் செயல்களாகும் படைப்பை இல்லத்தின்கண் அமைவதால் அது ஏற்பாடு செய்து ஆடிய ஒன்றாகிறது.

பல மரங்கள் அமைந்திருக்கின்ற இடங்களில் தம்மியல்பு, நன்மை, வசதி போன்றவற்றைக் கருதி ஏதேனும் ஒரு மரத்தை ஊசலமைக்கத் தேர்ந்தெடுக்கின்றனர். அந்த மரத்திலுள்ள கிளைகள் பலவற்றுள் ஆடுவதற்கு, சமமான நிலையில் செல்லும்

பொருத்தமானதொரு கிளையை ஒதுக்கி, அதில் ஊஞ்சலமைத்து ஆடி மகிழ்வர். அப்படி ஊஞ்சலுக்கென்று ஒதுக்கப்பட்ட கிளையை வெட்டாமல் பாதுகாத்தனர்.

தோடுவளர் பைந்திணை நீடுகுரல் காக்கும்
ஒண்டொடி மகளிர்க்கு ஊசலாக
ஆடுசினை ஒழித்த கோடிணர்

(கலித்தொகை, 368)

இது தமிழர்தம் பரந்துபட்ட பண்பாட்டுணர்வைக் காட்டும்.

காப்பியங்களிலும் நாம் ஊசல் பற்றிய குறிப்புகளைக் காணலாம். ஆனால் அவற்றில் காணக்கிடக்கின்ற குறிப்புகள் சங்க இலக்கியங்களில் குறிப்பிடப் பட்டது போன்று—தெளிவாக அமையவில்லை. அவற்றில் ஆடப்பட்ட மரங்களும், ஆடிய மகளிரும் சுட்டப்படுகின்றன. கற்பனைகள் மிகுதியும் கலந்திருப் பதால், தேவமாதர்கள் பெரும்பான்மையான இடங்களில் சுட்டப்படுகின்றனர்.

சிலப்பதிகாரத்தில் ஊசல்வரிப் பாடல்கள் மூன்று காணப் படுகின்றன. இவை சேரனைப் புகழ்ந்து பாடும் வண்ணம் அமைந்துள்ளன. பெண்கள் ஊசலில் அமர்ந்து மன்னரைப் புகழ்ந்துபாடி ஆடுமாறு அமைகின்றன ஊஞ்சல் இலக்கியங்களில் காணப்படும் தலைவனைப் புகழ்வதாயப் பாடற்கரு சிலப்பதிகார ஊசல்வரிப் பாடல்களிலிருந்து தோற்றம் பெற்றிருப்பதாகக் கருதலாம். ஆனால் ஊசல் இலக்கியம் போன்று பாடப்படுபவர் ஆடுவது போன்ற குறிப்புக் காணப்படவில்லை.

கடல் வண்ணனாகிய திவிட்டன் என்பவனின் புகழைப்பாடிப் பெண்கள் ஊஞ்சலாடுவதாகச் சூடாமணியில் பாடலொன்றுள் ளது.

கோதையும் குழையின் பட்டின்
கொய்சகத் தலையுந் தாழ
மாதர்வண் டொருங்கு பேர
மழையிடை நுடங்கு மின்போல்
போதலர் பொதும்பிற் றாழ்ந்த
பொன்னெழி லூச றன்மேல்
ஓதநீர் வண்ணற் பாடி
நூழிலூ ழியங்கு வாரும்

(சூளாமணி, பா. 1639)

பக்தி இலக்கியத்தில் அமைந்துள்ள **திருப்பொன்னூசல்** ஊஞ்சல் பாடல்கள் நமக்கு ஊஞ்சல் பாடல்களின்—ஊஞ்சல் சிற்றிலக்கியத்தின் வளர்ச்சியைக் காட்டுகின்றன. தலைவன் தலைவியரைக் கொண்டு நடந்து வந்த ஊசல் இங்கு இறைவனுக் குச் செல்கின்றது. ஊசல் இலக்கியத்திற்கு முன்னோடிகளாய்' தோற்றத்திற்கு ஏதுவாய் இப்பாடல்கள் அமைந்துள்ளன. ஊசல் தனியானதொரு இலக்கிய வகையாக வளர, இதுவே அடிப்படை யாயிற்றெனலாம். மன்னனையும் இறைவனையும் புகழ்ந்து பாடுவதாக இவை அமைகின்றன. எனினும் இந்நூலிலும் சிலப்பதி காரம் சூளாமணி இவை போன்று பெண்கள் விளையாடும் போது பாடுவதாக அமைகின்றது. பாட்டுடைத் தலைவர்களை ஊசலாடு பவர்களாகக் கூறவில்லை பெண்கள் ஊசலாடுமாறு காட்டாது, தங்கள் தலைவரே ஊசலாடுமாறு அமைத்துப் பாடுவது இதனி னின்றும் வளர்ச்சியடைந்த நிலையாகும்

மன தின் நிலையினை விளக்க விழைந்த அப்பர் அதனை ஊசல் ஒப்பீட்டோடு பின்வருமாறு பாடுகின்றார்.

உறுகயி றூசல் போல ஒன்றுவிட் டொன்று பற்றி
மறுகயி றூசல்போல் வந்து வந்துலவு நெஞ்சம்
பெறுகயி றூசல்போலப் பிறைபுல்கு சடையாய்ப் பாத
தறுகயி றூசலானே னதிகை வீரட்டானீரே

**(அப்பர் தேவாரம் 4, 26)**

சிற்றிலக்கிய வகைகள் சில ஊஞ்சல் பற்றிய குறிப்புகளைத் தந்து நிற்கின்றன. கலம்பகம் பிள்ளைத்தழ் இவற்றிலும் ஒரோ வழி உலா இலக்கியத்திலும் அவை இடம் பெறுகின்றன.

கலம்பத்தில் பதினெட்டு உறுப்புகளுள் ஒன்றாக ஊசல் அமைகின்றது. எனவே அவ்வகையில் பெரும்பாலான கலம்பக இலக்கியங்கள் ஒரு பாடல் ஊசல் பாடலாக அமைகின்றது. கலம்பகத்தில் தொடக்க காலத்தில் பாட்டுடைத் தலைவரே ஊசலாடுமாறு அமையாது பெண்கள் ஊசலாடிக் கொண்டு தலைவனைப் புகழ்நது பாடுமாறு அமைந்துள்ளது.

ஓடரிக்கண் மடநல்லீர் ஆடாமோ ஊசல்
உத்தரியப் பட்டாட ஆடாமோ ஊசல்
ஆடகப்பூண் மின்னாட ஆடாமோ ஊசல்
அம்மென்மலர்க் குழல்சரிய ஆடாமோ ஊசல்

கூடலர்க்குத் தெள்ளாற்றில் விண்ணருளிச் செய்த
கோமுற்றப் படைநந்தி வேலய மார்த்தாண்டன்
காடவற்கு முன்தோன்றல் கைவேலைப் பாடி
காஞ்சிபுர மும்பாடி ஆடாமோ ஊசல்

என்ற நந்திக்கலம்பகப் பாடல் (31) அதை உணர்த்தும்.

பிள்ளைத் தமிழ் பாட்டுடைத் தலைவரையே ஊசலாடுமாறு வேண்டிக் கொள்வது போன்று காணப்படுகின்றது. பிள்ளைத் தமிழில்—பெண்பால் பிள்ளைத்தமிழ் நூல்களில் 'ஊசல் பருவம்' பத்து பருவங்களுள் ஒன்றாக அமைகின்றது. ஊசல் பருவம் பத்து பாடல்களைக் கொண்டதாய், ஆசிரிய விருத்தத்தில் காணப்படு கின்றது. உலாவில் தலைவனைக் காணவரும் பெண்களைச் சுட்டு மிடத்து அவர்கள் ஊஞ்சலாடிய நிலையும் குறிப்பிடப்படுகின்றது. உலாவில் சிறுகுறிப்பாகவும், கலம்பகத்தில் உறுப்பாகவும் இந்த ஊசல் அமைகின்றது. பிள்ளைத்தமிழில் காணப்படும் ஊசல் பருவப் பாடல்கள் ஊஞ்சல் இலக்கியப் பாடல்களுக்குப் பெரிதும் ஒத்துப் போவதைக் காண முடிகின்றது.

உண்மையான விளையாட்டு நிலையைக் காட்டும் வகையில் சங்க இலக்கியப் பாடல்கள் அமைந்தன. சிலப்பதிகாரமும் திருப்பொன்னூசல் ஊஞ்சல் பகுதியும் பாடலும் ஆடலும் கலந்த ஒன்றாக அமைந்தது. பிள்ளைத்தமிழ் நூல்களில் பெண்களுக்கு மட்டும் உரியதாக, பாட்டுடைத் தலைவியின் பிள்ளைப் பருவத்தில் ஆடிமகிழ்வதாகக் கற்பித்துப் படைக்கப் பட்டுள்ளது. அப்பாடல்கள் பாடுபவரே ஆடாமல் அவரைப் புகழ்ந்து ஊசலாடுமாறு புலவர் பாடுவதாக அமைகின்றது. இந்த நிலையை நுணுகி ஆராய்ந்தால் இது பழந்தமிழ் இலக்கியங்களில் வரும் ஊசல் பற்றிய பாடல்களுக்கும் ஊசல் இலக்கியங்களின் அமைப்புக்கும் இடைப்பட்டது என்பதை அறியலாம். ஊசல் இலக்கியங்கள் பக்தி உணர்வை வெளிப்படுத்துவதற்குரிய கருவி யாகப் பயன்படுத்தப்பட்டு போலச் செய்தலாக அமைக்கப் பட்டது எனலாம்.

## ஊசல் சிற்றிலக்கிய உருவாக்கமும் காலமும்

ஊசல் இலக்கியங்கள் ஒவ்வொன்றும் தோன்றிய காலத்தைத் தெளிவாக வரையறுக்க இயலவில்லை. முதல் ஊசல் இலக்கியம் தோன்றிய காலமும் தெளிவாகப் பெற முடியவில்லை. எனினும்

கிடைத்த ஊசல் இலக்கியங்களைக் கொண்டு அதன் காலத்தைப் பதினேழாம் நூற்றாண்டிற்குப் பின் தோன்றத் தொடங்கியதாகக் கூறலாம். பதினெட்டுப் பத்தொன்பதாம் நூற்றாண்டுகளில் இவ்விலக்கிய வகை மிகுந்த செல்வாக்குப் பெற்றிருப்பதைக் காணலாம்.[19]

ஆழ்வார்களும் நாயன்மார்களும் மக்களிடம் பக்திப் பரவச மூட்டும் இலக்கியங்களைப் பாடிச் சென்ற காலக் கட்டத்தில் கடவுளை வாழ்த்தும் உணர்வு மக்களிடை மிகுந்து காணப்பட்டது. அவர்கள் கடவுளே எல்லாமாய் எண்ணிச் செயல்பட்டனர்—தொழுதனர். புராணக்கதைகளையும், கடவுள் தொடர்பான செவி வழிச் செய்திகளையும் மக்கள் பெரிதும் ஏற்றுக் கொண்டனர். இதனால் பல சிற்றிலக்கியங்கள் பக்திப் பொருண்மையைக் கொண்டு உருவெடுக்கத் தொடங்கிற்று. அவ்வகையில் ஊசலும் ஒன்று. கோவில் வழிபாடும், விழாக்களும் அக்கால கட்டத்தில் பெருகியதால் அவையும் ஒருவகையில் இச் சிற்றிலக்கியங்களின் தோற்றத்திற்குக் காரணமாய் அமைந்தன.

கோயில்களில் ஊஞ்சல் மண்டபங்கள் சைவம், வைணவம் என்ற பாகுபாடின்றி இரு சமயக் கோவில்களிலும் அமைக்கப் பட்டிருந்தன. ஊஞ்சல் விழாவின்போதும், வசந்த காலங்களில் கொண்டாடப்படும் வேறுசில விழாக்களிலும் இப்பாடல்களைப் பாடுகின்றனர். ஊஞ்சல் விழாக்கள் இன்றும் கொண்டாடப்பட்டு வருகின்றது[20]

**ஊசல்—இலக்கணம்**

ஊசல் இலக்கியங்களைப் பாடுகின்ற புலவர்கள் பெயரமைக்கின்ற முறையைக் குறித்து வரையறை எதுவும் பாட்டியல் நூல்களில் கூறப்படவில்லை. ஆனால் ஊஞ்சலைப் பாட்டியல்கள் பொன்னூசல், மணியூசல் என்ற சொற்களால் சுட்டுகின்றன. ஊஞ்சலுக்கு இலக்கணம் கூறும் அனைத்துப் பாட்டியல் நூல்

19. வே. சீதாலட்சுமி **ஊசல்,** தமிழிலக்கியக் கொள்கை.—7 ப. 103

20. தெ. பொ. மீனாட்சி சுந்தரனார், தாய்லாந்தில் திருவெம்பாவை, ப. 18

களும், ஊசல் இலக்கியங்கள் **ஆசிரியவிருத்தம்** அல்லது **கலித்தாழிசை** யாப்பில் அமையவேண்டும் என்று குறிக்கின்றன. யாப்பு நிலையில் கழித்தாழிசை ஆசிரிய விருத்தம் இரண்டையும் சுட்டுவனவும், அவற்றுள் ஒன்றை மட்டும் சுட்டுவனவும் அப்பாட்டியல்களிடையே காணப்படுகின்றன. பிள்ளைத் தமிழுக்குக் கூறுவன போன்று இங்கும் சுற்றத்தளவு, கிளையள்வு என்பன பாட்டியல் பகுதிகளில் சுட்டப்படுகின்றன. இச்சுற்றத்தளவும், கிளையளவும் தெளிவாக வரையறுத்து விளக்கப்படவில்லை. அவை போதிய விளக்கம் பெறுதல் கின்றது

வரன்முறை **சுற்றத்து அளவாம்** பொன்னூசல் வடிவதுற்றே
உரைசெய் கலித்தாழிசையே பொன்னூசல் என்று ஓதுவரே
(நவநீதப் பாட்டியல், செய். 25)

வண்ணகம், தாழிசை என்பன கொண்டு இரண்டோ பலவோ அடிகள் தம்முள் அளவொத்து அமையும் கலிப்பா உறுப்பான தாழிசையிலும் இவ்விலக்கியம் வரலாம் என்பது பெறப்படுகின்றது.

**ஊசல்** என்ப ஊசலாய்க் கிளையளவு
ஆசிரிய விருத்தமாகப் பாடலும்
தன்னொலிவரும் கலித்தாழிசைப் பாடலும்
வண்ணகம் முதற்கண் வரினும் இயல்பே
(தொன்னூல் விளக்கம், 276)

அகவல் விருத்தம் கலித்தாழிசையால்
பொலிதரு **கிளை**யொடும் புகலுவது ஊசல்
(இலக்கண விளக்கம், 845)

என்ற பகுதிகள் மேற்கண்ட கருத்தை வலியுறுத்தும் சான்றுகளாக அமைகின்றன.

ஊஞ்சல் இலக்கியத்தின் ஒவ்வொரு பாடலும் **'ஆடீர் ஊசல்'** என்றோ, **'ஆடோமோ ஊசல்'** என்றோ முடியவேண்டுமென்று பாட்டியல்கள் வரையறை தருகின்றன. இவ்விரண்டையும் சுட்டும் அனைத்துப் பாட்டியல்களும், **'ஆடீர்'** என்பதை முன்னும், ஆடாமோ என்பதைப் பின்னும் அமைத்துள்ளன.

இவ்வமைப்பு முறை இந்த இரண்டு சொற்களில் ஆடீர் என்ப தற்கு முதன்மை கொடுத்தனரோ என்று எண்ண இடமளிக் கின்றது. கிடைக்கின்ற எல்லா ஊஞ்சல் இலக்கியங்களும் **ஆடீர்** என்றே முடிகின்றன. **ஆடாமோ** என்னும் முடிவில் எந்த ஓர் ஊசல் இலக்கியமும் முடிவு பெற்றதாகத் தெரியவில்லை.

இப்படி அமைந்திடும் முடிவு நிலைக்கும் காரணமுண்டு. கலம்பகத்தில் அமைந்த ஊசல் பாடல்கள் ஆடாமோ, ஆடீர் என்ற இரண்டு முடிவையும் கொண்டு நிற்கின்றன. அவை மேலும், **ஆடுக பொன்னூசல், ஊசலாடே** எனவும் முடிவு கொண்டு அமைகின்றன. பிள்ளைத் தமிழின் ஊசல் பருவப் பாடல்கள் **ஊசலாடியருளே** என்ற தொடரைப் பெரும்பான்மை யும் முடிவாகக் கொண்டுள்ளன. இவற்றிற்கும் ஊஞ்சல் இலக்கியத்திற்கும் உள்ள தொடர்பு இந்த அமைப்பு நிலைக்கு காரணங் காட்டுவதாய் அமைகின்றது.

பெண்கள் தாமமர்ந்தாடும்போது மட்டுமே ஆடாமோ ஊசல் என்று தம்மையும் உளப்படுத்திக் கூறமுடியும். தலைவனோ, இறைவனோ ஆடுவதாகப் படைப்பாளன் கறபித்துப் பாடும் போது, ஆடீர் ஊசல் என்று முன்னிலையில் மட்டுமே அமைய முடியும். இவ்வகையில் இரண்டாம் நிலையில் ஊசல் இலக்கியங் கள் கற்பனையில் பிறரைப் பாடுவதாக அமைவதால் **ஆடீர்** என்று மட்டுமே அமைகின்றன.

ஊஞ்சல் இலக்கியங்கள், பாட்டியல் நூல்கள் கூறும் மங்கலப் பொருத்தம் முதல் கணப்பொருத்தம் வரையிலான பத்துப் பொருத்தங்களோடும் பெரும்பாலும் அமைந்து வருவதைக் காண முடிகின்றது. சில இலக்கியங்களில் மட்டும் கணப்பொருத்தம் அமையவில்லை.

ஊஞ்சல் இலக்கியங்கள் பத்துப்பாடல்களைக் கொண்டதாக அமையக் காண்கிறோம். ஊஞ்சலுக்கான பாடல் வரையறை யைப் பற்றி, பெரும்பாலான பாட்டியல் நூல்கள் இலக்கணம் கூறவில்லை. பத்தொன்பதாம் நூற்றாண்டினைச் சார்ந்த பிரபந்த தீபம் (நூற்பா. 19)

ஐயிரு செய்யுள் அறைதல் முறையே

என்று விளக்கம் தருகின்றது. இந்த வரையறையின் படி பெரும் பாலான ஊஞ்சல் இலக்கியங்கள் அமைய, சில இலக்கியங்கள் பத்துப் பாடல்களுக்கு மிகுந்தும் காணக்கிடக்கின்றன.

## ஊஞ்சலிலக்கியங்களின் வடிவியலமைப்பு பெயர்

ஊஞ்சல் இலக்கியங்கள் பெரும்பான்மையும் பாட்டுடைத் தலைவரின் பெயரினையே நூற்பெயராகக் கொண்டிருக்கின்றன. ஊஞ்சல், ஊசல், ஊசல்பாட்டு, ஊஞ்சல் பாட்டு, ஊஞ்சல் பாமாலை, ஊசல் பாமாலை, ஊஞ்சல் கவிதை ஊஞ்சல் பதிகம், ஊசல் பதிகம், ஊசல் பிரபந்தம், ஊஞ்சல் பிரபந்தம் என்று அவற்றின் பெயரமைப்பின் இறுதித் தொடர்கள் விளங்குகின்றன. இன்னும் திருவூசல், கல்யாண ஊசல், திருக்கல்யாண ஊசல், நலுங்கு ஊசல் எனவும் அவற்றின் பெயர்கள் அமைகின்றன. பாட்டுடைத் தலைவரின் பெயரைச் சுட்டி அத்துடன் **மீது ஊஞ்சல்** என அமைக்கின்ற நிலையையும் இந்த இலக்கிய வகையினுள் காணமுடிகின்றது. அவ்வகையில் முருகனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்ட ஊசல் **முருகன் மீது ஊசல்** என்பது போன்று அமையும். அனந்த கிருட்டிண ஐயங்கார் என்பவர் தமது நூலுக்கு **மணவாள மாமுனி ஊசற்றிருநாமம்** என்று பெயரமைக்கின்றார். ஆனால் இப்படி—'ஊசற்றிருநாமம்' என்று வேறு ஊஞ்சல் இலக்கியம் பெயர் பெற்றதாகத் தெரியவில்லை. தன்னினங்குறித்து ஆக்கப்பட்ட ஊசல்கள் **வேளாளரூசல் செங்குந்தரூசல்** என்று பெயர் பெறுமாறு அமைக்கப்பட்டுள்ளன.

## எண்ணிக்கையில் மாறுபாடு

ஊஞ்சல் இலக்கியங்கள் பத்துப்பாடல்களைக் கொண்டதாக இருக்க வேண்டும் என்பர். அவ்வரையறைக்குப் பெரும்பாலான இலக்கியங்கள் உட்பட்டிருக்கின்றன. சிலவற்றில் மிகுந்தும் காணப்படுகின்றன. கிடைக்கின்ற ஊஞ்சல் இலக்கியங்களைக் கொண்டு நோக்கும் போது பத்துப்பாடல் சிற்றெல்லையாகவும், இருபத்தெட்டுப்பாடல் பேரெல்லையாகவும் காணப்படுகின்றது. பதினொன்று, பன்னிரெண்டு பாடல்களைக் கொண்ட ஊசல், எண்ணிக்கையில் பத்துப்பாடல்களைக் கொண்ட இலக்கியங்களுக்கு அடுத்த நிலையில் அமைகின்றது. பாடல் எண்ணிக்கை என்பது காப்புச் செய்யுளையும் உட்படுத்தியே கணக்கிடப்படுகின்றது. ஆனால் ஆசிரியர் சிலர் அவற்றை நீக்கிப் பாடலெண்ணிக்கையைக் கணக்கில் கொண்டு பாடுகின்றனர். அதனால் காப்பாக—அவையடக்கமாக அமையும் பாடல்கள் மிகுந்து காணப்படுகின்றன.

பத்துப்பாடல்களில் ஊஞ்சல் இலக்கியங்களை அமைத்தமைக்கும் காரணம் உண்டு. இறைவிழா போன்றவற்றில் தொடர்ந்து

பாடினால் கால நீட்டிப்பு ஏற்பட்டு பின்வரும் நிகழ்ச்சிகளுக்குத் தடையேற்படும். அவை கருதியும் பொருள் நுகர்வு, புலப்பாட்டுச் சுருக்கம் போன்றன கொண்டும் அவை பத்துப்பாடல்களுக்குள் அமைக்கப்பட்டிருக்கலாம். ஊஞ்சல் இலக்கியத்தின் முன்னோடியாக இருக்கும் திருவாசகத்தின் திருப்பொன்னூசல் பகுதியும், பிள்ளைத்தமிழ் இலக்கியங்களின் ஊசல் பருவங்களும் பத்துப் பாடல்கள் கொண்டு அமைக்கப்பட்டிருந்தன. எனவே அவற்றை அடியொற்றி இலக்கியம் படைப்போரும் அந்தப் பாடல் எண்ணிக் கையைப் பின்பற்றி தம்மிலக்கியப் படைப்புகளை உருவாக்கி யிருக்கின்றனர். கருத்துப் போக்கும், கற்பனை ஓட்டமும், பக்தி, பெருக்கும் பாடல்கள் மிகுந்தெழக் காரணமாகலாம்.

## உள்ளமைவு

நூலின் தொடக்கம் காப்பாக அமைகின்றது. ஒரு காப்புப் பாடல் அமைவது பெரும்பான்மை சிறுபான்மை இரண்டு காப்புப் பாடல்களும் அமைகின்றன. செங்குந்தர் பிரபந்தத் திரட்டில் அமைந்துள்ள **ஊசல்** என்னும் சிற்றிலக்கியம் இரண்டு பாடல்களைக் காப்பாகக் கொண்டு அமைந்துள்ளது.

தனிமனிதரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு நிகழும் ஊசல் சிற்றிலக்கியங்கள் விநாயகரைக் காப்புக் கடவுளாகத் தொழுகின்றன. சில இலக்கியங்கள் அவ்வாசிரியரின் விருப்பத் திற்கு இணைய வேறு கடவுளை / கடவுளரைக் காப்பில் போற்று கின்றன. புலவோர் சிலர் தம்மையும், தாம் பாடுவோர் பாடல் இவற்றைக் குறித்த செய்திகளையும் நூலின் காப்பில் பாடுகின் றனர். சில நூல்கள் காப்புப் பாடலின்றி தொடக்கமே நூலாகச் செல்கின்றது. நூல் பாடல்கள் பெரும்பான்மையும் ஒத்த நோக்குடையனவாகவே காணப்படுகின்றன.

## யாப்பு

ஊஞ்சல் சிற்றிலக்கியங்கள் ஆசிரிய விருத்தத்திலும், கலித் தாழிசையிலும் அமைந்து காணப்படுகின்றன. அதிகமான பாட்டியல் நூல்கள் கலித்தாழிசையை மட்டும் சுட்டி நிற்க, சில பாட்டியல் நூல்கள் இரண்டையும் குறித்துச் செல்கின்றன. ஆனால் ஊஞ்சல் இலக்கியங்கள் பெரும்பான்மை ஆசிரிய விருத்தத்திலும், சிறுபான்மை கலித்தாழிசையிலும் அமைந்து நிற்கின்றன. இம்முரண்பாடு ஆய்ந்து தெளிதற்குரியது. பிள்ளைத்

தமிழ் ஊசல் பருவப் பாடல்கள் ஆசிரிய விருத்தத்தில் அமைந்துள்ளமை குறிப்பிடத் தக்கது. நிலையாக நிறுத்தப்பட்டு முன்னும் பின்னும் அசைந்து வரும் ஊசல் அமைவிற்கேற்ப இந்தப் பாடல்களின் இசையமைப்பும் முன்னும் பின்னும் சென்று வரும் போக்குடன் காணப்படுகின்றன. ஊஞ்சல் சிற்றிலக்கியங்களில் ஆசிரிய விருத்தத்தில் அமைந்தனவே மிகுதியாக உள்ளன என்பதும் நினைவுகூரத் தக்கது.

## பாடலின் முடிவுநிலை

ஊசல் இலக்கியத்தின் பாடல்கள் தமது ஈற்றடியில் **ஆடீர் ஊசல்** என்ற முடிபைத் தாங்கி நிற்கின்றன. இப்படி முன்னிலைப் பன்மையாக **ஆடீர் ஊசல்** என அமைவதுடன் **ஆடுக பொன்னூசல்** என வியங்கோளாயும், **ஆடூசல்** என வினைத் தொகையாயும் அமைகின்ற நிலையினைக் காண்கின்றோம்.

மீனாட்சி சுந்தரம்பிள்ளை இயற்றிய **திருப்பொன்னூசலில்** ஆடுக பொன்னூஞ்சல்' என்றும், நாகூர் முகமது புலவர் பாடிய ஊஞ்சற் பாட்டில் 'ஆடுமூசல்' எனவும் அமைவது இவற்றிற்குச் சான்றுகளாகின்றன. பெண்பாற் பிள்ளைத்தமிழ் சிற்றிலக்கியங்களின் ஊசல் பருவப் பாடல்கள் **ஆடியருளே** என முடிகின்றன.

இவ்வகை இலக்கியங்கள் ஈற்றடியில் முடிபுச் சொற்களுக்கு முன்னர் பாட்டுடைத் தலைவரின் பெயரை அமைக்கக் காண்கின்றோம். அவ்வாறு அமைக்கும் போது அவ்வத்தலைவனைக் குறிக்க இயல்பாக வழங்குகின்ற பெயரை எல்லாப் பாடல்களிலும் குறிப்பது ஒரு முறை. அவனது பல பெயர்களையும் அவ்வகையில் அமைத்துப் பாடுவது மற்றொருவகை. அப்படித் தலைவனின் பெயரைச் சுட்டும் போது அவனது ஊரும் இணைத்துச் சிலவற்றில் சுட்டப்படுகின்றது. ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் இவ்வாறு அமைவதன்றி, சில இலக்கியப் பாடலின் ஒவ்வொரு அடியின் இறுதியிலும் இம்முடிவு நிலை அமைகின்றது. அவ்வாறு விளி அமையும் போது பாட்டுடைத் தலைவனின் பெயரும், ஊரும் இறுதி அடியில் மட்டுமே அமைகின்றன. இந்தந்த வரிகளில்—இத்தனைப் பாடல்களில் —அல்லது இந்தப் பாடலில் இச்சொற்பயிற்சி அமையவேண்டும் என்ற ஒரு வரையறை இல்லாது அவ்வப்படைப்பாளரின் மனப் போக்கிற்கும், கருத்து வளத்திற்கும், பாடப்படுவோரின் சிறப்புக்கும் ஏற்ப மாறுபட்டமைகின்றன.

## வாழ்த்தும் பண்பு

ஊசல் இலக்கியங்களின் இறுதிப் பாடல் வாழ்த்துப் பாடலாக (வாழி) அமைகின்றது. ஒரு பாடலன்றி அவ்வகையில் இரண்டு பாடல்களையும் அமைப்பதை ஓரோ வழி காணமுடிகின்றது. அந்த ஊஞ்சலில் பாடப்படுவோன், அவன் முன்னோன், சுற்றம், தொண்டர் போன்ற பலரையும் வாழ்த்தி இறுதியில் உலகும்— இந்த ஊஞ்சலும் வாழுமாறு அப்பாடல் வாழ்த்தி முடிகின்றது. சிலவற்றில் வாழி என்று குறிக்கப்பட்டும், சிலவற்றில் குறிக்கப் படாமலும் அமைகின்றன. இவற்றை ஊசலிலக்கியத்தின் உறுப்பு எனக் கொள்வதில் தவறில்லை.

## பாடப்படுவோரும் பாடல் தன்மையும்

இறைவனோ, மக்களோ இவற்றின் தலைமாந்தர்களாக அமைகின்றனர். இறை நிலையில் இறைவன், இறைவி இருவரும் தலைமைபெறுகின்றனர். இறை அடியார்களும் சில இலக்கியங் களில் பாட்டுடைத் தலைமை ஏற்கின்றனர். மக்களுள் அரசர், உரைத்தலைவர் அல்லது புலவரால் விரும்பப்படுவோர் தலைமை பெறுகின்றனர்.

இலக்கியம் வழி நாம் அறிகின்ற ஊஞ்சல் குறிப்புகளில் பெண்களே பெரும்பான்மையும் ஆடுகின்றனர் ஊஞ்சல் பெண் களுக்குரிய விளையாட்டாகவே சங்க இலக்கியங்களில் சுட்டப் படுகின்றது. பிள்ளைத் தமிழிலும் பெண்பாற் பிள்ளைத் தமிழிலேயே ஊசல் பருவம் அமைக்கப்பட்டுள்ளது. ஆனால் அவ்வாறு பாகுபாடின்றி இருபாலருக்கும் ஊஞ்சல் இலக்கியங்கள் அமைகின்றன.

மக்களுக்கும் கடவுளர்களுக்கும் ஊஞ்சல் பாடல்கள் பாடப் பட்டாலும் இறைவன்—இறைவியர் பற்றிய ஊஞ்சல் பாடல்களே மிகுதியாகக் காணப்படுகின்றன. மக்கள் தொடர்பு ஊஞ்சல்பாடல் கள் மிகுதியும் திருமண ஊஞ்சலாய் அமைகின்றன. இவை **லாலிப் பாட்டு** எனவும் அழைக்கப்படுவதுண்டு. கோவிலில் நடைபெறும் **போலோத்சவம்** போன்ற விழாக்களின் போது பக்தி நிலை ஊஞ்சல் பாடல்கள் பாடப்படுகின்றன. இவை பெரும்பான்மையும் பக்தி இலக்கியங்களின் தொடர்களை ஆங்காங்கே கையாளுகின்றன. வள்ளி—முருகன் போன்ற திருமணங்களை ஒப்பிட்டுப் பிற்காலத் தில் பாடப்பட்ட பாடல்களும் லாலிப்பாட்டு என்று அழைக்கப் படுகின்றன. ஆனால் அவை ஊஞ்சல் அமைப்பினின்றும் மாறுபடுகின்றன. சிலர் இறைவனைப் பாடுவதையும் **லாலி** என்று

அழைக்கின்றனர். இப்பாடல்கள் பொதுவாக மக்களுக்கு அறிவுரை கூறும் வகையில் அமைந்தவை. நடைபாதைகளே இந்த லாலிப்பாட்டுகளின் விற்பனைக் கூடங்களாகத் திகழ்கின்றன. சில போழ்து அவை ஆலயங்களில் இலவசமாக வழங்கப் படுவதும் உண்டு.

## நாட்டுப்புற ஊசல் பாடல்கள்

இலக்கிய ஊசலாய் அமைவன பத்துப் பாடல்களுடன் ஆசிரிய விருத்தம், கலித்தாழிசை இவற்றால் ஆடூர் என்ற முடிவு பெற அமைவது. ஆனால் நாட்டுப்புறப் பாடல் இதனின்றும் மாறுபட்டது. தனக்கென்று வரையறையேதுமின்றிச் செல்வது. நாட்டுப்புறப் பாடல்களை வகைப்படுத்துவோர் சிலர் ஊஞ்சல் பாடல்களைக் கொண்டாட்டப் பாடல் என்கின்றனர். வேறு சிலர் விழாப் பாடல்கள் என்கின்றனர். மேலும் சிலர் விளையாட்டுப் பாடல்கள் என்கின்றனர். விழாவும் விளையாட்டும் கொண்டாட் டத்தில் அடங்குமாதலால் அவற்றைக் **கொண்டாட்டப் பாடல்கள்** என்றே கொள்ளலாம்.

தனிப்பட்ட நோக்கம் எதுவும் ஊஞ்சலாட்டத்திற்கு இருப்ப தாகத் தோன்றவில்லை. சமுதாயக் கொண்டாட்டத்தை மிக மகிழ்ச்சியுடன் அனுபவிப்பதற்கே இவ்வாடல் நடைபெறுவத னால், இதுவும் சமுதாயச் சார்புக் கலைகளுடன் இணைத்து விளக்கம் தரப்படுகிறது.[21]

நாட்டுப்புறப் பாடலொன்று ஊஞ்சல் கட்டுவதைப் பற்றியே குறிப்பிடுகின்றது.

ஏல ஏலோ கிளி குஞ்சாலோ
மட்டை வெட்டி நாருரித்து
எங்க மாமன் போட்ட குஞ்சால்
கள்ளிவெட்டி நாருரித்து
எங்க அண்ணன் போட்ட குஞ்சால்

இந்தக் குஞ்சாலம் போட்டவர்க்கு
என்ன என்ன கொடுக்க வேண்டும்
கிண்ணியிலே சந்தனமும் கிளிமூக்கு வெத்திலையும்
பொத்தாங்கண்ணிச் செரட்டையிலே கொஞ்சம்
பொன்னுருக்கிக் கொடுக்க வேண்டும்

---

21. தமிழக நாட்டுப்புறக் கலைகள், டாக்டர் ஏ. என். பெரு மாள் ப, 51

என்ற குமரி மாவட்டத்தின் பாடலில் சுட்டப்படும் மட்டை வெட்டி நாருரித்தல் இயல்புதான். ஆனால் கள்ளி வெட்டி நாருரித்தல் என்பது இயலாத ஒன்று; கத்தாழையைக் 'கத்தாழைகள்ளி' என்று வழங்குவர். அத்தன்மை கொண்டு அதை இங்குச் சுட்டியிருக்கலாம். அல்லது மட்டை என்பதோடு நிறுத்தாமல் பாட்டுத் தொடர வேண்டும் என்பதற்காகப்—பொருளற்ற நிலையில் சுட்டப்பட்டதாகவும் இருக்கலாம்.

ஒரு பெண்ணும் ஆணும் மாறிமாறி பாடும் பாடலும் ஊஞ்சலாட்டத்தில் இடம்பெறுகின்றது. ஒரு பகுதியை ஒருத்திப்பாட அடுத்ததை இன்னொருத்தி பாட அது நாடகத் தன்மை பெறுகின்றது என்பதும், பாடலின் இன்பம் நுகர்தலும் காட்டப்படுகின்றது.

**ஆண் :** ஆற்றுக்கு அந்தப்புரம் ஆடுமேய்க்கும் பெண்மயிலே
அற்றிலே வெள்ளம் வந்தால் நீ என்ன செய்வாய்

**பெண் :** ஆற்றிலே வெள்ளம் வந்தால் அழகான கப்பல் செய்து
அதிலே நான் வருவேன் பாராய்

**ஆண் :** அழகான கப்பல் செய்து அதிலே நீ வந்தால்
நண்டு வடிவம் நானுங்கொண்டு நறுக்கிடுவேன்

**பெண் :** நண்டு வடிவங்கொண்டு நறுக்கிடுவாயானால்
எலியின் வடிவங்கொண்டு இறப்புவழி பாய்ந்திடுவேன்

**ஆண் :** எலியின் வடிவங்கொண்டு இறப்புவழி பாய்ந்தாயானால்
பூனை வடிவங்கொண்டு பிடித்திடுவேன் எலியை

**பெண் :** பூனை வடிவங்கொண்டு எலியைப் பிடித்தாயானால்
ஊர்க்குருவி வேடங்கொண்டு உயரே பறந்திடுவேன்

**ஆண் :** ஊர்க்குருவி வேடங்கொண்டு உயரே பறந்தாயானுல்
செம்பருந்து வேடங்கொண்டு செந்தூக்காய்த்
தூக்கிடுவேன்

**பெண் :** செம்பருந்து வேடங்கொண்டு செந்தூக்காய்
தூக்கினாயானால்
பூமியைக் கீறிக் கொண்டு புல்லாய் முளைத்திடுவேன்

**ஆண் :** பூமியைக் கீறிக்கொண்டு புல்லாய் முளைத்தாயானால்
காரம்பசு வேடங்கொண்டு கடித்திடுவேன் அப்புல்லை

**பெண் :** காராம்பசு வேடங்கொண்டு புல்லைக் கடித்தாயானால்
ஆற்றங்கரை ஓரத்திலே அரளியாய்ப் பூத்திடுவேன்

**ஆண் :** ஆற்றங்கரை ஓரத்திலே அரளியாய் பூத்தாயானால்
பண்டார வேடங்கொண்டு பறித்திடுவேன் அப்பூவை

என்ற பாடல் வரிகள் ஊஞ்சல் பாடலாகச் சுட்டப்பட்டாலும் இது வேறு சில விளையாட்டுகளின் போதும் பாடப்படுகின்றது. அவை இடத்திற்கும், ஆட்டத்தின் இயல்பிற்கும் தக்கவாறு தம்முள் மாற்றங்கொண்டனவாய்த் திகழ்கின்றன.

கள்ளி மரத்தாலே ஊஞ்சலுங்கட்டி
கத்தாழை மரத்தாலே விட்டமும் பூட்டி
பள்ளி பறைச்சி இருந்தாட
பண்டார சுப்பன் உதைத்தாட

பள்ளியும் பறைச்சியுமான இரு பிரிவினர் சாதி பேதமின்றி ஊஞ்சலாடி மகிழ்ந்தனர். பெண்கள் இருந்தாடினர் என்பதால் பெண்கள் இருந்து மட்டும் ஆடுவர் என்பது பெறப்பட்டது. பண்டார சுப்பன் உதைத்தாடினான் என்று குறிக்கப்படுவதால், ஊஞ்சலில் அமர்ந்து தனக்குத்தானே பிறர் உதவியின்றி உதைத்து ஊஞ்சலை இயக்கினான் என்பது பெறப்பட்டது. பெண்கள் அமர்ந்து பிறர் ஆட்ட ஆடுவதையும், ஆண்கள் அமர்ந்தால் உதைத்து ஆடுவதையும் இதன்வழிநாம் அறிகின்றோம். கத்தாழை மர விட்டம் அமைத்து ஊஞ்சலாடியதாக இப்பாடல் சுட்டுகின்றது. இது கற்பனையே; இவற்றின் துணைகொண்டு ஊஞ்சலமைப்பது என்பது இயலாத ஒன்று. எதுகை மோனை நோக்கி இவ்வாறு அமைந்திருக்கலாம்.

# ஆழ்வார் திருநகரி ஆதிநாதர் ஊஞ்சல்

## ஆழ்வார் திருநகரி

ஆழ்வார்களால் போற்றிப் புகழ்ந்து பாடப்பெற்ற நூற்றெட்டுத் திருத்தலங்களுள் திருக்குருகூர் சிறப்பானதாகும். ஆழ்வார்களில் சிறந்தவராகிய நம்மாழ்வார் இந்தத் திருப்பதியில்தான் தோன்றினார். குருகு (ஒருவகைப்புள்) வழிபட்டமையால் குருகூர் என்றும், குருகாபுரி என்றும் இவ்வூர் அழைக்கப்படுகின்றது. திருமகள் ஆதிநாதரை அடைய தவம் புரிந்தமையால் திருநகர் என்ற பெயரும் இவ்வூருக்கு உண்டு. நம்மாழ்வார் தோன்றினமையின் ஆழ்வார் என்ற அடைமொழியுடன் இதை ஆழ்வாரி திருநகரி என்று அழைக்கின்றனர்.

சீவைகுண்டம் புதுக்குடிக்குக் கிழக்கே இரண்டு மைல் தொலைவில் உள்ளது திருநகரி. இது ஒரு புகைவண்டி நிலையம். திருநெல்வேலியிலிருந்து திருச்செந்தூர் போகும் சாலை இவ்வூர் நடுவே செல்கின்றது. இருபுறமும் பெரும்பாலும் சிறு வீடுகளே உள்ளன. இவ்வூர் நடுவே ஆதிநாதர் திருக்கோவில் இருக்கிறது. இப்பெருமான் **பொலிந்து நின்ற ஆதிபிரான்** என்று நம்மாழ்வாரால் புகழப் பெறுகிறார். பெருமான் பெயருக்கேற்ப திருநகரியும் பொலிந்து நின்ற திருநகரி ஆதல் வேண்டும்.

ஆழ்வார் திருநகரியைச் சூழ உள்ள நாடு திருவழுதி நாடு என்ப் பெயர் பெறும். இந்நாட்டில்தான் ஒன்பது திருப்பதி (நவ திருப்பதி)களும் அமைந்துள்ளன. தண்பொருணை என்று ஆழ்வாரால் போற்றப்படும் பொருணையின் கரையிலேதான் ஆதிநாதர் கோவில் அமைந்துள்ளது. பெருயானுக்குத் திருத்தேரும் அத்தேரோடும் தெருக்களும் அமைத்தபோது ஆற்றை வடக்கே தள்ளிக்கொண்டு போய் அலைக்கல்லும் படித்துறையும் அமைக்கப்பட்டன.[1]

1. நெல்லைமாவட்டக் கோவில் வரலாறு, ப. 182

நம்மாழ்வார் பிறந்தவுடன் உலக நெறிப்படி அழாமல் ஆலயத்தில் உள்ள புளியமரத்தினடியில் அசைவற்று மௌனமாய் இருந்ததால்—இயற்கைக்கு மாறாக இருந்ததால் **மாறன்** என அழைக்கப் பெற்றார். இவரிடம் அருள் பெற்றவர் மதுரகவி ஆழ்வார். திருக்குருகூரில் பிற்காலத்துச் சிற்றரசர்கள் சிறப்பாக இருந்ததாகத் தெரிகின்றது. அவர்களுள் 18 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த திருக்குருகூர் திருவேங்கடநாதன் என்பான் புலவர்களால் பிள்ளைத்தமிழும், தூதும் பாடிப் புகழப் பெற்றச் சிறப்புடையவன். இவன் ஆதிநாதருக்கு 1290ஆம் ஆண்டில் கருட வாகனம் செய்தளித்ததாகக் கூறுவர்.

மன்னு தொள்ளாயிரத்து அறுபத்தய்யாம் ஆண்டு
மாசிமதி மேவு பதினோராம் தெய்தி
பன்னு சுக்கிர வாரம் சுபதி நன்னாளில்
(பங்க)யக்கண் மாயர் திருவுளத்துக் கேற்கச்
சொன்ன வடிவால் கருடசேனை மிக்காகத்
தொல்லுலகினிற் தரதிட்டை தான்றச் செய்தான்
நன்னயவான புகழ்வளம்சேர் குருகைமாறன்
நகர்த் திருவேங்கட நாதராசன் தானே[2]

என்று குறிக்கப்படுகின்றது. இவரைப் பற்றிய இரு பிரபந்தங்களிலும் இவன் ஊர் குருகூர் என்றே குறிக்கப்படுகின்றது. அவற்றில் ஆழ்வார் திருநகரி என்று குறிப்பு இன்மையால் இவன் காலத்துக்குப் பின்னரே ஆழ்வார் திருநகரி என்ற பெயர் இவ்வூருக்கு அமைந்து அதுவே நிலைத்திருக்க வேண்டும்.

இத்தலத்து ஆதிநாதப் பெருமானைச் சிறப்பித்துப் பாடப் பெற்றது இவ்வூஞ்சல். இது **ஆழ்வார் ஊஞ்சல், ஆதிநாதர் ஊஞ்சல் கவிதை** என்றெல்லாம் சுவடியில் குறிக்கப்பட்டுள்ளது.

ஊசலிலக்கியங்களின் இலக்கண மரபுப்படி முதல் பாடல் காப்புப் பாடலாக அமைகின்றது. காப்பில் வைணவ இலக்கிய மரபுப்படி புகழ்மிகு இறையடியார் நம்மாழ்வார் துதிக்கப் படுகின்றார். இவர் இயல், இலக்கணம், இசை மூன்றிலும் வல்லவர். அதை,

---

2. திருக்குருகூர் திருவேங்கடநாதன் பிள்ளைத்தமிழ், ப. 7

இயல்பூத்த தொடையடி சீரசைச் சொற்பூத்த
யாப்பலங்காரம் பூத்த இசைவல்லாளன்

என்று காட்டுன்கிறார் ஆசிரியர். இதன்வழி நமக்குத் தொடை, அடி, சீர், என்பன கொண்டு யாப்புமுறை பிறழாது—இசையுடன் இறைவனுக்கு (இயல்) இலக்கியம் படைக்க வல்லவர் நம்மாழ்வார் என்பதை நூலாசிரியர் விளக்குகின்றார்.

அம் முதற்பாடலின் முதலிரண்டு அடிகளில்,

வயல்பூத்த செழுங்கமல வாவி பூத்து
வளம்பூத்த திருக்குருகூர் மழையைக் காணில்
புயல்பூத்த திருமேனி பொலிவு பூத்து
பொலிந்து நின்ற மாதவனார்

என்று குருகூரின் வளமும், குருகூர்வாழ் இறைவன் ஆதிநாதனின் நின்ற திருக்கோலமும் உரைக்கப் படுகின்றன.

## ஆதிநாதர்

இறைவன் ஆதிநாதரது உடலுறுப்புகள் பலவும் தாமரை மலர் போன்று காணப்படுகின்றதாம். கை, கால் உந்தி, வாய், நயனம் இவை அனைத்தயும் அவ்வகையில் காட்டுகின்றார். தண்மையான கதிரை வெண்ணிலவு பொழிந்து கொண்டிருக் கையில், ஒற்றைச் சக்கரத் தேரையுடைய உருண்டையான மலை போன்ற சூரியன் உதயங்காட்டுகின்றது.

அவ்விறைவனது மார்பு திருவளர்கின்ற அழகிய மார்பு; கௌஸ்துபம் அணிந்த மார்பு; அந்த ஆதிநாதன் தன்னை வணங்கி வழிபட்டோர்க்குப் பிறவியாகியத் துன்பத்தை நீக்கி வீடு பேற்றை அளிப்பான்; என்றெல்லாம் அவ்விறைவன் புகழ்ந் துரைக்கப் படுகின்றான்.

இப்பெருமான் மிகவும் முயன்று தன்னைக் காணத் தவம் செய்வோர்க்கு அவர்களது உள்ளமானது நிறையும் படி தோற்ற மளித்து அருள் பாலிக்கும் பண்பினன். கருமுகில்போல் காட்சி தரும் ஆதிநாதர் கஜேந்திரன் என்ற யானை அழைப்பத் தோன்றி அருளினார்

கிருஷ்ண அவதாரத்திலே அவர் காளிங்கன் மேல் நடிப்பப் பொலிந்து நின்றவர். முக்கண்ணனாம் சிவபெருமானின் சிறப் பொழித்து அடக்கியவர். மார்பிலே பூத்துக் குலுங்கும் துளபு மாலையை அணிந்தவர்,

வாமன அவதாரத்தில் தனது உடம்பை மிகவும் குறுக்கி குட்டை வடிவமாக்கிக் கொண்டு மாவலி சக்கரவர்த்தியினிடம் மூன்று அடி கேட்டுப் பெற்றுக் கொண்டார். பின்னர் பூமி, அந்தரம், சுவர்க்கம் மூன்றும் ஓங்குகின்ற அளவுக்கு மிகப் பெரிய திருவிக்கிரம அவதாரமாகி உலகை ஓரடியிலும், வானை மற்றோரடியிலும் அளந்தார்.

உலகளந்த அவரது பாதத்தைப் பாய்மரமாகக் கற்பித்து மிக அழகாகப்,

பூவுலக முழுவதுமோ ரங்க மாகப்
பொலிந்துயர்ந்த வங்கத்தின் நடுவில் நட்டு
பாயுகங்கா நதியுயவர்வான் விரித்து நீண்ட
பாய்மரப்பொற் சிலம்பலம்பும் பாதம் (பாடல் 17)

என்று காட்டுவதின் நயம் சுவைத்தற்பாலது.

இவர் மூன்றுலகையும் உண்டுமிழ்ந்தார்; அப்போதும் அவரது பசியடங்கவில்லை. எனவே புளித்திருந்த வெண்ணெயை உண்டார். மூன்றுலகமும் அரி, அச்சுதன், நாராயணன், அனந்தன், முகுந்தன் என்று அவன்தன் பெயர் சொல்லிப் போற்றிப் பரவுகின்றன.

அடியவர்கள் ஈடேற வேதமாகிய கடலைக் கடைந்து, தமிழாகிய அமுதத்தை நல்கும், செயலே வடிவமாக உள்ள நம்பியாக வந்து செண்பகமாரற்கு அருள் செய்கின்றவன் திருமால். அந்தத் திருமால் முன்னர் மச்ச அவதாரம் முதல் கல்கி அவதாரம் வரையிலான பத்து அவதாரங்கள் எடுத்தவன். அவனது மேனி பச்சை வண்ணங் கலந்த மேக வடிவினதாய்த் தோன்றுகின்றது.

நாலாயிரம் என்று கவிதைகளின் எண்ணிக்கையைக் கொண்டு அளந்து நாதமுனிகள் கண்டது திருவாய் மொழி. அப்படி நாதமுனியால் தொகுத்தளிக்கப் பெற்ற பிரபந்தங்கள், அதன் அருமையும் பெருமையும் உணர்ந்து கற்பார்க்குப் பேருவகை ஊட்டும் களஞ்சியங்களாகத் திகழ்கின்றன.

கவியளந்து கண்டதிரு வாய்மொ ழிச்சொல்
கனிவளந்து நாதமுனி கொண்ட தானம்

செவியளந்து கருத்தளந்து கனியும் பாலும்
தேனுமொன்றாய்க் கலந்ததெனத் தித்திப் பாக
(பாடல், 24)

இந்த இறுதி இரண்டு வரிகள் பின்னர் வந்த இலக்கியப் படைப் பாளர்கள் எழுது கோலிலும் பட்டுத் தெறிக்கின்றன. அவை இவ்வரிகளின் திறத்தை எடுத்துக் காட்டுவனவாய் அமைந் துள்ளன.

தனித்தனிமுக் கனிபிழிந்து வடித்தொன்றாய்க் கூட்டிச்
சர்க்கரையும் கற்கண்டின் பொடியுமிகக் கலந்தே
தனித்தநறுந் தேன்பெய்து பசும்பாலும் தேங்கின்
தனிப்பாலும் சேர்த்தொருதீம் பருப்பிடியும் விரவி
இனித்தநறு நெய்அளைந்தே இளஞ்சூட்டின் இறக்கி
எடுத்தசுவைக் கட்டியிலும் இனித்திடுந் தெள்ளமுதே
அனித்தமறத் திருப்பொதுவில் விளங்குநடத் தரசே
அடிமலர்க்கென் சொல்லணியாம் அலங்கல் அணிந்தருளே
(திருவருட்பா, 4106)

என்று அதைத் தெள்ளத் தெளிவாக எடுத்துக் காட்டுகின்றார் வள்ளலார்.

இதைத்தான் பிற்காலத்துப் பாரதியும்,

'கற்றவர்க்குச் சொல்வேன் கவிதைக் கனிபிழிந்த
சாற்றினிலே பண்கூத் தெனுமிவற்றின் சாரமெலாம்
ஏற்றி அதினோடே இன்னமுதைத் தான்கலந்து
காதல் வெயிலிலே காயவைத்த கட்டியினால்
மாதவளின் மேனிவகுத்தான் பிரமனென்பேன்
(பாரதி, குயில்பாட்டு, 138)

என்று தனது கற்பனைப் படைப்பாம் குயில்பாட்டில் பாடு கின்றார்.

சிவன் பலியேற்ற நிலையிலிருந்து மாறுபடும்படி செய்த மும்மூர்த்தி இவனல்லது வேறில்லை என்று வேதம் கூறும். இவன் கஜேந்திரனைக் காத்தருளும் பண்பினன்; இரவையும் பகலாக்கு கின்ற வன்மை படைத்த சக்கரத்தை உடையவன். இந்திரன் புகழ்ந்துபோற்ற அருளாற்ற வல்லவன்,

## ஊஞ்சலமைப்பு

அண்டத்தினுடைய சுற்றுச்சுவர் இரண்டையும் கால்களாக அமைத்தனர். விண்ணை அதற்கு அமையும் நீண்ட விட்டமாக்கினர். பொழிகின்ற மழையின் துளிகள்தான் அதிலே கட்டப்பட்டிருக்கின்ற பொற்சங்கிலிகள். பாற்கடலைச் சூழ்ந்துள்ள இந்த உலகமே ஊஞ்சல் பலகை. மாதவத்தோரின் ஞானக்கரங்கள் அழகுபடுத்தப் பயன்பட்டுள்ள அழகு பொருள்கள். இப்படி ஒரு கற்பனை ஊஞ்சலைப் படைத்து அதில் ஆதிநாதரை ஆட அழைக்கின்றார் ஆசிரியர்.

மேருமலை ஒன்றிரண்டு கால்களாக அமைகின்றன; வெள்ளி மலை அதன் மேலிடப்படும் விட்டமாக அமைகின்றது; உலகம் புகழும் இமயமலை ஊஞ்சல் பலகையாக இருக்கின்றது; அதற்குக் கட்டும் சங்கிலிகளாக ஆதிசேடன் பயன்படுகிறான். அங்கே போடப்படுகின்ற மேல்முகடு (விதானம்) மலர்களாலானது.

சீருலவு நறுமலர்வி தானம் நாட்டி
சிறந்தநவ ரெத்(தி)னமணி ஊஞ்சல் மீது
போருலவுஞ் சக்கரத்தான் ஆடீ ரூஞ்சல்
புகழ்பொலிந்து நின்றபிரா னாடீ ரூஞ்சல்

என்று தொடர்ந்து முடிக்கின்றார் புலவர்.

திருவாசகம் திருப்பொன்னூசலின் முதல் பாடலில்,

சீரார் பவளங்காய் முத்தங் கயிறாக
ஏராரும் பொற்பலகை யேறி
(திருவா. திருப்பொன், 1; 1—2.)

என்ற முதலிரண்டு அடிகளில் ஊஞ்சலின் அமைப்பினைச் சுட்டுகின்றார் மணிவாசகர்.

## இறைவர் ஊஞ்சலாடும் முறை

ஊஞ்சல் ஆட்டப்படும்போது இறைவர் அங்குமிங்கும் அசைந்தாடுகின்றார். அவருடன் பூமிதேவி, புயம், துளபமாலை, வச்சிரமாலை, பொன்முடி சுட்டி, குழை இவையும் ஆடுகின்றன. மேலும் கோமாறனாம் நம்மாழ்வார் தமிழ்மாலை பாட இவர் ஆடுகின்றார்.

இதை நயம்பட,

பூமாது பொலிந்துமணி மார்பி லாடப்
புயமாட வதிற்றுளவ மாலை யாடத்
தேமாலை நடுவில்வச் சிரமாலை யாட
செம்பொன்முடி யாடரெத்(தி)னச் சுட்டி யாடக்
கோமாறன் தமிழ்மாலை பாடி யாடக்
குழையாட வைணவர்க்கு ழாங்கொண் டாட

என்று காட்டுகின்றார் புலவர்.

அவர் ஊஞ்சலில் அமர்ந்தாடும் போது வேறு சிலவும் ஆடுகின்றன. மணம் கமழுகின்ற துளபமாலை மார்பிலே ஆடுகின்றது. அவரது செங்கரத்திலே வளை, ஆழி இரண்டும் ஆடுகின்றன. அவரது சேவடியில் பரிபுரம், பொற்சதங்கை இவை ஒலிக்கின்றன. அத்துடன் மறையை விரிக்கின்ற தமிழாம் திருவாய்மொழியைப் போன்று பொலிந்து நின்று ஆடுகின்றார்.

## இறைவனை ஊஞ்சலாட அழைத்தல்

இங்கு குருகூரிறைவன்—ஆதிநாதன்—திருமாலின் சிறப்பும் புகழும் சிறப்பித்துக் கூறி இறைவனை ஆட அழைக்கின்றார் ஆசிரியர்.

ஆதிநாதபிரான்; அருட்பொலிந்து நின்ற பிரான்; சோதிமிக்க ஆதிபிரான்; சுருதிமறை ஆதிபிரான்; கோதிலாதாற்றவல்லான்; குருகை நீள் குடக்கூத்தன்; நீதி நின்ற ஆதிபிரான்; ஆதிமூர்த்தி; ஆதிபிரான் என்றெல்லாம் ஆழ்வார்த் திருநகரியாரைப் புகழ்ந்து அழைக்கின்றார் ஆசிரியர்.

மற்றொரு பாடலிலும் இதே நிலையில், தொழுவோர், பணிபுரிவோர் இருவரையும் சுட்டி அவரை ஆட அழைக்கின்றார். அதில் நான்முகன் தொழுதல், வசிட்டனுக்கருள் புரிதல், தானம் விரும்பும் இந்திரன் அர்ச்சனை புரிதல், சங்கரன் பணிதல் ஆகிய இத்தனைச் சிறப்பையும் பெற்றவன் இவ்விறைவன் என்று சுட்டு கின்றார்.

பூமானும் புவிமானும் மருங்கிலே தோன்றுகின்றார்கள்; நாமானும், நான்முகனும் மற்றுள்ள அண்டத்தின் மக்களும் அவனைப் போற்றுகின்றனர்.

தேமானும் பார்வதியும் சிவனு மிக்க
திலோத்தமைஇந் திராணியுரு வசியும் வானோர்
கோமானும் பணிந்தாடிப் பாடிப் போற்றும்
குருகைநகர் பொலிந்துநின்றா ராடீ ரூஞ்சல் (20)

## இயற்கை வண்ணனை

இயற்கையில் ஈடுபாடுகொண்டு அதைப் பலவாறு போற்றிப் புகழ்வதைக் கவிஞர்கள் ஓர் உத்தியாகக் கொண்டுள்ளனர் எனலாம்.

குயில்கள் மாந்தளிர் உண்ணுவதை மிகவும் விரும்பும். எனவே அக்குயில்கள் எல்லாம் மாந்தளிரை நோக்கி ஓடுகின்றன. அவை மேகத்திரள் போல் காட்சியளிக்கின்றன. அங்கே காந்தள் மலர் பூத்துக் குலுங்கிக் கொண்டிருக்கின்றது. அதைப் பாம்பென எண்ணிச் சீறி மயில்கள் குதித்து ஆகின்றன. அதனால் மலரி லிருந்த வண்டுகள் பறந்து ரீங்காரம் செய்கின்றன. தேரையானது பொருணை நதியின் ஏற்றம் (சிறப்பு) பாடுகின்றது.

மாந்தளிர்மேல் கருங்குயில்கள் மருங்கு சாய
மழையருவிக் கருவிமுகில் வரவு பார்த்துக்
காந்தளைவேம் பாந்தளெனக் கண்டு சீறிக்
களித்துமயில் குதித்தாட களிவண் டார்க்கும்
ஏந்திளநாண் மலர்க்கமலத் தெழுந்த தேரை
வெறிதிரைநீர் தண்பொருணை ஏற்றம் பாட
(பாடல், 3)

என்று அக்காட்சிகளின் தொகுப்பை மிக அழகாக வரைந்து காட்டுகின்றார் ஆசிரியர்.

மற்றொரு பாடல் மீன்களின் பாய்கின்ற தன்மையை எடுத்துக் காட்டுகின்றது. தண்ணீரும் வண்டலும் கலந்திருக்கின்ற சேற்றில் விரால்மீனும், வாளைமீனும் பாய்கின்றன. கண்டல் என்னும் ஒரு வகை கடல்மீன், கெண்டை மீன்களின் வகை களில் ஒன்றான பஞ்சிலைக் கெண்டைகளுடன் போய்ப் பாய்கின்றன. மடுவில் இருக்கின்ற கயல்மீன்கள் உயர்ந்திருக்கின்ற கமுகமரத்தின் மீது பாய்கின்றன. சில மீன்கள் தாமரையின் பொகுட்டில் மோதி உடைத்து அவற்றிலிருந்து தேனை வழிந்

தோடச் செய்கின்றன. வழியும் தேன் நதியுடன் சென்று கலக்கின்றது.

இடிக்கும் தன்மை பொருந்திய மேகமானது கடல் நீரை உண்டது; அது பின்னர் இருண்டு கருத்து மழை பொழிந்தது. அந்த மழை, சோலை மலை இவற்றினின்றும் தந்தம் போன்ற பல பொருட்களை வாரிக்கொண்டு வந்தது. தேன்போன்று இனிமை பெற்ற வாழைக்கனி, வருக்கைப்பலாக்கனி, சந்தனம் இவற்றையும் சுமந்து கொண்டுவந்து தந்தது. அந்த இடத்தில் நிறைந்தும், குவிந்தும் காணப்பட்ட முத்துகளையும், மலர்களையும் அரித்துக் கொண்டு பொருணை நதியாக உருப்பெற்றது. அது சூரியனின் வெப்பத்தைக் குறைப்பதற்காக மேகம் நோக்கி நிறைந்து நிற்கின்றதாம்.

பம்பி மேகம் படர்ந்தது பானுவால்
நம்பன் மாதுலன் வெம்மையை நண்ணினான்
அம்பின் ஆற்றுதும் என்றகன் குன்றிடை
இம்பர் வாரி எழுந்தது போலுமே

(கம். ஆற்றுப் படலம், 22)

என்கிறார் கம்பரும்.

அந்த அழகிய தென்குருகூரின் வளத்தை மற்றொரு பாடலும் எடுத்துரைக்கின்றது. எப்போதும் நீருடன் காணப்படுவதால் வயலிலே கயல்கள் பாய்ந்து விளையாடிக் கொண்டிருக்கின்றன. பாம்பானது அங்குள்ள தேரையைக் கவர்ந்து செல்கின்றது. வரப்பின் மீது ஒரு கொக்கு ஒன்று அமர்ந்து மீன் எப்போது வெளியேறும் என்று பார்த்துக் கொண்டிருக்கின்றது. ஆனால் தந்திரங்கண்ட மீன் நீருக்கு மேலெழும்பாமல் நீரின் மட்டத்திலிருந்தே எட்டிப் பார்க்கின்றது. மரத்தில் அமர்ந்து இவற்றைக் கண்டு ரசித்துக்கொண்டிருக்கின்றது ஒரு கூகை. அந்தக் கூகை கூ கூ கூ என்று கத்துவது குருகூர் குருகூர் என்று ஒலிப்பதைப் போன்றுள்ளதாம். அதைக் கவிஞர்,

வண்குருகூர் குருகூர் குருகூரென் றுவந்த கூகை
வாழ்த்திய தென்குருகூர்

(பாடல் 22)

என்று காட்டுகின்றார்.

வாழ்த்து

ஊஞ்சல் இலக்கியங்களின் இறுதிப் பாடல் வாழ்த்துப் பாடலாக அமைகின்றது. உலகம், வழுதி வளநாடு, பழமறை, செந்தமிழ், புகழ்மணக்கும் குருகூர், மழை, நின்ற திருக்கோலமுடைய கடவுள், இலக்குமி, பூமிதேவி, ஏர், திருமதிலில் இருக்கும் கருடாழ்வார், திருவாய்மொழி தந்த நாதமுனி, மதுரகவியாழ்வார், ஆதிநாதர் ஊஞ்சல் யாவற்றையும் வாழ்த்தி முடிகிறது இதன் வாழ்த்துப் பாடல்.

ஆதிநாதப் பிரானை வாழ்த்தவந்த கவிஞர் ஏர்வாழி எனப் பாடுவதால் இவர் குருகூரைச் சேர்ந்த விவசாயக் குடிமகனாக இருக்கலாம் எனக் கருதத் தோன்றுகிறது.

## நூல்

1. வயல்பூத்த செழுங்கமலம் வாவி பூத்து
வளம்பூத்த திருக்குருகூர் மழையைக் காணில்
புயல்பூத்தத் திருமேனி பொலிவு பூத்து
பொலிந்துநின்ற மாதவனார்க் கூஞ்சல் பாட
இயல்பூத்தத் தொடையடிசீர் அசைச்சொற் பூத்த
யாப்பலங்கா ரம்பூத்த விசைவல் லாளன்
கயல்பூத்த விழியுடைய நங்கை யீன்ற
காரிமா றன்சரணங் காப்ப தாமே.

2. கருங்குவளைக் காடுசெழுங் கமலம் பூத்த
காட்சியெனத் திருவுடம்பிற் கருணை பூத்தும்
மருங்குவளைத்து அழகொழுகுங் கைகா லுந்தி
வாய்நயனம் திருமுகத்தின் வடிவு காட்ட
ஒருங்குவளைத் தண்கதிர்வெண் ணிலவு காட்ட
ஒருதிகிரி பருதிகிரி உதையங் காட்ட
நெருங்குவளைக் கைமலரால் வடந்தொட் டாட்ட
நெடிதுநின்ற வாதிபிரான் ஆடீ ரூசல் 2

---

1. கமலம்—தாமரை
வாவி—பொய்கை
புயல்—மேகம்
கயல்—மீன்
காரிமாறன்—நம்மாழ்வார்; காரியின் புதல்வனாகிய மாறன், காரிமாறன்

2. மருங்கு—இடை
கை, கால், உந்தி, வாய், நயனம் எல்லாம் தாமரைக்குவமை
ஒருதிகிரிபருதி-ஒற்றைச் சக்கரத் தேரையுடைய சூரியன்

3. மாந்தளிர்மேல் கருங்குயில்கள் மருங்கு சாய
மழையருவிக் கருவிமுகில் வரவு பார்த்துக்
காந்தளைவெம் பாந்தளெனக் கண்டு சீறிக்
களித்துமயில் குதித்தாடக் களிவண் டார்க்கும்
ஏந்திளநாண் மலர்க்கமலத் தெழுந்த தேரை
எறிதிரைநீர்த் தண்பொருநை ஏற்றம் பாடப்
பூந்துளவ மணிமார்ப ராடீ ரூசல்
பொலிந்துநின்ற மாதவனா ராடீ ரூசல். 3

4. சுற்றுமண்டச் சுவரிரெண்டு கால்க ளாகத்
தோற்றமுறும் விண்நெடிய விட்ட மாகப்
பற்றுமழை மாரிபொற்சங் கிலிக ளாக
பாற்கடல்சூழ் புவனமொரு பலகை யாகக்
கற்றுணர்ந்த மாதவந்தோர் மகிழ்ந்து ஞானக்
கரங்களினால் அலங்கரித்த ஊசல் மீதில்
பொற்றடங்கை யர்ச்சுனன்சா ரதியாய்த் தோன்றி
பொலிந்துநின்ற மாதவனா ராடீ ரூஞ்சல். 4

---

3. மருங்கு—பக்கம்
மாந்தளிர் வசந்த காலத்தில் தளிர்க்கும் போது குயில்கள் அவற்றை உண்ணவிரும்பி அதன் மருங்கு சாய்கின்றன.

காந்தள்—காந்தள் மலர்
வேம்பாந்தள்—கோபமுடைய பாம்பு
தேரை—தவளை இனத்தில் ஒன்று
வெறிதிரை—மணங்கமழும் அலை
பொருணை—தாமிரபருணி
பூந்துளவம்—பூக்களுடன் கூடிய துளசிமாலை

4, அண்டம்—வெளி
மழைமாரி—மழைத்தாரை; இருபெயரொட்டுப் பண்புத் தொகை
புவனம்—உலகம்

5. மருவொழுகுந் துணர்வகுள மாலை மார்பன்
மனமகிழ்ந்து பரவுவதாம் புயத்தால் தோற்றும்
உருவறியாப் பரஞ்சுடரா வன்பர் சிந்தை
உள்ளிருக்கு மைச்சுடரென் றுலகம் வாழ்த்த
கருவரிவேல் விழிமலராள் அவள்பெண் கோதை
கண்டுகண்டு கனிந்துருகிக் காதல் கூர
பொருவரிய தென்குருகை நகரில் வாழும்
பொலிந்துநின்ற மாதவனா ராடீ ரூசல் 5

6. ஆழிவளைக் கரதலத்தார் ஆடீ ரூஞ்சல்
அம்புயமா னதிமோகர் ஆடீ ரூஞ்சல்
சூழிமதி வரையறுத்தோர் ஆடீ ரூஞ்சல்
சுக்கிரீவன் துணைவனார் ஆடீ ரூஞ்சல்
வீழிநறுங் கனியெனும்பொற் பவள வாய்மின்
மிதுலைநகர்ப் பெண்வேட்டோர் ஆடீ ரூஞ்சல்
வாழியெனத் தமிழ்மாறன் பாடல் கேட்டு
மனமகிழ்ந்து பொலிந்துநின் றாடீ ரூஞ்சல்.

---

5. மரு—வாசனை
துணர்—தளிர்
வகுளமலர்—மகிழமலர், வகுளமலர்மார்பன்—வகுளாபரணார் நம்மாழ்வார்
மைச்சுடர்—கரியசுடர் (கருஞ்சோதி)
மலராள்—இலக்குமி
பெண்கோதை—கோதைநாச்சியார், பன்னிரு ஆழ்வார்களில் ஒருவர்
பொருவரிய—ஒப்பில்லாத

6. ஆழி—சக்கரம்
வளை—சங்கு
கரதலத்தான்—கையில் உடையவன்
அம்புயமான்—இலக்குமி
சுக்கிரீவன் துணைவனார்—இராமர்
வீழிநறுங்கனி—கோவைக்கனி
மிதிலைநகர்ப்பெண்—சீதை
வேட்டான்—மணந்தவன்(இராமன்) திருமால் அவதாரங்கள் பத்தில் ஒன்றாதலால் கூறப்பட்டது

7. திருவளரு மணிமார்பன் வரிவண் டார்க்குஞ்
செழுந்துவளத்* தடம்புயத்தான் சிங்க ராசன்
கருவளருஞ் செனனவிடாய் மோட்ச மாற்றி
கதிகொடுக்குஞ் சரணமலர்க் கருணை மேகம்
உருவளருஞ் சிலைமதவேள் கமல வேதன்
உலகமுற்றும் பெற்றதிரு விதந்த ரன்சொற்
குருவளருஞ் செம்பொன்மணி மேடை சூழ்தென்
குருகைநகர்ப் பொலிந்துநின்றார் ஆடி ரூஞ்சல் 7

8. மேருகிரி ஒன்றிரண்டு கால்க ளாக
வெள்ளிவரை யேநெடிய விட்ட மாகப்
பாருலவு மிமையவரை பலகை யாகப்
பையனந்தன் தமனியச்சங் கிலிக ளாகச்
சீருலவு நறுமலர்வி தானம் நாட்டி
சிறந்தநவ ரத்தினமணி ஊஞ்சல் மீது
போருலவுஞ் சக்கரத்தா னாடி ரூஞ்சல்
புகழ்பொலிந்து நின்றபிரா னாடி ரூஞ்சல் 8

---

7. திரு—இலக்குமி
வளரும்—தங்கியிருக்கும்
* துவள—என்பது சுவடிபாடம்
சிங்கராசன்—நரசிம்மன்
கருவளரும் செனனவிடாய்—கருவிலே வளர்கின்ற பிறவியாகிய ஆசை
சிலைமதவேள்—மன்மதன்
கமலவேதன்—தாமரையிலிருக்கும் நான்முகன்
அரண்—சிவன்
குருவளரும்—ஒளிவீசும்
குருகைநகர்—திருக்குருகை; ஆழ்வார் திருநகரி; நம்மாழ்வார் பிறந்த ஊர். 108 வைணவத் திருப்பதிளுல் ஒன்று

8. மேருகிரி—மேருமலை
வெள்ளிவரை—கைலாசமலை
இமயவரை—இமயமலை
பையனந்தன்—படத்துடன் கூடிய ஆதிசேடன்
தமனியம்—பொன்

9. பூமாது பொலிந்துமணி மார்பி லாடப்
புயமாட வதிற்றுளவ மாலை யாடத்
தேமாலை நடுவில்வச்சிர மாலை யாட
செம்பொன்முடி யாடரத்னச் சுட்டி யாடக்
கோமாறன் தமிழ்மாலை பாடி யாடக்
குழையாட வைணவர்தம் குழாங்கொண் டாட
ஆமாறு புகழ்படைத்தோ னாடி ரூஞ்சல்
ஆதிநாதப் பெருமானா ராடீ ரூஞ்சல் 9

10. மாதவர்தம் உளங்களிப்பப் பொலிந்து நின்றார்
மண்டலமோர் அடியளப்பப் பொலிந்து நின்றார்
மேதகுசீர்க் கருமுகில்போல் பொலிந்து நின்றார்
மீறுமத கரியழைப்பப் பொலிந்து நின்றார்
மூதரா மேனடிப்பப் பொலிந்து நின்றார்
முக்கண்ண *னிரப்பொழிப்பப் பொலிந்து நின்றார்
போதுலவு திருத்துழாய்ப் பொலிந்து நின்றார்
புகழ்க்குருகை பொலிந்துநின்றா ராடீ ரூஞ்சல் 10

---

சக்கரத்தான்—திருமால் (இது தென்பாண்டி வழக்கு திருவாங்கூர் சமஸ்தான நாணயங்களில் சங்கு ஒருபுறம் சக்கரம் ஒருபுறம் பொறிக்கப் பெற்றிருக்கும். எனவே அங்கு காசு பணம் என்பதைச் சக்கரம் என்றும் காசுக் காரன், பணக்காரன் என்பதைச் சக்கரத்தான் என்றும் கூறுவது மரபு.)

9. பூமாது—இலக்குமி
துளவமாலை—துளசிமாலை
வச்சிரமாலை—வயிரமாலை, இது சுவடியில் வஜ்ர என்று இருந்தது சீர்நிலையில் அதுவே சரியானது.
பொன்முடி—பொற்கிரீடம்
கோமாறன்—ஆழ்வார்களுக்கெல்லாம் தலைவனாகிய நம்மாழ்வார்.
குழை—காதணி
ஆதிநாதன்—ஆழ்வார் திருநகரி இறைவன்

10. மண்டலம்—மண்தலம்; நிலம், மாவலிபால் மூவடி யாசித்து நிலத்தை ஓரடியால் அளந்தான்.
மதகரி—கஜேந்திரன்
மூதரா—காளிங்கன்

* சிறப்பு என்பது சுவடி பாடம்
போது – மலர்
துழாய்—துளசி

11. எண்ணிறைக்குங் கடற்புனலைப் பருகி மேகம்
இருண்டிரைக்கு நீர்க்குடனி ழிந்து லாவித்
தண்ணிருக்குங் காவரைம ருப்பு வாரி
கடங்கதலி வருக்கையுஞ்சந் தனமுந் தூக்கி
கண்ணிறைக்கு மலர்க்குவைவெண் டரள ராசி
கையரிக்கொண் டிரவியுடக் கனலை மாற்ற
விண்ணிறைக்குந் திரைப்பொருணை வளமை பாட
' மிக்கவரா மாதிபிரா னாடீ ரூஞ்சல் 11

12. வண்டலில் வரால்பாய வாளை பாய
மதகினிடை பாய்ந்துநடு வயலிற் பாய
கண்டலில்மேல் பஞ்சிலைகெண் டைபோய்* பாய
கமுகமிட றோடிமடுக் கயல்கள் பாய
முண்டகப்பூம் பொகுட்டிதழ்மேன் முருக்கு லாவு
முகை நெகிழ்ந்து வழிந்துபசுந் தேறல் பாய
கொண்டல்சொரி அருவிகள்தண் டலையிற் பாயுங்
குருகைமிக்க வாதிபிரா னாடீ ரூஞ்சல். 12

---

11. இழிந்து—கீழிறங்கி
கா—சோலை
கடங்கதலி—தேன்சொட்டும் வாழை
வருக்கை—பலா
இரவி—சூரியன்
கனல்—வெப்பம்

12. விரால், வாளை—மீனினங்கள்
மதகு—நீர் செல்லும் மதகுகள்
கண்டல்—கடல்மீன்வகை
* கெண்டைகள் என்பது சுவடி பாடம்
கமுகு—பாக்கு
முண்டகப் பொகுட்டு—தாமரைக்கொட்டை
முகை—மொட்டு
முருக்கு—வாசனை
கொண்டல்—மேகம்
தண்டலை—சோலை

13. தேன்முகந்து திரையேறி பணிலஞ் சிந்த
சிறந்ததிருச் சங்கநீர்ப் படிந்து நாளும்
வான்முகம்பார்த் துதையம்வர மலருஞ் செந்தா
மரைமுகத்துப்பூம்பொகுட்டா சனத்தில் மேவு
நான்முகனுந் தான்முகமாய்ப் பணிந்து போற்றி
நளினபரி புரகிரண சரணம் வாழ்த்தும்
ஆன்முகம்பார்த் தன்பொடுவேய்ங் குழல்வாய் வைத்த
ஆதிபிரா னேயரசே யாட ருஞ்சல். 13

14. சாற்றவல்ல சானகிபூந் தாமம் வேட்டு
சனகனவை யச்சிலையைத் தடக்கை யால்நாண்
ஏற்றவல்லா ரிமையவர்க்கு நல்லா ரண்டம்
எண்டிசையு மண்டபகி ரண்டம் யாவும்
தோற்றவல்லார் தொண்டர்தமக் கெளியார் சூழ்ந்த
சுரர்க்கிடர்சே யாகவலி தொலைய மாயம்
ஆற்றவல்லார் திருக்குருகை நகரில் மேவு
ஆற்றவல்ல மூர்த்தியினி தாட ருஞ்சல் 14

15. மலரயனார் தொழும்பதத்தா ராட ருஞ்சல்
வசிட்டமா முனிக்கருள்வோ ராட ருஞ்சல்
இலகுதனந் தனையுவந்தா ராட ருஞ்சல்
இந்திரனர்ச் சனைபுரிந்தா ராட ருஞ்சல்

---

13. பணிலம்—முத்து
பூம்பொகுட்டாசனம்—தாமரைமலர் இருக்கை
நளினம்—தாமரை
பரிபுரம்—காற்சிலம்பு

14. பூந்தாமம்—பூமாலை
வேட்டு—விரும்பி
சனகனவை—சனகன்சபை
சிலை—சிவதனுசு
இமையவர்—தேவர்
சுரர்—தேவர்
யாகம்—வேள்வி

15. மலரயன்—நான்முகன்
சங்கரன்—சிவன்

பலமுறுசங் கரன்பணிந்தா ராடீ ரூஞ்சல்
*பிருகுமார்சொல் வோர்கண்டோ ராடீ ரூஞ்சல்
அலர்மகிழ்மார் பன்தொழுமா லாடீ ரூஞ்சல்
ஆடியநீள் குடக்கூத்த ராடீ ரூஞ்சல். 15

16. வாமனசொ ரூபமாய் ரூப மாறி
மாவலிபால் மூவடிமுன் தரமுன் வாங்கிப்
பூமியந்த ரஞ்சுவர்க்க மூன்று மோங்கு
பொலிந்ததிரு விக்கிரமவ தார மாகி
நாமமேதி னியையொற்றை யடியு ளாக்கி
நான்முகனார் பரவம்ற்றோ ரடியில் வானை
நேமியால் நின்றளந்தா ராடீ ரூஞ்சல்
நீதிநின்ற வாதிபிரா னாடீ ரூஞ்சல் 16

17. பூவுலக முழுவதுமோர் அங்க மாகப்
பொலிந்துயர்ந்த வங்கத்தின் நடுவில் நட்டு
பாயுகங்கா நதியுயர்வான் விரித்து நீண்ட
பாய்மரப்பொற் சிலம்பலம்பும் பாத மாக
நாவுமன மும்மகிழ்ந்தர்ச் சனைசெய் நீதி
நான்முகனார் தாமுமொரு கரம தாக
மெவுதிரு விக்கிரமவ தார மாக
மிக்கஆதி மூர்த்தியினி தாடீ ரூஞ்சல் 17

---

* பொருள் தெளிவில்லை

16. வாமன சொரூபம்—குட்டை வடிவம்
ரூபம்மாறி—திருவிக்கிரம அவதாரம் எடுத்த
நின்ற சீர்நெடுமாறன்
நேமி—சக்கரம்

17. பூவுலகம்—பூமி
வங்கம்—கப்பல், தோணி
சிலம்பலம்பு பாதம்—சிலம்பு ஒலிக்கும் கால்கள்
நான்முகன்—பிரமன்
திருவிக்ரம அவதாரம்—மாவலிபால் மூவடிமண் வாமன
ராக இரந்து பெற்றபின் உலகமுழுதும் ஓரடியாக
அளக்க உயர்ந்த திருக்கோலம்

18. ஆதிநாதக் கடவுளா ராடீ ரூஞ்சல்
அருட்பொலிந்து நின்றபிரா னாடீ ரூஞ்சல்
சோதிமிக்க வாதிபிரா னாடீ ரூஞ்சல்
சுருதிமறை யாதிபிரா னாடீ ரூஞ்சல்
கோதிலா வாற்றவல்லா ராடீ ரூஞ்சல
குருகைநீள் குடக்கூத்த னாடீ ரூஞ்சல்
நீதிநின்ற வாதிபிரா னாதி மூர்த்தி
நெடிதூழி யாதிபிரா* னாடீ ரூஞ்சல் 18

19. வெண்குருகூர் வளவயலிற் கயல்கள் பாய்ந்து
விளையாட நடைவரம்பி னருகு மேயத்
திண்குருகூர் அரவுக்குக் காத்தி ருந்த
தேரைதன்னை இச்சித்துக் கவருந் தன்மை
பண்குருகூர் வாய்திறந்து கவிந்து சேலைப்
பருகுவது கண்டுகெண்டை பதுங்கிப் பார்க்கும்
வண்குருகூர் குருகூரென் றுவந்து கூகை
வாழ்த்தியதென் குருகூரா னாடீ ரூஞ்சல் 19

20. பூமானும் புவிமானும் மருங்கு தோன்றப்
புள்ளிமான் தன்னைப்போற் பொலிந்த பார்வை
நாமானும் நான்முகனும் அண்டம் யாவும்
நாபிவட்ட மீதிலங்க நலமாஞ் செஞ்சொல்
தேமானும் பார்வதியும் சிவனும் மிக்க
திலோத்தமையிந் திராணியுரு வசியும் வானோர்
கோமானும் பணிந்தாடிப் பாடிப் போற்றும்
குருகைநகர் பொலிந்து நின்றா ராடீ ருஞ்சல் 20

---

18. கோதிலா—குற்றமற்ற
சுருதி, மறை—வேதம்
* ஆழிபிரான் என்பது சுவடி பாடம்
19. குருகு—கொக்கு
சேல்—மீன்
கூகை—கோட்டான்
20. பூமான்—இலக்குமி
புவிமான்—பூமிதேவி,
நாமான்—சரஸ்வதி
நாபிவட்டம்—உந்திச்சுழி
செஞ்சொல்தேமான்—பார்வதி
வானோர் கோமான்—இந்திரன்

21. மூன்றுலகு மோரடியா லளந்த வேத
முதல்வனாம் நெடியமா லாடீ ரூஞ்சல்
மூளறுலகும் உண்டுமிழ்ந்து பசிபொ றாது
முதுவெண்ணை யுண்டபிரா னாடீ ரூஞ்சல்
மூன்றுலகு மரிநாரா யணவென் றோது
முகுந்தனச்சு தானந்த னாடீ ரூஞ்சல்
மூன்றுலகும் வளர்ந்தோங்குங் குருகை யாதி
மூர்த்தியாம் பொலிந்துநின் றாடீ ரூஞ்சல் 21

22. நறைவிரிக்குஞ் செழுந்துளப மாலை யாட
நவமணிசெங் கரத்தில்வளை யாழி யாடச்
சிறைவிதிக்குஞ் தனபதியம் புயத்தில் மேவு
சேவடியிற் பரிபுரபொற் சதங்கை யாடக்
கறைவிதிக்குங் கலைமதியைப் பழித்துக் கோடி
கதிர்விரிக்கும் மதிமுகத்திற் குறுவேர் வாட
மறைவிரிக்குஞ் தமிழ்த்திருவாய் மொழியைப் போல
வளர்ந்தோங்கிப் பொலிந்துநின் றாடீ ரூஞ்சல் 22

---

21. முகுந்தன்—அச்சுதன், அனந்தன்
நறை—தேன்
பரிபுரம்—காற்சிலம்பு
கறை—களங்கம்

22. மறை—வேதம்
வளைஆழி—வளைந்த சங்கு
தனபதி—குபேரன்
கறை—களங்கம்
கலைமதி—பதினாறு கலைகளையுடைய திங்கள்
கதிர்—ஒளி
மதிமுகம்—சந்திரன் போன்ற முகம்

23. மயல்வடிவா மடியவரீ டேற வேத
வாருதியைக் கடைந்துதமி ழமுத நல்குஞ்
செயல்வடிவா நம்பிதா மாக வந்த
செண்பகமார்க் கருள்செய்திரு மால்முன் னாட
கயல்வடிவாய் யிடையிரண்டு மூன்றி ரண்டாய்
கற்கிவடி வாகமர கதவண் ணஞ்சேர்
புயல்வடிவாய் நீள்குடக்கூத் தனுமாய்த் தோன்றி
பொலிந்துநின்ற மாதவனா ராடீ ரூஞ்சல் 23

24. கவியளந்து கண்டதிரு வாய்மொ ழிச்சொற்
கனிவளந்து நாதமுனி கொண்ட தானம்
செவியளந்து கருத்தளந்து கனியும் பாலும்
தேனுமொன்றாய்க் கலந்ததென தித்திப் பாக
ரவியளந்த பூசக்கிர வாளம் யாவும்
நவதரள மாய்ப்பிறக்க நலத்தால் முன்பிப்
புவியளந்து நின்றவாதிப் பிரானென் னாமம்
பொலிந்துநின்ற மாதவனா ராடீ ரூஞ்சல் 24

---

23. மயல்வடிவு—மயக்கவுருவம்
வேதவாருதி—வேதமாகிய கடல்
தமிழ் அமுதம்—தமிழாகிய அமிழ்தம்
ஆழ்வார் திருமொழி
நம்பி—ஆழ்வார்

கயல் வடியாய்—மச்சவதாரம்
இடையிரண்டு—இரண்டு அவதாரங்கள்
மூன்றிரண்டு—ஆறு ,,
கற்கி வடிவம்—கல்கி அவதாரம், ஆகத்திருமால்
அவதாரம் 10ம் கூறப்பெற்றன.
மரகதவண்ணம்—பச்சை நிறம்
புயல் வடிவம்—மேக வடிவன் (இங்குக் குணத்தைக் குறிக்கும்)
குடக்கூத்தன்—கரகமாடுந் திருமால்

24. திருவாய் மொழிக்கனிவு அளந்து } ஆழ்வார் பாசுரங்களின் அருள்கனிந்த சிறப்பை உணர்ந்து
நாதமுனி கொண்டதானம்—நாதமுனி தொகுத்துக் கொடையாகத் தந்த நாலாயிரம்

25. இரந்திரனா ரேற்றபலி தீர்த்த மூர்த்தி
இவனல்லா தில்லையென்று துணிந்த வேதம்
பரந்தரனா நாராயணத் தேவ ருக்கும்
பரந்தாமனென் பதன்றேல் வேழங் காத்த
துரந்தரனார் பகலிரவ தாகச் செய்த
சுடராழிப் படைபிரனார் சொல்லு மென்ன
புரந்தரனார் போற்றவரு ளாற்ற வல்ல
பொலிந்துநின்ற மாதவனா ராடூ ஞ்சல் 25

26. தேங்கமலக் கோதைதவம் செய்வ தாலிச்
செகத்திலிவ்வூர் திருநகரி யாமென் றேத்த
பாங்கமலக் கண்ணினுட படாத னந்தன்
பண்புறவா ராதனஞ்செய் பரிவி லாழி
தாங்கமலக் கைமுகங்கண் ணுறுப்பி யாவும்
தயங்குகரு மலைபோல வென்றா னாதி
பூங்கமலத் தோன்பரவு மிக்க வாதிப்
பொலிந்துநின்ற மாதவனா ராடூ ஞ்சல் 26

---

இரவி—சூரியன்
பூசக்ரவாளம்—பூமி
நவதரளம்—புதிய நன்முத்துகள்

25. அரனார்—சிவன்
ஏற்றபலி—பிரமகபாலத்தில் யாசித்தேற்ற பிச்சை
பரந்து அரநாராயணதேவர்—பரவில சங்கர நாராயணர்
வேழம்—கஜேந்திரன்
துரந்தரன்—காத்தற்கடவுள்
ஆழி—சக்கரம்
புரந்தரன்—இந்திரன்

26. கமலக் கோதை—இலக்குமி
திருநகரி—லட்சுமி நகரம் என்ற பொருள்தரும் பெயர்
அனந்தன்—ஆதிசேடன்
கை, முகம், கண், உறுப்பின்யாவும் — கையும், முகமும், கண்ணும், பிற அங்கங்களும் கமலம்—தாமரை
பூங்கமலத்தோன்—நான்முகன்

27. பார்வாழி வழுதிவள நாடு வாழி
பழமறைசெந் தமிழ்மணக்குங் குருகூர் வாழி
கார்வாழி பொலிந்துநின்ற கடவுள் வாழி
கமலமலர் மாதுபுவி மாது வாழி
ஏர்வாழி திருமதிட்புள் வேந்தன் வாழி
இசைபடைத்து வருநாத முனிவன் வாழி
சீர்வாழி மதுரகவி யாழ்வார் வாழி
சீபராங் குசமுனிவன் ஊஞ்சல் வாழி 27

---

27. வழுதிவளநாடு—குருகை நகர் இருக்கும் நாடு
பழமறை—வேதம்—தமிழ்வேதம் என்க. மறை இடைநிலை விளக்கு
கார்—மேகம், மழை
கமலமலர் மாது—தாமரைமலரில் வாழும் திரு
புவிமாது—பூமிதேவி
ஏர்—அழகு. கலப்பை (உழவுத் தொழில்)
புள்வேந்தன்—கருடாழ்வார்

# திருக்கோளூர்
# வைத்தமாநிதிப் பெருமாள் ஊஞ்சல்

## திருக்கோளூர்

கோளூர் பாண்டிய நாட்டில் அமைந்திருக்கின்ற ஒரு வைணவத் திருப்பதி. இது திருநெல்வேலி புகைவண்டி நிலையத்திலிருந்து சுமார் 20 கல்தொலைவில் உள்ளது. ஆழ்வார் திருநகரிக்குத் தென் கிழக்கில் ஒருகல் தொலைவில் இருக்கின்றது. இங்குக் கோவில் கொண்டிருக்கும் திருமால் **'வைத்த மாநிதிப் பெருமாள்'** என்று பெயர்பெற்றுள்ளான். தாயார் கோளூர் வல்லி எனப்படுகின்றாள்.

கோள்—கொள்கை, புறங்கூறல்; புறங்கூறிப் பகைகொண்டிருந்த சேர சோழ பாண்டியர் ஒன்று பட்டு வாழ்வதே சிறந்த கொள்கை என்று சிவபெருமான் திருவருளால் உணர்ந்து ஒன்று கூடிச் சிவபெருமானை வழிபட்ட இடம் என்பர்.[1] அதனால் இது கோள் + ஊர் = கோளூர் எனப்பெயர் பெற்றது என்பர். இவ்வூரில் சிவபெருமான் திருக்கோவில் ஒன்று இருக்கின்றது. இந்தப் பெருமான் பெயர் **சேரசோழபாண்டீச்சுரர்** என்பது. இதை அதற்குச் சான்றாகக் காட்டுவர். இந்த இறைவனை 700 ஆண்டுகட்கு முன்னர் பாண்டி நாட்டை ஆண்ட குலசேகர மன்னன் தோற்றுவித்தான்[2] என்று கருதுவர்.

நவநிதிகளும் இங்கே ஒளிந்து கொண்டிருக்கின்றது என்று அதர்மம் குபேரனிடம் கோள் (பொய்) சொல்லியதால் இது கோளூர் எனப்பட்டது என்பர். [3]

---

1. நெல்லை மாவட்ட கோவில் வரலாறு, ப. 186
2. பொருணைநாடு, எஸ். கணபதிராமன், ப. 123
3. கலைக்களஞ்சியம், தொகுதி 5, ப. 138

இத்தலத்து இறைவனை நம்மாழ்வார் போற்றிப் புகழ்கின்றார்.

வைத்த மாநிதியாம் மதுசூதன்

என்பதும்,

கொடியார் மாடக் கோளூரகத்தும் புளிங்குடியும்
மடியாது இன்னே நீ துயில் மேவி மகிழ்ந்தது

என்பதும் நம்மாழ்வாரின் வாக்கு.

ஒரு முறை குபேரனுக்குப் பார்வதி தேவியார் சாபம் வந்தது. அதனால் அவனுடைய நிதிகள் இங்கே வந்து மறைந்து கிடந்தன. குபேரன் தவம் செய்து அந்த நிதிகளைப் பெற்றான். அதனால் பெருமாள் வைத்தமாநிதிப் பெருமாள் ஆயினான். இங்ஙனம் குபேரனுக்குப் பெருமாள் ஒரு மாசி மாதத்தின் துவாதசியிலே அருளினான் என்பர். தென்திசையின் திலகம் எனப்படும் இவ்வூரிலேதான் மதுரகவி யாழ்வார் தோன்றினார்.

வைணவ இலக்கியங்களின் மரபுப்படியே இந்நூலாசிரியரும் நம்மாழ்வாரைக் காப்பில் வைத்துப் பாடுகின்றார். இதில் முதலிரண்டடிகளில் பெருமாளைச் சுட்டி, இறுதி இரண்டடிகளில் நம்மாழ்வாராகிய நாவீறுடையபிரானைச் சுட்டுகின்றார்.

பார்பூத்த போதனையுந் தியினிற் பூத்துப்
பலகோடி யண்டமெலாம் பூத்த எந்தை
கார்பூத்த திருமேனி பொலிவு பூத்த
கண்ணனைவைத் தமாநிதியார்க் கூஞ்சல் பாட

உடைய நங்கையானவள் பெற்றெடுத்த, மறைப்பொருளை ஆராய்ந்து எவரும் உணரும் படி எளிதாகப் படைத்து திருவாய் மொழியைப்பாடிய (மாறனை) நாவீறு உடையவனை வேண்டுகிறேன் என்கிறார் ஆசிரியர்.

## வைத்தமாநிதிப் பெருமாள்

வில்லெய்தும் ஆற்றலும், போர்புரியும் திறமும் கொண்டதிரண்ட புயங்களுடையோன் இலங்கை அரசன் இராவணன். அவனது தலைமையின் வல்லமையையும், உடல் பலத்தையும் இராமனுக்கு இளையோன் இலக்குவன் கூற, அதைக் கேட்டு நகைத்தான் இராமபிரான். அழகாபுரியோனாம் குபேரன்

ஒளிவிடும் மணிமுடியை இவனுக்குக் கவிழ்த்து வாழ்த்தி ஞன். அப்படிப்பட்ட பெருமாள் நீ அலைவளமும் கடல் வளமும் செழித்தோங்குகின்ற கோளூரிலே வைத்த மாநிதிப் பெருமாளாக அமைந்திருக்கின்றாய் என்று அவனது சிறப்புச் சொல்லி அவனை ஊஞ்சலாட அழைக்கின்றார் நூலாசிரியர்.

அவன் அண்டகடாகங்களை உண்டு உமிழ்ந்தவன். இரண்டடி யால் மூவுலகையும் அளந்த சிறப்பு மிக்கவன். திருஞான முத்திரை பெற்றவன். சேவிப்போரை வாழ்விக்கும் திருமால். செழுமை யான துளசிமாலை அணிந்த செம்மல் என்று, இப்பாடல் வைத்த மாநிதிப் பெருமாள் தன் புகழ்பாடுகின்றது.

அனைத்துலக முடையபிரா னாடீ ரூஞ்சல்
ஆண்டிலாள்க ருத்துறைவோ னாடி ரூஞ்சல்
நினைத்தவளம் தரும்பெருமா ளாடீ ரூஞ்சல்
நீடுவாழ்வ ருள்வோனா ராடீ ரூஞ்சல்
கனத்தவரி வளைதரித்தோ னாடீ ரூஞ்சல்
கதையொடுவிற் சிலைபிடித்தா னாடி ரூஞ்சல்
வனத்திடை போய் மீண்டுவந்தா னாடி ரூஞ்சல்
வைத்தமா நிதிப்பெருமா ளாடீ ரூஞ்சல்

என்று இறைவனின் புகழை மிக அழகாக எடுத்துக் காட்டுகின்றார் ஆசிரியர்.

ஆற்றல் மிக்க கொடைவள்ளல் பெருநிதியாளன் குபேரன் (அளகைவேந்தன்). அவன் எப்பொழுதும் போற்றி வணங்கும் சக்கர ஆயுதத்தைக் கையிலுடையவன் திருமால். பாரதப்போரின் போது பாண்டவர்களுக்காகத் துரியோதனனிடம் தூது சென்ற போது, கௌரவர்களின் சிறிய தந்தையாகி விதுரன் வீட்டில் உணவருந்திய ஒளிமிக்கவன். அத்திருமாலின் மார்பில் ஒளிரும் இலக்குமிபோல திருமால் நெஞ்சில் நிலைத்துநின்று விமலனாகியத் திருமாலை, அமலனை ஆதிமாலை, வணங்கும் மகிழமாலையை அணிந்த பெருங்கவிஞர் கோமானாகிய நம்மாழ்வாரின் மலரடி களுக்குஅன்பு பூண்டவர் மதுர்கவி. அந்த மதுரகவிக்கு அருள் புரிந்த திருமால் வைத்த மாநிதிப் பெருமாள்.

அழகிய மாடங்கள் சூழ்ந்த திருக்குருகூரில் உறைந்திருக்கின்ற வர் மகிழ்மாலை அணிந்தவர் நம்மாழ்வார். அவர் நான்கு வேதங்களின் உட்பொருளாக,

உண்ணுஞ்சோறும் பருகும்நீர் தின்னும் வெற்றிலையு
மெல்லாம்
கண்ணன் எம்பெருமா னென்றென்றே கண்கள் நீர்மல்கி
மண்ணினுள வன்சீர் வளம்மிக்கவனூர் வினவி
திண்ணமென் னிளமான்புகுமூர் திருக்கோளூரே

எனச் செந்தமிழில் ஆராய்ந்து, இசைபொருந்த பாடினார். அப்படிப் பாடிப் போற்றுமாறு நம்மாழ்வார்க்குக் கருணை கூர்ந்தவர் திருமால்—வைத்த மாநிதிப் பெருமாள்.

**ஊஞ்சல்**

ஊஞ்சலின் சிறப்புப் பற்றி—அது அமைந்த நிலை பற்றி ஒரு பாடல் சுட்டுகின்றது. மிகப்பெரிய மேருமலை கால்களாகவும், பனிமேகப்படலம் ஊஞ்சல் மேலே—நடுவிலே அமையும் விட்டமாக வும், மேகம் உலவுகின்ற மழையே கயிறாகவும், அகன்ற இந்த உலகம் பலகையாகவும், பொய்கைகளிலும் மரங்களிலும் பூத்துக் குலுங்குகின்ற மலர்கள் விதானமாகவும் அமைந்ததாக உருவகம் செய்கின்றார் ஆசிரியர்.

பெண்களை மிக அழகாக வண்ணனை செய்வதில் புலவர்கள் பெரும்பாலும் கைதேர்ந்தவர்களாகக் காணப்படுகின்றனர். ஆசிரியர் ஆண்டிலாளின் சிறப்புக்கூறி அவரது கணவரை ஊஞ்ச லாட அழைக்கின்றார். அவர் வண்ணனை செய்யும் முறை மீண்டும் மீண்டும் படித்தின்புறம் தக்கது.

வில்லியார் வடுக்கிணையார் விழியார் செம்பொன்
மேனியார்ப ணைக்கரங்கை வெற்பார் பொற்பார்
சொல்லியார் செழுந்தேனும் பாலும் போல
சுவைபிறந்த மடலவிழும் துணர்பூங் கொத்தார்
அல்லியார் செழுங்கமல பீடத் தார்முன்
அகிலாண்ட லோகமெல்லாம் பெற்ற கோளூர்
வில்லியராண் டிலாள்

என்று பல்வேறு அடைகளைக் கொடுத்து வண்ணனை செய்கின் றார் கவிஞர்.

அவர் ஊஞ்சலாடும் போது என்னவெல்லாம் ஆடுகிறது என்று பட்டியலிட்டுக் காட்டுகின்றார் ஆசிரியர். அவரது வாணுதலிலே இரத்தினச்சுட்டி யாடுகின்றது. வண்டுகள்

மொய்க்கும் அளவிற்கு தேன் ஒழுகுகின்ற துளபமாலை அழகிய அவரது மார்பிலே ஆடுகின்றது. அழகு நிறைந்திருக்கும் அவரது முகத்தில் குறுவியர்வை ஆடி ஓடுகின்றது. இரண்டு பாதங்களிலும் சிலம்பும், பொற்சதங்கையும் ஆடுகின்றன. விந்தை செய்கின்ற அவரது புயத்திலே முத்துவடங்கள் ஆடுகின்றன. பஞ்ச ஆயுதங்களும் அவரது செம்மையான கரத்திலே ஆடுகின்றன; என்றெல்லாம் அவற்றை விரிவாக்கிக் காட்டுகின்றார்.

### இயற்கை

வாழைப்பழம் கனிந்து கசிந்தது. அதிலிருந்து ஒழுகுந்தேன் அடர்ந்த சோலையிலுள்ள மான்களின் மடியிலிருந்து சுரந்த பாலாகிய தேனுடன் கலந்து பாலாறாக ஓடியது. அது கரும்பு மஞ்சள், இஞ்சி, பலா, மா, வானைமுட்டும் முடத்தெங்கு இவைகளுக்குப் பாய்ந்து நெற்பயிருக்கும் பாய்ந்து விளைவதற்குப் புகுகின்ற ஊர் கோளூர். இனிய கற்கண்டைப் போன்ற குளிர்ந்த மொழியை உடைய செல்வியினுடைய இதழமுதை விரும்பும் தலைவன் திருமால் என்கிறார் அவர்.

அவனது துளபமாலையின் தேன் பருக வந்த வண்டின் கூட்டங்கள் இசைபாடுகின்றன. அந்த மாலையணிந்த வைத்த மாநிதிப்பெருமாள் புகழைக்,

கண்டடர்ந்த பனிமொழிபூம் பாவை கோவைக்
கனியிதழ்பூ மான்கோமான் கதலித் தேன்மான்
பண்டடர்ந்த மடிச்சுரந்து பாலா றோடிப்
பசுங்கரும்பு மஞ்சளிஞ்சி பலவு தேமா

என்று ஆசிரியரது தொடர்களாலேயே நுகர்கின்றது இன்பம் தருகிறது.

அழகான திருக்கோளூரின் வளமை பாடுகிறேன் என்று ஆசிரியர் குறிப்பிடுகின்றார் (பா—11) மணம் பொருந்திய மலர்களை உடைய மரங்கள் எல்லாம் சோலையில் விண்ணை முட்டுகின்ற அளவுக்கு வளர்ந்திருக்கின்றன. மிக உயரமாக வளர்ந்து வானை முட்டியதால்தான் தெங்கு—முடத்தெங்காயிற்று என்பர் பிறரும். வாளையும் வராலும் எதிரெதிரே பாய்ந்துகொள்கின்றன. அப்படிப் பாய்கையில் வாளையானது மரத்திலே கொத்தாக இருக்கின்ற மாங்கனியிலே மோதிவிடுகின்றது. மாங்

கனி உடைந்து அதிலிருந்து மாந்தேன் ஒழுகுகிறது. ஒழுகியதேன் முதிர்ந்த நெற்கதிர்கள் உள்ள வயலின் கரையையுயும் கடந்து செல்கின்றது. அதனுடன் கரும்புச்சாறும் கலக்கின்றது. என்றெல் லாம் தன் கற்பனையை ஓடவிட்டு அதிலே ஒரு கோளூரைப் படைத்துக் காட்டுகின்றார் கவிஞர்.

## பலர் செய்யும் தொண்டு

மாநிதியார்க்கு அனேகர் அழகாய்த் தொண்டு புரிகின்றனர். தேன் போன்று இனிமையுடனும், கனிவுடனும் பேசும் மொழி யுடைய பெண்கள் ஊஞ்சலின் வடங்களைத் தொட்டு ஆட்டு கின்றனர். தமிழிலே கவிதை புனைவதில் வல்ல கவிவாணர்கள் கவிதைபாடி இவர் புகழ் கூட்டுகின்றனர். காடே புகழத்தக்க குழற்காடுடைய அரம்பை திலோத்தமையானவள் இவருக்குக் கவரி வீசுகின்றாள். அத்துடன் நின்று விடாமல், சடாதரனாம் சிவனும், என்கண்ணனாம் பிரமனும்இவரை வந்து வணங்குகின் றார்கள் என்று கற்பனை செய்கின்றார் அவர்.

இவருக்குத் தொண்டுகள் இவ்வளவுடன் நிற்க, இவரது வல்லி யாருக்குத் தொண்டு மேலும் தொடர்கின்றது. சிலை போன்ற நுதலுடைய பெண்கள் இருபுறமும் நின்று வடந்தொட்டு ஆட்டு கின்றனர். அங்கே அரம்பை திலோத்தமை கவரி வீசினாள். இங்கே சுறவுவிழி நங்கையாம் ஊர்வசி கவரி வீசுகின்றாள்.

அந்தத் திலோத்தமை இங்கு நின்று அவள் சொல்லும் ஏவலுக்காகக் காத்திருக்கின்றாள். நறவொழுகும் மொழியரம்பை தாம்பூலம் ஏந்தி நிற்கின்றாள். சரசுவதி பல பண்ணிசைத்து இசைப்பாடல்கள் பாடுகின்றாள்.

சடையோனாம் சங்கரன் ஒருபுறமும், அவனது இல்லாள் மலைமகள் மற்றொரு புறமும் வடந்தொட்டு ஊஞ்சலை ஆட்டு கின்றனர். பல மங்கையர் பலபுறமும் நின்று அவளுக்கு ஏவல் கேட்கின்றனர். நாமகளும் மேனகையும் அவள் வரும் வழியில் அவளடி தரையில் படாவண்ணம் பாவாடை போடுகின்றனர். பக்கத்திலெல்லாம் தமிழர்கள் தமிழிசைப் பாடிக்கொண்டிருக் கிறனர். நான்முகனாரும், உமையும், ஞானியர்களும் இவருக்குப் பணிவிடைகள் செய்கின்றனர்.

சரந்தகும்வேல் விழிமடவார் வடந்தொட் டாட்ட
தமிழ்வாண ரகமகிழ்ந்து கவிதை பாட
நிரந்தரமும் பலவிதவாத் தியங்க ளார்ப்ப
நேசமுடன் மதுரகவி ஆசி கூற

(பாடல், 16)

புரந்தரன், ஊர்வசி, போதன், நாவாணி போன்றோர் வடந்தொட்டாட்டியும், பல பணிகள் செய்தும் அவரை ஆட்டு கின்றனர்.

மலர்சூடிக் கொடுத்தா ளாடீ ரூஞ்சல்
மங்கைசீ வரமங்கை ஆடீ ரூஞ்சல்
அலர்மேலு மங்கையினி தாடீ ரூஞ்சல்
அருள்புவி மடந்தையினி தாடீ ரூஞ்சல்
நலமிகு சனகன்மக ளாடீ ரூஞ்சல்
நாச்சியார் லெட்சுமிதேவி ஆடீர் ஊஞ்சல்

(பாடல், 17)

என்று அவளது சிறப்பினை எளிமையாகவும், இனிமையாகவும் தெளிவாகவும் உரைக்கின்றார் ஆசிரியர்.

நாடுகளில் சிறந்து விளங்குகின்ற வழுதிநாடு வாழ்க. ஆழ்வார் திருநகரியின் நம்மாழ்வார் வாழ்க. வேதத்தொக்கும் திருமவாய் மொழி நூல் வாழ்க. மலர் மாதும், புவிமாதும் மதுர கவி ஆழ்வாரும், தென்கோளூர் நலமும் வேறு பல்நலமும் வாழ்க! வாழ்க! என்று வாழ்த்துகிறது இறுதிப்பாடல்.

## நூல்

1. பார்பூத்த போதனையுந் தியினிற் பூத்துப்
பலகோடி அண்டமெலாம் பூத்த எந்தை
கார்பூத்த திருமேனி பொலிவு பூத்த
*கண்ணன் வைத்த மாநிதியார்க் கூஞ்சல் பாட
வார்பூத்த வுடையசன நங்கை பெற்று
மனங்களிக்க மறைப்பொருள்யா வையுமா ராய்ந்து
சீர்பூத்த வியற்றிருவாய் மொழியைப் பாடுந்
திருநாவீ றுடையபிரான் காப்ப தாமே 28

2. பாருமக மேருவிரு கால்க ளாகப்
பனிமேகப் படலநடு விட்ட மாகக்
காருலவு மழைமாரி வடம தாகக்
கண்ணகன்ற பாருலகம் பலகை யாகச்
சீருலவு நறுமலர்வி தான நாற்றிச்
சிறப்பாக அலங்கரித்த ஊஞ்சல் மீது
வாருலவுங் கனதனப்பெண் ஆண்டி லாள்சேர்
வைத்தமா நிதிப்பெருமா ளாடீ ரூஞ்சல் 29

---

1. பார்பூத்த—உலகைப்படைத்த
போதன்—நான்முகன்
உந்தி—கொப்பூழ்
வார்பூத்த—கச்சனிந்த
உடையசன நங்கை—நம்மாழ்வாரின் தாய்
* கண்ணென என்பது வேறு சுவடி பாடம்

2. பாரமக மேரு—மிகப்பெரிய மேருமலை
வடம்—கயிறு
கண்ணகன்ற—இடமகன்ற
விதானம்—மேல்முகடு

3. சிலைவளமு மடல்வளமும் பழகி மற்போர்
திரண்டபுய பூதரமி லங்கை வேந்தன்
தலைவளமும் மடல்வளமு மிளையோன் கூறத்
தான்கேட்டு நகைத்தசெய தரவில் லாளி
கலைவளமுஞ் சுடர்வளமுங் கலந்த மோலி
கவிழ்த்தழகா புரியோன்...கண்டு வாழ்த்த
மலைவளமுங் கடல்வளமும் செழித்த கோளூர்
வைத்தமா நிதிப்பெருமா ளாடீ ரூஞ்சல் 30

4. கண்டடர்ந்த பணிமொழிபூம் பாவை கோவைக்
கனியிதழ்பூ மான்கோமான் கதலித் தேன்மான்
பண்டடர்ந்த மடிச்சுரந்து பாலா றோடிப்
பசுங்கரும்பு மஞ்சளிஞ்சி பலவு தேமாக்
கொண்டல்தவழ் முடத்தெங்கு நிரம்பப் பாய்ந்து
கொடுஞ்சாலி விளைபுகுமூர் வளமே பாட
வண்டளம்வந் திசைபாடுந் துளபத் தாமன்
வைத்தமா நிதிப்பெருமா ளாடீ ரூஞ்சல் 31

---

4. சிலைவளம்—வில்,
அடல்—போர்
இலங்கை வேந்தன்—இராவணன்
இளையோன்—இலக்குவன்
தரவில்லாலி—இராமன்
மோலி—மணிமுடி
அழகாபுரியோன்—குபேரன்

4. கண்டு—கற்கண்டு
கதலி—வாழை
கொழுஞ்சாலி—கொழுத்தநெல்
வண்டளம்—வண்டுக்கூட்டம்
துளபத்தாமன்—துளசிமாலை அணிந்த வைத்தமாநிதிப் பெருமாள்

பூமான், கோமான், துளபத்தாமன் என்று கூட்டுக.

5. அண்டகடா கங்களையுண் டுமிழ்ந்த தல்லால்
அடியிரண்டிற் புவனமூன் றளந்த கோமான்
பண்டமர ரிடரகற்ற வாயி ரங்கண்
படைத்தவனுக் கிளவரசாய்ப் பணிந்து வாழ்வோன்
செண்டணிந்த ஞானமுத்(தி ரைக் கரத்தான் வந்து
சேவிக்க வாழ்விக்குந் திருமால் செம்பொன்
வண்டகலாச் செழுந்துளப மாலை வேய்ந்த
வைத்தமா நிதிப்பெருமா ளாடீ ரூஞ்சல் 32

6. சதுரவித ரணதனத்த னளகை வேந்தன்
சந்ததமா ராதனஞ்செய் சக்கிர பாணி
விதுரன்மனை புகுந்தடிசி லருந்துஞ் சோதி
விமலனம லாதிமால் மலர்மின் னாள்போல்
கதிருதய வகுளபூ ஷணவித் தார
கவிராச கேசரிசே வடிக்கன் பான
மதுரகவிக் கருள்புரிந்த மாமால் கோளூர்
வைத்தமா நிதிப்பெருமா ளாடீ ரூஞ்சல் 33

---

5. அமரர்—தேவர்
ஆயிரங்கண் படைத்தோன்—இந்திரன்
சேவிக்க—வணங்க

6. சதுரன்—ஆற்றல் மிக்கவன்
விதரனன்—கொடையாளன்
தனதன்—செல்வத்துக்கு அதிபதி ஆகிய அளகைவேந்தன்
—குபேரன்
சந்ததம்—எப்போதும்
ஆராதனம்—ஆராதனை
விதுரன்—திருதாட்டிரனின் இளவல்
விமலன்—குற்றமற்றவன்
வித்தாரகவி, கவிராச கேசரி, எல்லாம் நம்மாழ்வார்க்
கடை மொழிகள்

7. அனைத்துலக முடையபிரா னாடீ ரூஞ்சல்
ஆண்டிலாள் கருத்துறைவோ னாடீ ரூஞ்சல்
நினைத்தவரந் தரும்பெருமா ளாடீ ரூஞ்சல்
நீடு(ழி) வாழ்வருள்வோ னாடீ ரூஞ்சல்
கனத்தவரி வளைதரித்தோ னாடீ ரூஞ்சல்
கதையொடுவிற் சிலைபிடித்தா னாடீ ரூஞ்சல்
வனத்திடை போய் மீண்டுவந்தா னாடீ ரூஞ்சல்
வைத்தமா நிதிப்பெருமா ளாடீ ரூஞ்சல் 34

8. வில்லியார் வடுக்கிணையார் விழியார் செம்பொன்
மேனியார் பணைக்கரங்கை வெற்பார் பொற்பார்
சொல்லியார் செழுந்தேனும் பாலும் போலச்
சுவைபிறந்த மடலவிழுந் துணர்பூங் கொத்தார்
அல்லியார் செழுங்கமல பீடத் தார்முன்
அகிலாண்ட லோகமெல்லாம் பெற்ற கோளூர்
வல்லியார் ஆண்டிலாள் மகிழ்ந்து வேட்ட
வைத்தமா நிதிப்பெருமா ளாடீ ரூஞ்சல் 35

9. சிந்துரவா ணுதல்ரத்(தி)னச் சுட்டி யாடத்
திருமலைவண் டுளபமணி மார்பி லாடச்
சந்திரவிம் மதிமுகத்திற் குறுவேர் வாடச்
சரணிணையிற் சிலம்பொடுபொற் சதங்கை யாட
விந்தைசெயும் புயத்துமுத்து வடங்க ளாட
வீசுபஞ்சா யுதங்களும்செங் கரத்தி லாட
வந்தனைசெய் மதுரகவி யாழ்வார் போற்றும்
வைத்தமா நிதிப்பெருமா ளாடீ ரூஞ்சல் 36

---

7. ஆண்டிலாள்—வைத்தமாநிதிப் பெருமாள் வல்லி
வளைதரித்தோன்—சங்கணிந்தோன்; திருமால்
கதை—கதாயுதம்
வனம்—காடு
8. வடுக்கிணையார் விழியார்—மாம்பிஞ்சின் வடுபோன்ற விழியார்
துணர்பூங்கொத்து—துளிருடன்கூடிய பூங்கொத்து
வேட்ட—விரும்பிய
9. சிந்துரம்—திலகம்
வாணுதல்—ஒளிவிடும் நெற்றி
குறுவேர்வு—வியர்வை அரும்பு
சரணிணை—இரண்டு பாதங்கள்

10. வண்ணமா டந்திகழ்தென் குருகூர் வாழும்
மகிழ்மாறன் சுருதியினுண் பொருளி னாலின்
உண்ணும்சோ றும்பருகு நீரும் யாவும்
உகந்துகண்ண னென்றிருகண் களினீர் மல்க
திண்ணமென இள(மட)மான் புகுமூர் மிக்க
திருக்கோளூ ரென்றுசெழுஞ் தமிழா ராய்ந்து
பண்ணிறைய பாடிமிகக் கருணை கூர்ந்தன்
பால்வைத்த மாநிதிமா லாடீ ரூசல் 37

11 வாசமலர்ச் சோலைசூழ் மஞ்சு மேவ
வாலறைந்து வாளைவரா லெதிர்த்துப் பாய
மூசிமாங் கனியுடைந்து நறவி கெம்பு
முதுசெய்யின் கரைகடந்து மோதுஞ் செந்நெல்
ஆசறுபூங் கன்னல்முத்து கோட்டை சூழ்ந்த
அழகான திருக்கோளூர் வளத்தைப் பாட
நேசமிகத் செழுந்துளப மாலை சேரும்
நிதிவைத்த மாநிதிமா லாடீ ரூஞ்சல். 38

12 தேன்கனிந்த மொழிமடவார் வடந்தொட் டாட்ட
செந்தமிழ்சேர் நாவாணர் கவிதை பாடக்
கான்புகழும் புடைசூழும் குழல ரம்பை
காஞ்சியணி திலோத்தமைநற் கவரி வீச
வான்கங்கை தரித்தசடா தரனெண் கண்ணன்
வந்துபணி மதுரகவி மகிழ்ந்து வேட்ட
மான்கணென்னும் வில்லிஸ்ரீ தேவி போற்றும்
வைத்தமா நிதிப்பெருமா ளாடீ ரூஞ்சல். 39

---

10. மகிழ்மாறன்—மகிழமாலை சூடிய மாறன்
திண்ணமில்—வன்மை இல்லாத

11. மஞ்சு—பனி (மஞ்சாடும் மலைமங்கை மணாளன்— அப்-தேவாரம்)
மூசி—கொத்து
செய்—வயல்
ஆசறு—குற்றமற்ற
கன்னல்—கரும்பு

12. மடவார்—பெண்கள்
நாவாணர்—கவிவாணர்
கஞ்சியணி—ஒட்டியாணம்
எண்கண்ணன்—நான்முகன்
ஸ்ரீதேவி—இலக்குமி

13. சிறந்தநவ ரத்தின ஊஞ்சல் மீது
சிலைநுதலா ளிருபுறமும் வடந்தொட் டாட்ட
சுறவுவிழி யுருவசிநற் கவரி வீசச்
சொல்புகழுந் திலோத்தமைநின் றேவல் கேட்ப
நறவொழுகு மொழியரம்பை யடப்பை யேந்த
நாமகள்பண் ணிறைத்துநல் லிசைகள் பாட
சிறந்தமறை சேருந்தென் கோளூர் வாழும்
செல்விபெண்கள் வல்லியா ராடீ ரூஞ்சல் 40

14. சடையோனும் மலைமகனும் வடந்தொட் டாட்ட
*தமிழ்க்குகனுங் கணபதியும் கவரி வீச
நடையில்அன மங்கைச்சி† யொட்டி வீச
நாமகள்மே னகையும்பா வாடை போட
புடைபரவுந் செழுந்தமிழோ ரிசைகள் பாட
போதனுமை ஞானியரும் வேத மோத
இடைநுணிடை வல்லியா ராடீ ரூஞ்சல்
வைகுந்த சிறைவல்லீ ராடீ ரூஞ்சல் 41

---

13. சுறவுவிழி—சுறாமீன் போன்ற விழி
நறவு—தேன்
நாமகள்—சரசுவதி

14. சடையோன்—சிவன்
மலைமகள்—பார்வதி
தமிழ்க்குகன்—ஆறுமுகன்
* தமிட்டுகுகன் என்பது பாடம்
அனமங்கை—அன்னம்போன்ற மங்கை
பாவாடை—பரவிய ஆடை; கால் வைத்து நடப்பதற்கு விரிக்கப்படும் ஆடை
போதன்—நான்முகன்
† பொருள் தெளிவில்லை.

15. சரந்தகும்வேல் விழிமடவார் வடந்தொட் டாட்ட
தமிழ்வாண ரகமகிழ்ந்து கவிதை பாட
நிரந்தரமும் பலவிதவாத் தியங்க ளார்ப்ப
நேசமுடன் மதுரகவி யாசி கூறப்
புரந்தரனூர் வசியுமொரு வடந்தொட் டாட்ட
போதனுநா வாணியுமோர் வடந்தொட் டாட்ட
சரஞ்சூடிக் கொடுத்தவல்லி யாடீ ரூஞ்சல்
சானகிகோ ளூர்வல்லி யாடீ ரூஞ்சல் 42

16. மலர்சூடிக் கொடுத்தா ளாடீ ரூஞ்சல்
மங்கைசீ வரமங்கை ஆடீ ரூஞ்சல்
அலர்மேலு மங்கையினி தாடீ ரூஞ்சல்
அருள்புவி மடந்தையினி தாடீ ரூஞ்சல்
நலமிகு சனகன்மக ளாடீ ரூஞ்சல்
நாச்சியார்லட்சுமிதேவி* யாடீ ரூஞ்சல்
வலமிகுதென் கோளூர்வல்லி யாடீ ரூஞ்சல்
வைத்தமா நிதிவல்லி யாடீ ரூஞ்சல் 43

17. சிறந்ததிரு வழுதிவள நாடு வாழி
திருக்குருகை மாநகர்நம் மாழ்வார் வாழி
அறந்தருவே தத்திருவாய் மொழிநூல் வாழி
அளகைநக ராகியதென் கோளூர் வாழி
இறங்குமலர் மாதுபுவி மாது வாழி
பேசுபுகழ் மதுரகவி யாழ்வார் வாழி
மறம்செயும்பொன் னாழிவலம் புரியும் வாழி
வைத்தமா நிதிப்பெருமா ளாடீ ரூஞ்சல். 44

---

15. சுரம்—அம்பு
ஆர்ப்ப—ஒலிக்க
புரந்திரன்—இந்திரன்
நாவாணி—சரசுவதி
சூடிக்கொடுத்தவல்லி—ஆண்டாள்

16. சீவர மங்கை—ஊர்ப்பெயர்
அலர்மேலுமங்கை—இலக்குமி
புவிமடந்தை—பூமிதேவி
நாச்சியார்—ஆண்டாள்
* லக்ஷ்மிதேவி என்பது சுவடிபாடம்;

17. திருக்குருகை மாநகர்—ஆழ்வார் திருநகரி
அளகைநகர்—குபேரன் நகர்
மலர்மாது—இலக்குமி
வலம்புரி—சங்கு

# 5. சடகோபர் ஊஞ்சல்

## நம்மாழ்வார்

திருநெல்வேலி மாவட்டத்தில் பொருணை ஆற்றின் நதிக் கரையில் உள்ளது திருநகரி என்னும் ஊர். அவ்வூர் திருக்குருகூர் என்றும் வழங்கப்படும். அங்கு, வேளாளர் குலத்துக் காரியார் என்பவருக்கும், திருவெண்பரிசாரம் என்ற திருப்பதியின் உடைய நங்கை என்பவளுக்கும் நம்மாழ்வார் மகவாய்த் தோன்றினார்.

மிக்க இளம்பருவத்திலேயே இவருக்கு இறைவனருள் கை கூடிற்று. இவர் அமர்ந்திருந்த புளியமரம் **திருப்புளியாழ்வார்** என்று வழங்கப்படுகின்றது. இவர் இறைவன் மீது கொண்ட பேரன்பினை உணர்ந்து அவர்தம் அருந்திறம் நுகர்ந்து மதுரகவி யாழ்வார் இவரை வழிபட்டுப் பேரருள் பெற்றார் என்பர்.

இவர் திருவாய்மொழி, திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி என்ற நான்கு திவ்விய பிரபந்தங்களையும் பாடி யருளினார். இவரது படைப்புகளைச் சிறப்புக் கருதி **'தமிழ்மறை'** என்று அழைப்பர். இவர் மற்றெல்லா ஆழ்வார்களிலும் சிறந்தவ ராகப் போற்றிப் புகழப் படுகின்றார். இவரையும், இவரது திரு வாய்மொழியையும் சிறப்பித்து **சடகோபரந்தாதி** பாடப் பட்டுள்ளது. அதை யாத்தவர் கம்பர் என்பர்.

இவர் மாறன், சடகோபன், பராங்குசன், நம்மாழ்வார், ஆழ்வார் என்ற பல பெயர்களால் அழைக்கப் படுகின்றார். மற்ற ஆழ்வார்களை அவயவமாகவும் நம்மாழ்வாரை அவயவியாகவும் கருதுவர் **பிரபந்த ஜன கூடஸ்தர்** என்று நம்மாழ்வாருக்கு ஒரு சிறப்புப் பெயருண்டு. பிரபத்தி மார்க்கத்தை அநுஷ்டிக்கும் வைணவர் எல்லோருக்கும் தலைவர் என்று அதற்குப் பொருளுரைப்பர்.[1]

---

1. திருவாய்மொழி, ஈட்டின் தமிழாக்கம் முதல் பகுதி, பு.ரா. புருஷோத்தம நாயுடு, முன்னுரை, ப. 9

இவரது காலம் கி.பி. 7 முதல் 9 முடிய உள்ள நூற்றாண்டுகளுக்கு இடைப்பட்ட காலமாகும். இவ்வாழ்வாரை ஏனைய ஆழ்வார்கள் போற்றிப் புகழ்கின்றனர். வைணவ இலக்கியங்களில் பெரும்பான்மையும் கடவுள்வாழ்த்துப் பாடுவதில்லை. அங்கு அதற்குப் பதிலாக நம்மாழ்வார் துதியை அமைக்கின்றனர். இது இவரது சிறப்பினை எடுத்துக்காட்டுகின்றது. **திருநகரி** என்ற ஊர் இவர் பிறந்ததால் **ஆழ்வார் திருநகரி** என்று பெயர் பெறலாயிற்று.

திருக்குருகூரில் நம்மாழ்வார் மரபில் தோன்றி, கல்வியிலும், கவிபாடுவதிலும் சிறந்து விளங்கிய புலவர் சிலர் நம்மாழ்வார் சிறப்புகளைக் கொண்டு மாறன் அலங்காரம், மாறன் பாப்பாவினம், மாறன் திருப்பதிக்கோவை, மாறன் அகப்பொருள் முதலிய பல நூல்களுக்கு **மாறன்** என்ற பெயரமைத்துள்ளனர்.

## காப்பு

சடகோபரூஞ்சலில், கடவுள் வாழ்த்துப் பாடும் ஊஞ்சல் மரபினைப்போன்று காப்புச் செய்யுள் காணப்படவில்லை. மற்ற வைணவ இலக்கியங்களில் கடவுள் வாழ்த்தில் நம்மாழ்வாரே வாழ்த்தப்படுவதால் அவருக்குப் பாடப்படும் இந்த ஊஞ்சலில் அக்கடவுள் வாழ்த்தை அமைக்காது விட்டனர் போலும் அல்லது ஏடு பெயர்த்தெழுதியவர் கடவுள் வாழ்த்துப்பாடலை எழுதாது விட்டிருக்கவும் வாய்ப்புண்டு.

## நம்மாழ்வார்-குழந்தை

நம்மாழ்வாரை ஒரு பசுங் குழவியாகக் கற்பனை செய்து பாடுகின்றார் ஆசிரியர். அவர் ஒரு தாயின் நிலையில் நின்று,

நீராட்டித் துகிலுடுத்தித் திலகந் தீட்டி
நீள்விழிக்கஞ் சனமெழுதி நிலக்காப் பிட்டு
தாராட்டும் சூழிகைபொற் கெண்டை சாத்தித்
தண்டையொடு கிண்கிணிபொற் சதங்கை பூட்டி
ராட்டிக் கனகரத்னத் தொட்டி லாட்டி
உடையநங்கை மார்பிலணைத் துச்சி மோந்து
சீராட்டும் பசுங்குளவி

(பாடல், 5)

என்று ஒன்று விடாமல், நிரல்பட தொகுத்துக் காட்டியிருப்பது அவரது கூர்த்த புலமையும், பரந்த அறிவையும் புலப்படுத்து கின்றது.

## நம்மாழ்வார் சிறப்புகள்

நம்மாழ்வார் கரத்திலே திருஞான முத்திரை பெற்றவர்; தாமரைமலர்க் கனிவாயர்; புலவர்களை ஆதரிப்பவர்; மெஞ்ஞான வடிவழகர்; பிள்ளை பெறாது வரம்பெற்று அவ்வரத்தின் பயனால் உடைய நங்கைபெற்றவர்; ஆசுகவி, மதுரகவி, சித்திரகவி, வித்தாரகவி என்ற நால்வகைக் கவிகளுள் இவர் சித்திர கவியாகக் குறிக்கப்படுகின்றார்.

மால் தன்னைப் பாலில் விஷம் வைத்துக் கொல்ல வந்த பூதனை என்ற அரக்கியின் பாலைக்குடித்தே அவளது உயிரைப் போக்கினார். அப்போது கூட பசிபோகாமல், ஆச்சியர் காச்சிய தெள்ளமுது போன்ற பாலுக்காக அங்காந்திருந்தவர் ஆதிமால். அவரை 'நீ (நம்மாழ்வார்) **மூலச்சுருதி முதல் இவன்** என்று துணிந்து பாடினாய்; நாச்சியாரின் நலம்பாராட்ட நாவீறு படைத்தவன் நீ' என்கிறார் நம்மாழ்வாரை ஆசிரியர்.

சொல்லும் கருத்து ஒப்பாதாரைக் கூட சொல்லும் முறையில் ஒப்பவைத்து விடும் இயல்பு சொல்லுந்திறனுக்கும் சொல்லாட்சிக் கும் உண்டு. இப்பாழுலகில் பகுத்தறிவில்லாத மூடர்கள் யாவருக் கும் பரம்பொருள் எது என்பதைச் சரியான புாவகையினைத் தேர்ந்து உரைத்தவர். அமுதம் ஊறும்படி நான்மறையின் உட்பொருளை நன்குணர்ந்து—ஆராய்ந்து மாவும் பலாவும் கலந்தது போல் அழகுடன் எடுத்துரைத்தவர் சடகோபர் என்பது ஆசிரியரின் கூற்று.

திருவைகுந்தைக்கும் வரகுணமங்கைக்கும் திருமாலுக்கும் ஒரு கவிதை அமைத்துப் பாடினாய்! அப்படிப் புகழ்படைத்த நம்மாழ்வாரே ஆடீர் ஊஞ்சல் என்கிறார் ஆசிரியர்.

திருவழுதி குலத்திலே தோன்றியவன் செண்பகவன் சடகோபன். அச்சிறப்பு நயந்தோன்ற பின்வருமாறு உரைக்கப் படுகின்றது

போர்மாது வாகுடனே வாகு **மேவ**
புதியதமிழ் மாதுமணி நாவில் **மேவப்**
பார்மாது புயமீது சிறந்து **மேவப்**
படியளந்தா னோடுதிரு மார்பில் **மேவக்**
கார்மேவு கொடைமாது கரத்தில் **மேவ**
கலைமதிபோல் முகத்திலுங் கஸ்தூரி **மேவ**

(பாடல், 16)

அடிதோறும்—மடக்கடிதோறும் தொடர்ந்து **மேவ** என்றமைத்து மேலும் மேலும் பாடலுக்குச் சுவை கூட்டுகின்றார் ஆசிரியர்.

ஆழ்வார்களுள் சிறந்தவராகத் திகழ்ந்த நம்மாழ்வாரை மற்ற ஆழ்வார்களான, பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், குலசேகராழ்வார். வில்லி புத்தூராள் (ஆண்டாள்), பெரியாழ்வார், திருப்பாணாழ்வார், தொண்டரடிப்பொடி ஆழ்வார் (பூமேவுவாள்), திருமங்கை யாழ்வார், மதுரகவியாழ்வார் ஆகியோர் போற்றும் நம்மாழ்வார் என்று சுட்டப்படுகின்றார்.

விடையானைப் பூசித்தோ னெறோ ராது
விசயனுக்கு மனுநீதி முறைபோ' திக்க
சடையானைக் கோகுலமேய்த் துவந்த நாளில்
சாரல்மழை தாங்காது தடுக்குங் குன்றக்
குடையானைச் செழுங்குல்லைத் தொடையே சூடுங்
கோமானை மாற்றலர்க்குக் கூற்றா மாழிப்
படையானைப் பாடிலமேற் படையா னென்னப்
பாடவல்ல பெருமானே யாடீ ரூஞ்சல்

(பாடல், 21)

என்று அவனது சிறப்பினை நயம்பட உரைகின்றார் ஆசிரியர்.

## நம்மாழ்வாராடும் ஊஞ்சல்

இந்திரநீலமணியால் இரண்டு கால்கள்; வைடூரியத்தால் விட்டம்; முறுக்கேறிடும் பொற் சங்கிலிகளால் வடம்; பவளம் சேர்க்கப்பட்ட பலகை; பொன்மலராலான விதானம்: இப்படி பலவரிய பொருள்களைக் கொண்டு அவ்வூஞ்சல் அமைக்கப்

பட்டதாகக் கற்பனை செய்து அதிலே சடகோபரை ஆட அழைக்கின்றார் ஆசிரியர்.

அவர் அமர்ந்திருக்கும் பலகை சந்தனப் பலகை. அவ்வூஞ்சலுக்காக அமைக்கப்பட்ட கால்களில் முத்துக்கள் பதிக்கப்பட்டுள்ளன. அழகுமிகுந்த பச்சைமணியாம் மரகதத்தால் விட்டம் அமைந்துள்ளது. அவரைத் தாங்கும் ஊஞ்சல் கயிறாகப் பொன்னால் அமைக்கப்பட்ட கயிறு பயன்படுத்தப் பட்டுள்ளது.

பொதிகை, சந்தனப் பொதிகை எனப்பெறும். அம்மலை தென்பாண்டி நாட்டைச் சார்ந்தது. அந்நாட்டைச் சார்ந்த குருகூரில் ஊஞ்சற்பலகை சந்தனமரத்தாலானது எனக்கூறப் பெற்றுள்ளது.

**ஊஞ்சலாட்ட வண்ணனை**

நம்மாழ்வார் ஊஞ்சலாடுகின்ற முறை என்ன? அப்போது என்னவெல்லாம் எப்படி ஆட - சிறக்க அவர் ஆடுகின்ருர் என்பதைச் சில பாடலகள் காட்டுகின்றன.

(முள்ளு) முருக்கையின் இதழ்போன்று செக்கச்சிவந்த அவரது வாயிலே புன்சிரிப்பாடுகின்றது. மதிபோன்ற முகத்தில் குறுவியர்வை ஆடுகின்றது. பூக்கள் கொத்தாக அமைந்து மணம் பரப்பும் மகிழம்பூ மாலை அவரது மார்பிலே ஆடுகின்றது. காதிலே குழையும், நெற்றியில் சுட்டியும் ஆடுகின்றன். அவரது தடப்புயங்களிலே பொன்ஞலான தொடிகள் ஆடுகின்றன. அத்துடன் நித்தில மாலேயும் வயிரநிறையும் ஆடுகின்றன. ஆடு என்னும் சொல் நிரம்பவந்து செய்யுட்குச் சுவை கூட்டி, ஆடும், ஊஞ்சலின் பண்பை விளக்குகின்றது.

செஞ்சிலம்பு, சதங்கை, தண்டை, பட்டாடை, முத்துமாலை மகிழமாலே, பாமாலே, குறுவேர்வை, சுட்டி போன்றவை ஆடுவதாக அடுத்த பாடல் விரித்துரைக்கின்றது.

சுற்றுமணி சதங்கைசிலம் பலம்பி யாடச்
சுடர்மணிக் குண்டலங்கள் குழையி லாட
நெற்றினமணிக் குண்டலங்கள் குழையி லாட
விலகுதிரு ஞானமுத்திரைக் கரங்க ளாட

என்று வண்ணனை செய்கிறார். அங்கு கற்றறிந்தோரும் வைணவர்களும் இவரது பெயர் சொல்லி புகழ்கொண்டாட இவர் ஆடுகின்றாராம்.

அரம்பையர்கள் பதம்பெயர்த்து நடனமாடுகின்றனர். அயிராணியும் ஊர்வசியும் தாம்பூலம் தருகின்றனர். நரம்பிலே யாழ்வாசித்து இவர்புகழ் பாடுகிருர் நாரதர். சரசுவதி அருகிருந்து இவர் புகழ் பாராட்டுகின்றாள். இராமநுஜர் இவரிட்ட ஏவல் கேட்கின்ருர். வைணவர்கள் இவருக்குப் பல்லாண்டு கூறுகின்றனர். அந்நிலையில் நம்மாழ்வார்பிரான் ஊஞ்சலாடுகின்ருர் என்கிறார் ஆசிரியர்.

## இயற்கை

இயற்கையின் இயல்புகளைப் பாடிப்பரவாத கவிஞர்கள் மிகக்குறைவு. இங்கே கவிஞர் இயற்கையுடன் பின்னிப் பிணைந்த நிலையினைக் காண்கின்ருேம். வாசனை பொருந்திய மலர்கள் உள்ள தடங்களிலெல்லாம் அம்மலர் உண்பான் வேண்டியும், நீரருந்துவான் விரும்பியும் எருமைகள் தடம்நோக்கிச் செல்கின்றன.

அந்தப் பொய்கையில் இருந்த வாளையானது மேலெழுந்து வேகமாகத்தாவி, மரத்தில் இருக்கின்ற மாங்கனிமீது மோதுவதால் அதிலிருந்து நறவு வழிகின்றது. அது அப்பொய்கையின் கரைகடந்தும் பாய்ந்து செல்கின்றதாம்.

உழவர்கள் உழுதபின்னர், பயிர்வைப்பிற்கு முன்னர் உழுத மண்ணை சமப்படுத்துவர். அதைக் கிராமவழக்கின்படி **பரம்படித்தல்** என்பது மரபு. இங்கு வயலை வளை உழுகின்றதாம். அப்படி உழுத சாலைப் (உழுதபள்ளம்; உழுதசால்; உழு புடைச்சால் என்பது கிராம வழக்கு) பரம்படிக்கும் பணியை அன்னம் மேற்கொள்கிறதாம். என்னே புலவரின் கற்பனை!

குருகூரின் கழனிகளில் எங்கும் தேனிறைந்து வழிகின்றது; அதுவும் ஒரே வகை தேனல்ல; பலவகையான தேன்; பலாவில் ஒருவகையான வருக்கைப் பலாவிலிருந்து வழிந்த தேன்; பூத்துக் குலுங்கும் கமுகின் தாரை உடைத்து அதிலிருந்து ஒழுகுந்தேன்; தாமரையின் மலரிலிருந்து வரும் புதியதேன்; இவையெல்லாம் இணைந்து பெருக்கெடுத்து ஆறாகிப் பண்ணையின் கழனிதோறும் பாய்ந்து வளங்கொழிக்கின்றதாம்.

அவ்வகையில் நமக்கு இலக்கிய இன்பம் தந்த பாடல் இதோ!

மாங்கனியின் டொழுகியதண் பசிய தேனும்
வருக்கைபலா முட்புறத்த கனியின் தேனும்
பூங்கமுகின் தாருடைந்து பொழிந்த தேனும்
புண்டரிக முட்குழைந்த புதிய தேனும்
பாங்குதொறும் பரந்துபெருக் காற தாகி
பண்ணையின்கண் பாய்ந்துசெந்நெல் கழனி தோறும்
தேங்கிவளர் குருகைநகர் வளத்தைப் பாடச்
சென்பகவண் சடகோப ராடி ரூஞ்சல்

இதே நிலையை,

கண்டடர்ந்த பனிமொழிபூம் பாவை கோவைக்
கனியிதழ்பூ மான்கோமான் கதலித் தேன்மான்
பண்டடர்ந்த மடுச்சுரந்து பாலா றோடிப்
பசுங்கரும்பு மஞ்சளிஞ்சிப் பலவு தேமா

என்று காட்டுகின்றார். கோளூர் வைத்தமாநிதிப் பெருமாள் ஊஞ்சல் ஆசிரியர்.

நீரூற்றி—நீர்பாய்ச்சிப் பயிர் வளர்க்கும் நிலையை நாம் கண்டிருக்கிறோம். ஆனால் குருகூரில் தேன்பாய்ச்சியே பயிர் வளர்க்கின்றனர். கொம்பிலிருந்து வழிகின்ற தேனும், மாங்கனியிலிருந்து ஒழுகிய குளிர்ந்த தேனும், குமுதமொட்டு விரிந்த தேனும், செழித்து வளர்ந்த கனிகளில் பிறந்த தேனும், மரத்திலேயே பழுத்த மாங்கனியிலிருந்து ஒழுகிய தேனும், நட்ட நாற்றுகளுக்கிடையே கலந்து சென்று பாய்ந்து அவற்றை வளமும் செழிப்பும் உடையதாக்கி விரைவிலே வேண்டிய பலனை அளிக்கச் செய்தனவாம்.

மற்றொரு பாடலில் தென்குருகூரின் வளம் பாடவந்து அதைக் கற்பனையில் படைக்கின்றார் ஆசிரியர். பழனத்தில் கரும்புகள் பூத்துக் குலுங்கிக் கொண்டிருக்கின்றன. அதனுள்ளே ஓடிய எருமை உண்ணும்போது சில கரும்புகள் அதன் காலடியில் பட்டு நசுங்கின. அக்கரும்புகள் உடைந்ததால் அதிலிருந்து புறப்

பட்ட கருப்பஞ்சாறு மற்ற பழனந்தோறும் பாய்ந்து-பசிய கமுகில் பாய்ந்து—மலர்ப்பூத்துக் குலுங்குகின்ற ஏரிதோறும் பாய்ந்து நிறைந்து நிற்கும் வளமை படைத்தது குருகூர் என்று காட்டுகின்றார் அவர். இவ்விலக்கியத்தின் இறுதிப் பாடல்,

வாழிதிருக் குருகைநெடி தூழி வாழி
மறைபுகலு நவதிருப்பேர் வடிவ மான
ஆழிவளைத் தண்டுவில்வா ளாதி நாதர்
அலங்கரித்த கதிர்மணிபொன் னூஞ்சல்மீது
வீழிவாய்து வரிதழ்ப்பொன் முத்த மூரல்
விற்புருவ நங்கைமகா தவத்திற் தோன்றுஞ்
சூழிமுக்காட் தடவிகட வேதஞ் சொற்ற
கவிமதமா மழகளிற்றைத் தொழுவம் யாமே

என்று ஊஞ்சலிலக்கிய மரபுப்படி வாழ்த்தாக முடிகின்றது.

## நூல்

1\. இந்திரநீ லத்திரண்டு கால்கள் நாட்டி
இலங்கும்வை டூரியத்தால் விட்டம் பூட்டி
சுந்தரமுத் தெறிபொற்சங் கிலிகள் நாட்டி
சுடரெரிக்குஞ் செழும்பவளப் பலகைச் சேர்த்துக்
கந்தமல ரயன்பொன்மலர் விதானம் நாட்டி
கயல்விழியார் மயல்புரிபொன் னூஞ்சல் மீது
செந்தமிழ்வண் சடகோப ராடீ ரூஞ்சல்
சீபராங் குசமுனிவ ராடீ ரூஞ்சல் 45

2\. முத்திரைச்செங் கரதலத்தா னாடீ ரூஞ்சல்
முளரிமலர்க் கனிவாயா னாடீ ரூஞ்சல்
வித்துவசென பரிபால னாடீ ரூஞ்சல்
மெஞ்ஞான வடிவழக னாடீ ரூஞ்சல்
ஒத்திருந்த கருத்துடையா னாடீ ரூஞ்சல்
உடையநங்கை வரபால னாடீ ரூஞ்சல்
சித்(தி)ரகவி தமிழ்ப்புலவ னாடீ ரூஞ்சல்
சீபராங் குசமுனிவ ராடீ ரூஞ்சல் 46

---

1\. இந்திரநீலம்—இந்திர நீலமணி
கந்தம்—மணம்
அயன்—நான்முகன்
மயல்புரி—மயக்கம் செய்யத் தூண்டுகின்ற
சடகோபன்—நம்மாழ்வார்; ஐயம் என்ற பொருளைக் கோபித்ததால் சடகோபர் எனப்பட்டார் நம்மாழ்வார்
பராங்குசமுனிவன்—நம்மாழ்வார்; பரமதத்தினராகிய யானைகளை அடக்கும் அங்குசம் போன்றவன்

2\. முளரி—தாமரை
வித்துவசெனபரிபாலன்—புலவர் பெருமக்களை ஆதரிப்பவன்
வரபாலன்—(நம்மாழ்வாரின் தாய்) உடயநங்கைக்குத் தவத்தினால் பிறந்த குழந்தை

3. முருக்கிதழ்செங் கனிவாய்மென் மூர லாட
முகமதியிற் குறுவேர்வை முத்த மாட
மருக்கமழ்பூந் துணர்வகுள மாலை யாட
மணிமகரக் குழைரத்(தி)ன வளையு மாட
நெருக்குமிரு தடம்புயம்பொற் றொடிக ளாட
நித்திலமா லையும்வயிர நிறையு மாடத்
திருக்குருகா புரிக்கரசே ஆடீர் ஊசல்
சீபராங் குசமுனியே யாடீ ரூஞ்சல் 47

4. பேச்சியா ருயிர்ப்பாலும் பிதிர்விட் டோடிப்
பெருகுமுலைப் பாலுமுண்டு பசிபோ காமல்
வாச்சியார் காய்ச்சியதெள் ளமுதின் பாலுக்
கங்காந்த செங்கனிவா யாதி மாலை
சூட்சியால் உணர்வரிய தொல்லை மூலச்
சுருதிமுத லிவனென்னத் துணிந்து பாடி
நாச்சியார் திருக்கோலம் நலம்பா ராட்டும்
நாவீறு கொண்டபிரா னாடீ ரூஞ்சல் 48

---

3. முருக்கிதழ்—காட்டு (முள்ளு) முருங்கையின் மலர் போன்ற இதழ்
மூரல்—புன்சிரிப்பு
மருக்கமழ்—மணம் கமழ்கின்ற
பூந்துணர்—பூங்கொத்து
வகுளமாலை—மகிழம்பூ மாலை
நித்திலம்—முத்து
தொடி—வளை

4. பேச்சி—போதனை என்னும் அரக்கி
சுருதி—வேதம்
நாவீறு—நாவலிமை, (நாவீற்றுப் புலவனாய்ச் சங்கமேறி
அப்பர், தேவாரம்)
ஆச்சிரியர்—இடைச்சியர்
நாச்சியார்—ஆழ்வார் திருநகரியின் இன்றவி

5. நீராட்டித் துகிலுடுத்தித் திலகந் தீட்டி
நீள்விழிக்கஞ் சனமெழுதி நிலைக்காப் பிட்டு
தாராட்டுஞ் சூழிகைப்பொற் கொண்டை சாத்தித்
தண்டையொடு கிண்கிணிப்பொற் சதங்கை பூட்டி
ஓராட்டிக் கனகரத்(தி)னத் தொட்டி லாட்டி
உடையநங்கை மார்பிலணைத் துச்சிமோந்து
சீராட்டும் பசுங்குழவி யாடீ ரூஞ்சல்
சீபராங் குசமுனிவ னாடீ ரூஞ்சல் 49

6. செஞ்சிலம்பு சதங்கையொடு தண்டை யாட
திருவரைபொன் பட்டாடை மருங்கி லாட
வஞ்சமலர் மணிமார்பில் முத்த மாலை
மகிழ்மாலை பாமாலை மருவி யாடக்
கஞ்சமலர் முகத்தில்குறு வேர்வை யாடக்
கஸ்தூரி ரேகையின்மேற் சுட்டி யாட
அஞ்சிறைவெள் ளன்னவா கனத்து லாவு
மாழ்வார்கள் தம்பிரா னாடீ ரூஞ்சல் 50

7. சுற்றுமணிச் சதங்கைசிலம் பலம்பி யாடச்
சுடர்மணிக் கிண்கிணிகள் அரையி லாட
ரெற்றினமணிக் குண்டலங்கள் குழையி லாட
இலகுதிரு ஞானமுத்திரைக் கரங்க ளாட
கற்றவரும் வைணவரும் புகழ்கொண் டாடக்
கமலமுகக் கஸ்தூரி நாம மாட
மற்றடம்பூம் புயத்ததுமகிழ் மாலை யாட
மலர்க்குநா வீறுடையா னாடீ ரூஞ்சல். 51

---

5. அஞ்சனம்—மை
தாராட்டு—தாலாட்டு என்பதின் மாற்று வடிவம்
சூழிகை, தண்டை, கிண்கிணி, சதங்கை—அணிகலன்கள்
உடயநங்கை—நம்மாழ்வாரின் தாய்

6. திருவரை—திரு—அரை; அழகிய இடை
மருங்கு—இடை
மருவி—சூழ்ந்து
மகிழ்மாலை—மகிழமலர்மாலை
கஞ்சமலர்—தாமரை மலர்
அஞ்சிறை—அழகிய இறகு
வெள்ளன்னம்—வெள்ளையன்னம் நான்முகன் வாகனம்

7. கஸ்தூரிநாமம்—மணம் கலந்த திருமண்

8. குளவிமதித் திருநுதலிற் குறுவேர் வாடக்
குழலாட மணிமகரக் குழைக ளாட
மழலைமொழிக் கனிவாய் மென்நா வாட
வகுளமணிப் புயத்துமுத்து வடங்க ளாட
அழகொழுகுந் திருவரைப்பட் டாடை யாட
வடியிணையிற் சிலம்பொடு பொற் சதங்கை யாட
பழமறையைச் செழுந்தமிழ்நூற் பாட லாக
பாடவல்ல பெருமாளே யாடீ ரூஞ்சல். 52

9. செங்கமலை சேர்திருவை குந்தை நாதன்
சிறந்தவர குணமங்கை மாயன் வாவி
தீங்குதிருப் புளிங்குடிமா தவன்றன மங்கை
தழைக்கவளர் தேவபிரான் கமலக் கண்ணன்
கொங்குமலர்ச் சேர்குழந்தை மாயக் கூத்தன்
கோளூரன் றிருப்பேரை வாசு தேவன்
இங்கிவர்க ளாங்குருகூர் பொலிந்து நின்றார்.
இசைத்தமிழ்பா டியமாற ராடீ ரூஞ்சல். 53

---

8. குளவிமதி—பிறைச்சந்திரன்
மகரக்குழை—மீன் போன்ற காதணி
பழமறையைச் செழுந்தமிழால் பாடலாகப்
பாடவல்ல பெருமாள்—வேதம் தமிழ்ச் சொன்ன மாறன்.

9, செங்கமலை —இலக்குமி
வாவி—பொய்கை
கொங்குமலர்—மணங்கமழ் மலர்
திருவைகுந்தை, வரகுணமங்கை, திருப்புளிங்குடி, தண்மங்கை, கமலக்கண்ணன். குளந்தை, கோளூர் திருப்பேரை, குருகூர் என்பன தென்பாண்டி நாட்டு வைணவ நவ திருப்பதிகள்.

10. பாவருக்கந் திருந்தினிதாய் யமுத மூர
பாருலகிற் பகுத்தறிவில் லாத மூடர்
யாவருக்கும் பரம்பொருளீ தென்று தோன்ற
நான்மறையி னுட்பொருளை நன்கா ராய்ந்து
மாவருக்கை திகழ்திருவை குந்த நாதன்
வரகுணமங் கைப்பதிமால் புவன வேந்தன்
மூவருக்கு மொருகவிதை யமைத்துப் பாடு
முத்திரைக்கை நம்மாழ்வா ராடீ ரூஞ்சல். 54

11. வாசமலரத் தடந்தோறு மேதி வீழ
வாலறைந்து வெடிதாவிப் பகட்டு வாளை
மூசிமாங் கனிபீற நறவு பாய்ந்து
முதுவரம்பின் துறைகடந்து நிரம்பி நிற்ப
வீசுகதிர் வால்வளைக ளுழுத சாலில்
வீறுடன்வந் **தனம்பரம் படிப்ப** மன்னர்
ஆசருபூஞ் செந்நெல்வித்துப் பழனஞ் சூழ்ந்த
அருட்குருகை நம்மாழ்வ ராடீ ரூஞ்சல் 55

12. சந்தனத்தால் வாய்த்தமணிப் பலகை சேர்த்துத்
தண்டரளக் கொத்தமைந்த கால்கள் நாட்டிச்
சுந்தரஞ்சேர் பச்சைமணி விட்டம் பூட்டித்
தொண்டர்கள் பொனடிமணிக் கயறு தாகிச்
செந்துவர வாய்மலரக் குழைக்கா தாடச்
சேவடிநூ புரத்தொடுசெஞ் சதங்கை யாட
நந்துலவு பொருணைசூழ் குருகை மேவு
நாவீறு கொண்டபிரா னாடீ ரூஞ்சல் 56

---

10. பாவருக்கம்—பாவகை
மாவருக்கை—மாவும் (வருக்கைப்) பலாவும்
புவனவேந்தன்—உலகத்திற்கு அரசன்; ஆழ்வார் திருநகரி இறைவன்
11. மேதி—எருமை
வாலறைந்து—வாலையடித்து
பீற—பிளக்க
நறவு—தேன்
சால்—உழுபடை (உழுததடம் படைச்சால் என்று கிராமத்தில் அழைக்கப் பெறும்)
பழனம்—வயல்
12. தண்டரளம்—குளிர்ந்த முத்து
பொருணை—தாமிர பருணி

13. காரியா ரும்முடைய நங்கை யாருங்
கருத்துய்ந்து மகவாசை இனிது வேட்ட
மாரிசூழ் மதிட்குருகை நம்பி பாத
மகிழ்ந்துதொழக் கலியுகவா தியிலே நாளுஞ்
சீரிதா கியமகவாய் வருவோ மென்றே
திருக்குருகை மாநகரஞ் சேரி வாழ
வாரியர்கள் பரவவவ தரித்த மூர்த்தி
யன்னவா கனமூர்த்தி யாடீ ரூஞ்சல். 57

14. மாங்கனிவின் டொழுகியதண் பசிய தேனும்
வருக்கைபலா முட்புறத்த கனியின் தேனும்
பூங்கமுகின் தாருடைந்து பொழிந்த தேனும்
புண்டரிக முட்குழைந்த புதிய தேனும்
பாங்குதொறும் பரந்துபெருக் காற தாகிப்
பண்ணையின்கண் பாய்ந்து கழனி தோறுந்
தேங்கிவளர் குருகைநகர் வளத்தைப் பாடச்
செண்பகவண் சடகோப ராடீ ரூஞ்சல். 58

15. தருமேவு பொதியவெற்பும் பொருணை யாறுந்
தமிழ்வழுதி வளநாடும் குருகை யூரும்
பொருகரியும் வயப்பரியு முரசு மூன்றும்
புகழுமன்னக் கொடியுமகிழ் பூதத் தாரு
மருமருவு தண்டுழா யாதி நாதன்
மலர்ப்பதத்தி லாணையையு முடையோ னீதித்
திருஞான முத்திரைக்கை மாறன் வீரன்
செண்பகவண் சடகோப ராடீ ரூஞ்சல் 59

---

13. காரியார்—நம்மாழ்வாரின் தந்தை, ஆழ்வார் திருநகரி குறுநில மன்னன்.
வேட்ட—விரும்பிய
மாரி—மேகம்
குருகை நம்பி—ஆதிநாதர்
14. பூங்கமுகின்தார்—கமுகின் பாளையினது பூ
புண்டரிகம்—தாமரை
கழனி—வயல்
15. தரு—மரம்
பொதியவெற்பு—பொதியமலை

16. போர்மாது வாகுடனே வாகு மேவ
புதியதமிழ் மாதுமணி நாவில் மேவப்
பார்மாது புயமீது சிறந்து மேவப்
படியளந்தா னோடுதிரு மார்பில் மேவக்
கார்மேவு கொடைமாது கரத்தில் மேவக்
கலைமதிபோல் முகத்திலுங்கஸ் தூரி மேவச்
சீர்மேவு திருவழுதி குலத்தில் தோன்றுஞ்
செண்பகவண் சடகோப னாடீ ரூஞ்சல். 60

17. அரம்பையர்கள் பதம்பெயர்த்து நடன் மாட
அயிராணி உருவசிவெள் ளடைப்பை யேந்த
நரம்பிசைத்து நாரதர்யாழ் வாசித் தேத்த
நாவாணி அருகிருந்து கீர்த்தி பாட
நிரம்புக ழெதிராச னேவல் கேட்ப
நீதிபயில் வயிணவர்பல் லாண்டு கூற
வரந்தருமுத் திரைகரத்தா னாடீ ரூஞ்சல்
வகுளபூ ஷணவரத னாடீ ரூஞ்சல். 61

---

வழுதிவளநாடு—ஆழ்வார் திருநகரியைச் சார்ந்த ஊர்களடங்கியது.

மருமருவும்—மணம் தழுவும்
தண்டுழாய்—குளிர்ந்த துளசி

16. போர்மாது—வெற்றித்திருமகள்
வாகுடன்—அழகுடன்
வாகு—தோள்
பார்மாது—நிலமகள்
கொடைமாது—தானலக்குமி
வழுதிகுலம்—பாண்டிய குலம்.

17. அயிராணி—இந்திராணி
வெள்ளடைப்பை—தாம்பூலம்
நாவாணி—சரசுவதி
எதிராசன்—இராமானுஜர்
வகுளபூஷணன்—மகிழமாலை அணிந்தவன்

8. கோற்றேனுங் குமுதமுகை விரிந்த தேனும்
கொழும்பயிர்க் கனிதகர்ந்து கொழிக்குந் தேனும்
ஊற்றூரி மாங்கனியின் வழிந்த தேனும்
உரமேற்றி யுழவருழும் வயலிற் பாய்ந்து
நாற்றூடு பெருகிநட்ட நாற்றெல் லாம்பின்
நன்றாக விளைந்துகதிர் குலைகள் வீச
ஆற்றூடு வளைமுழங்குங் குருகை வாழும்
ஆழ்வார்கள் நம்பிரா னாடீ ரூஞ்சல். 62

19. அன்புதிக ழும்பொய்கை யாழ்வார் பூதத்
தாழ்வார்பே யாழ்வார்சீர் மழிசையாழ்வார்
பொன்புகழ்சேர் குலசேக ராழ்வார் வில்லி
புத்தூரள் பெரியாழ்வார் திருப்பா ணாழ்வார்
மின்புகழ்சேர் தொண்டரடிப் பொடியாழ் வார்பூ
மேவுவாள் மிக்கதிரு மங்கை யாழ்வார்
தென்புகழூர் மதுரகவி யாழ்வார் போற்றுந்
திருக்குருகை நம்மாழ்வா ராடீ ரூஞ்சல் 63

20. பூங்கரும்பின் வேலிமுறித் தடித்துள் ளோடிப்
புகுத்துழக்கு மேதிகவை யடியிற் சாய்ந்த
தீங்கரும்பின் சாறுடைத்துப் பழனந் தோறும்
செழும்புனல்போற் படர்ந்துசெங் கமுகிற் பாய்ந்து
பாங்கரும்பு மலர்த்தடங்கா வேரி தோறும
பாய்ந்துநிறை யுங்குருகூர் வளமை பாடக்
கோங்கரும்பின் மணிமுலையாள் நங்கை யீன்ற
குஞ்சரநஞ் சடகோப னாடீ ரூஞ்சல். 64

---

18. கோற்றேன்—கொம்புத்தேன்
குமுதமுகை—ஆம்பல்மொட்டு
வளை—சங்கு
19. மேதிகவை—எருமையின் (பிளந்த) குளம்பு
கமுகு—பாக்கு
நங்கையீன்ற குஞ்சரம்—உடைய நங்கை பெற்றெடுத்த நம்மாழ்வார்
21, விடையான்—சிவபெருமான்
சடையான—சலிக்காதவன்
பூசித்தோன்—வணங்கியவன்

21. விடையானைப் பூசித்தோ னென்றோ ராது
விசையனுக்கு மனுநீதி முறைபோ திக்க
சடையானைக் கோகுலமேய்த் துவந்த நாளில்
சாரல்மழைத் தாங்காது தடுக்குங் குன்றக்
குடையானைச் செழுங்குல்லைத் தொடையே சூடுங்
கோமானை மாற்றலர்க்குக் கூற்றா மாழிப்
படையானைப் பாடிலமேற் படையா னென்னப்
பாடவல்ல பெருமானே யாடீ ரூஞ்சல். 65

22. சித்தவதா ரத்தொடுசேர் வார்க்குக் கிட்டா
தென்றே சித்துவிட்டு யோக மேற்செய்
வித்தவதா ரத்தர்......எட்டாம் யோக
வித்தார மெய்ப்பொருளே விளங்கு ஞானக்
கொத்தவதா ரத்தனுகா வொளியே தொண்டர்
கொடுங்கலிதீர்த் தருள்குருகூர் கொண்டல் வண்ணன்
பத்தவதா ரத்தின்வரன் முறையைத் தேர்ந்து
பாடவல்ல பெருமாளே யாடீ ரூஞ்சல் 66

---

விசையன்—அர்ச்சுனன்
குன்றக்குடையான்—கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்தவன்
மாற்றவர்—பகைவர்
கூற்று—எமன்
மனுநீதி—கீதை

22. சித்தவதாரம்—சிற்றவதாரம், சிறுகடவுள்
யோகமேற் செய்வித்த—யோகநிலையில் இருந்த
எட்டாம் யோகம்—சமாதி (யோக) நிலை
கொடுங்கலி—துன்பம்
பத்தவதாரத்தின் வரன்முறை—திருமாலின் பத்தவதாரங்களின் வரிசை
பாடவல்ல பெருமாள்—சடகோபர்.

23. வாழிதிருக் குருகைநெடி தூழி வாழி
மறைபுகலு நவதிருப்பேர் வடிவ மான
ஆழிவாளைத் தண்டுவிள்வா ளாதி நாதர்
அலங்கரித்த கதிர்மணிபொன் னூஞ்சல் மீது
வீழிவாய் துவரிதழ்ப்பொன் முத்த மூரல்
விற்புருவ நங்கைமகா தவத்திற் றோன்றுஞ்
சூழிமுக்காட் தடவிகட வேதஞ் சொற்ற
கவிமதா மழகளிற்றைத் தொழுவம் யாமே 67

---

23. நவபேர்—ஒன்பது பெரியவடிவம்
வீழ்வாய்—வீழிமலர்வாய்
துவரிதழ்—செவ்விதழ்

# 4. மதுரகவியாழ்வார் ஊஞ்சல்

## ஆழ்வார்கள்

வைணவ அடியார்களாகிய ஆழ்வார்கள் பன்னிருவர். அந்தப் பன்னிருவரும் படைத்தளித்த நூல்கள் இருபத்துநான்கு. அவர்களால் பாடப்பட்ட பாடல்கள் ஏறத்தாழ நாலாயிரத்திற்கு மேற்பட்டன. அவை நான்கு பகுதிகளாக நாலாயிரத் திவ்விய பிரபந்தத்தில் இடம் பெற்றுள்ளன. கி.பி. ஆறாம் நூற்றாண்டில் தொடங்கி ஒன்பதாம் நூற்றாண்டுக்கு முற்பட்ட இந்த முன்னூறு ஆண்டு காலத்திலே இத்திருமாலடியார்கள் அற்புதத் திருப்பா சுரங்களைப் பாடித் தமிழையும் இறையுணர்வையும் ஒருங்கே வளர்த்தார்கள்.

அவ்வகை அடியார்களில் பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் ஆகிய மூவரையும் முதலாழ்வார்கள் என்பர். அவர்களைத் தொடர்ந்து திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், மதுரகவியாழ்வார், மூலசேகராழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், தொண்டரப்பொடியாழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கையாழ்வார் என்போரும் இணைய ஆழ்வார்கள் பன்னிருவராகின்றனர். அவர்களுள் ஒருவராகத் திகழ்கிறார் மதுர கவியாழ்வார். திருமாலின் அடியார் நம்மாழ்வார்; அந்த நம்மாழ்வாரின் அடியார் மதுரகவியாழ்வார்.

## மதுரகவியாழ்வார்

இவர் திருக்குருகூருக்கு அருகிலுள்ள திருக்கோளூரில் அந்தணர் குலத்தில் பிறந்தார். நம்மாழ்வாருக்குச் சில ஆண்டு களுக்கு முன்னர் சித்திரை மாதத்தில் சித்திரை நட்சத்திரத்தில் தோன்றினார். இளமையிலேயே வேதசாஸ்திரங்களைப் பயின்று செவிக் கனிய செஞ்சொற் கவிகளைப் பாட வல்லவராதலின் **மதுரகவிகள்** எனப் பெயர் பெற்றவர்.

அழகிய ஊர்களைக் காணும் விருப்புடையவராய் புறப்பட்டுச் சென்றார். வடநாட்டுத் திருப்பதிகளுக்குச் சென்று இறுதியில் திருவயோத்தியில் தங்கியிருந்தார். ஒரு நாளிரவில் வெளியே வந்தபோது தெற்கே ஒரு பேரொலியைக் கண்டு ஆச்சரியமடைந்

தாராம். மறுநாளிரவிலும் அவ்வொளி அவ்வாறே தோன்றிற்று. தெற்கில் தோன்றிய இந்த அதசிய ஒளியைக் காணவேண்டும் என்று ஒளிதோன்றிய இடமாகிய திருக்குருகூருக்குச் சென்றார். அங்குத் திருப்புளியின் கீழ் தோன்றியிருக்கும் ஒளியாகிய நம்மாழ்வாரைக் கண்டார்.

இவர் அதன் நிலையை அறிய விரும்பி **செத்ததன் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத்தின்று எங்கே கிடக்கும்?** என்று வினவினார். பிறந்தது முதல் அதுவரை வாய்பேசாது சடமாக இருந்த மாறன் **அத்தைத் தின்று அங்கே கிடைக்கும்** என்று அதற்கு விடையிறுத்தாராம். அது முதல் அவரையே மதுரகவி ஆசிரியராகக் கொண்டார் என்பர். நம்மாழ்வாரும் இவரைத் தனது அடியவராக ஏற்றுக் கொண்டு மூன்றுவகைத் தத்துவங்களின் இயல்பையும் மற்றும் அறிய வேண்டிய யோக இரகசிய உண்மைகளையும் கற்பித்தார். இவரும் குருகூர் நம்பிப் பாவின் இன்னிசையைப் பாடிக் கொண்டு தேவுமற்றறியாது சிலகாலம் வாழ்ந்திருந்து அந்தமில்லாத இன்பத்தினைப் பெற்றார்.

இவர் நம்மாழ்வாரைப் போற்றி **கண்ணிநுண் சிறுத்தாம்பு** என்ற பதிகம் பாடினார். இது ஒன்று மட்டுமே (10 பாடல்கள்) இவர் பாடிய பதிகமாகும். அந்த ஆழ்வார்மீது — இறைவனின் அடியார்க்கு அடியார்மீது பாடப்பட்டுள்ளது இவ்வூஞ்சல்.

**காப்பு**

வேதங்கள் சொல்கின்ற அனைத்துப் பொருள்களையும் நன்கு உணர்ந்து—பகுத்து—ஆராய்ந்து, அதன் முழுமைப் பொருளையும் உலகிலுள்ளோர் எளிதில் அறிந்து பற்றிக் கொள்ளும் முறையில் எடுத்தோதினார் நம்மாழ்வார். காத்தல், படைத்தல், அழித்தல் மூன்றையும் முறையே செய்கின்ற திருமால், நான்முகன், சங்கரன் ஆகிய மூவருள்ளும் திருமாலைப் பரம்பொருளாகத் துணிந்து திருவாய் மொழியைப் பாடினன். அவனையே தனக்குள்ள சுற்றங்கள் அனைத்துமாய்—அவன் மட்டுமே சுற்றமாய் மனதிலே எண்ணி அவருக்குக் காப்புச் செய்யுள் பாடுகின்றார் ஆசிரியர். மதுரகவியாழ்வாருக்கு முன்னவர் நம்மாழ்வார் என்பதும், நம்மாழ்வார் காப்புப் பாடுவதை வைணவ இலக்கியங்கள் தமது மரபாகக் கொண்டுள்ளன என்பதும் இதற்குக் காரணமாகலாம்.

## சிறப்பு

அத்துடன் நின்றுவிடாமல் அதையே திரும்பவும் இதன் மூன்றும் பாடல் வழியும் விளக்குகின்றார் ஆசிரியர்.

பகர்வரிதாம் வேதங்கள் பகுத்தா ராய்ந்து
 பாருலகி லுள்ளோர்க ளினிதாய்ப் போற்ற
அகல்பிரணவ வடிவாம்முத் தேவும் வேண்டா
 அருள்ஞான முத்திரைச்செங் கமலத் தையே
திகழும்செண் பகமாறன் தெய்வ மென்ற
 ஸ்ரீபராங்கு சமுனியை

உலகம் முழுதும் கொண்டாடும் நிலையையும் காட்டுகின்றார்.

## திருமாலின் சிறப்பு

அழகிய உலகத்தையும், அதில் வாழும் பல உயிர்களையும், அயனையும், கொன்றை அணிந்த சிவபெருமானையும், ஆறுமுக னையும், மற்றுள்ள தேவர்களையும் படைத்தளித்துக் காத்தவன் திருமால். அப்படிப்பட்ட மூலத்து ஒரு பொருளை, பரம்பொருள் என்று ஓதும் அடியார்கள் பலர். மதம்சுழல வாழ்வோரும் இவ ரைப்பரனென்று துணிந்து பின்னர் உணர்ந்தனர். அப்படிப்பட் டவன் புகழ்பாடிய, மணம் பொருந்திய சோலைகள் சூழ்ந்திருக் கின்ற கோளூரில் வாழ்கின்றார் மதுரகவியார் என்கிறார். இவ் வாறு பலபாடல்களில் அவர் சிறப்பும், அடியார் சிறப்பும் இணைத்து எடுத்தோதப்படுகின்றன.

## ஊஞ்சலமைப்பு

நவமணிகளில் சிறப்புடையதாகக் கருதப்படும் வயிரத்திலான மணிகளால் பலகை அமைத்தனர். அழகுமிகு கால்களை ஊஞ் சலுக்கு அமைத்தனர். ஒளிவீசும் சிறந்த மாணிக்கத்தால் விட்டம் பூட்டியுள்ளனர். கனகமணி சேர்ந்த பொன் சங்கிலிகளால் விட்டத்தில் பலகைகளை மாட்டியுள்ளனர்.

இப்படி ஒளிவிடுமாறு—அமைக்கப்பட்ட இந்த ஊஞ்சலில் திறம்புகழும் நாதமுனிவன் இவரின் புகழ்பாட, சிறந்த மறையோர் கள் எல்லாம் வடந்தொட்டாட்ட, அறம்புகழும் சடகோபன் பதத்தைப் போற்றும் அற்புத மதுரகவியாழ்வாரை ஊஞ்சலாடு மாறு அழைக்கின்றார்.

புகழ்பரந்து விளங்குகின்ற முத்துச் சேர்ந்த பந்தலின் கீழே பவளத்தைக் கடைந்து கால்கள் நாட்டி, ஒளிரும் மாணிக்கத்தால் விட்டம் அமைத்து, கோமேதகத்தால் பலகை அமைத்து, பச்சைமணியினால் அமைக்கப்பட்டு—அலங்கரிப்பட்டு இருக்கின்றது ஊஞ்சல். அவ்வூஞ்சலிலே இவ்வாழ்வார் ஆடுகின்ருர்.

பவளக்கால்களில் மாணிக்கத்திலான பலகையைச் சேர்த்து, பொன்னாலான தகட்டுடன் மரகதத்தையும் இணைத்து விதானம் எனப்படும் மேற்கூரையை அமைத்துள்ளனர். அப்படி புகழ்பெற அலங்கரிக்கப்பட்ட ஊஞ்சலில் கற்றவர்கள் போற்றிப் புகழ்ந்து கொண்டாடும் கலைவடிவாம் மதுரகவியார் ஆடுகின்ருர். அவர் ஆடும்போது மரகதமணி சுட்டி நுதலிலே ஆடுகின்றது. மேலும் முத்துமணி வடங்கள் ஆழ்வாரின் கழுத்திலே ஆடுகின்றன. வயிரப்பதக்கங்கள் அவரது மார்பிலே ஆடுகின்றன.

ஆழ்வாரின் புகழ்பாடி அவரை ஆட அழைக்கின்றது மற்ருெரு பாடல். அவர் சித்திரை மாதத்தில் உதித்தவர்; சடகோபரைப் பணிந்துப் போற்றுபவர்.

பத்திரிச தயத்துறைவோ னாடி ரூஞ்சல்
    பதினொருபாட் டினிது ரைத்தோ னாடி ரூஞ்சல்
உத்தமமுக் குணங்கடந்தோ னாடி ரூஞ்சல்
    உபநிடதம் பகுந்துணர்ந்தோ னாடி ரூஞ்சல்
வைத்தமாநி தியைஅனு தினமும் போற்று
    மதுரகவி யாழ்வாரே யாடீ ரூஞ்சல் (பாடல் 8)

பலர் பணிசெய்ய அவர் ஊஞ்சலாடும் நிலையை மற்றொரு பாடல் தெளிவாக—நயம்பட எடுத்துரைக்கின்றது. எண் திசையில் எந்தத் திசையில் உள்ளோ ரானாலும் இவரை வாழ்த்துகின்றனர். சிறப்புமிக்க நல்ல இளம் மடவார் இருபுறமும் கவரி வீசுகின்றனர்.

இவர் மீது கொண்ட பக்தியால் கவிவாணர்கள் இவரைப் போற்றிக் கவிதை புனைகின்றனர். இசை வல்லுநர்கள் வீணைமீட்டிப் பண்ணிசைக்கின்றனர். அழகுநிறை வேல்நிகர்த்த விழியுடைய அரம்பை திலோத்தமை வடந்தொட்டு ஆழ்வாரை ஊஞ்சலாட்டுகின்ருள்.

இந்த ஊஞ்சலில் பின்னிரண்டு பாடல்கள் (9, 10) காணப் படவில்லை. வாழ்த்தாக அமையும் பாடல் ஒன்று சுவடியில் காணப்பட்டது. அது இதனுடன் தொடர்புடையதல்ல என்பதால் நீக்கப்பட்டது. அதில் கூறப்படுகின்ற செய்திகள் பொதுநிலையில் அமைவதாகவும், வேறு சில அடியார்களின் பெயர்களைச் சுட்டுவதாகவும் அமைந்திருக்கின்றது. மேலும் அப்பாடலின் மொழிநடை இதன் மற்ற பாடல்களில் காணப் படுவதினின்றும் மாறுபடுகின்றது. எனவே இது பின்னர் வந்தோரால் இடையில் செருகப்பட்டதாகலாம்.

## நூல்

1. சுருதிமறை பொருளனைத்தும் பகுத்தா ராய்ந்து
சுருக்கமுற வுலகிலுள்ளோர் எளிதாய்ப் பற்ற
பரமபத நாயகன்மூ வர்க்கு மூலப்
பரம்பொருளா மெனத்திருவாய் மொழியைப் பாடுந்
திருமகிழ்மா றனைச்சகல பெந்து மாகத்
தியானித்துத் தேவுமற்று மறியே னென்று
பொருளமைத்துத் தேவுமற்று மறியே னென்று
புகழ்மதுர கவியாழ்வா ராடீ ரூஞ்சல் 68

2. சிறப்புடைய வயிரமணி பலகை சேர்த்துத்
திகழுநற் பவளத்தால் கால்கள் நாட்டிக்
கரத்திடுநன் மாணிக்க விட்டம் பூட்டி
கனகமணி சேர்பொற்சங் கிலிகள் நாட்டிக்
கரங்கலிலர்ச் செழுமலர்வி தான நாட்டி
கதிரொளிசே ரலங்கரித்த வூஞ்சல் மீது
திறம்புகழு நாதமுனி வரனார் பாட
சிறந்தமறை யோரிருவர் வடந்தொட் டாட்ட
அறம்புகழும் சடகோபன் பதத்தைப் போற்றும்
அற்புதமா மதுரகவி யாடீ ரூஞ்சல்* 69

---

1. சுருதி—வேதம்
மூவர்—காத்தல், படைத்தல், அழித்தல் இவற்றை செய்கின்ற திருமால் நான்முகன், சிவன்.
பெந்து—பந்து இனம்
தியானித்து—நினைந்து
தேவுமற்று—பிறதெய்வம்
2. கரந்திடு—மறைந்திடு
விதானம்—மேல்முகடு
சடகோபன்—நம்மாழ்வார்

*இந்த இறுதியடி மிகுதியாகக் காணப்படுகின்றது

3. பகர்வரிதாம் வேதங்கள் பகுத்தா ராய்ந்து
பாருலகி லுள்ளோர்க ளினிதாய்ப் போற்ற
அகல்பிரணவ† வடிவாம்முத் தேவும் வேண்டா
அருள்ஞான முத்திரைச்செங் கமலத் தையே
திகழும்செண் பகமாறன் தெய்வ மென்ற
ஸ்ரீபராங்கு சமுனியை மருவிப் பற்றி
செகமுழுதுங் கொண்டாடப் போற்றி செய்யும்
சீர்மதுர கவியாழ்வா யாடீ ரூஞ்சல் 70

4. பரந்தமணி நித்திலஞ்சேர் பந்தல் கீழே
பகர்வைரப் பவளக்கால் கடைந்து நாட்டிக்
கரந்திடுமா ணிக்கமதால் விட்டம் பூட்டி
கதிரொளிகோ மேதகத்தாற் பலகை சேர்த்துப்
புரிந்திடுநற் பச்சைமணி யூஞ்சல் மீது
புகழ்மற்றோர் தெய்வத்தைப் போந்து பாரா
அருள்மறைசேர் குருகைநக ராழ்வார் போற்றும்
அன்பன்ம துரகவியாழ்வா ராடீ ரூஞ்சல் 71

5. ** ரற்றினம ணிச்சுட்டி நுதலி லாட
யிலகுமுத்து மணிவடங்கள் கழுத்தி லாடப்
பற்றுவயிரப் பதக்கநடு மார்பி லாடப்
பவளக்கால் மாணிக்கப் பலகைச் சேர்த்துப்
பொற்றகடு மரகத விதான நாட்டி
புகழ்பெறவே அலங்கரித்த ஊஞ்சல் மீது
கற்றவர்கள் கொண்டாடக் கோளூர் வாழுங்
கலைஞான* மதுரகவி யாடீ ரூஞ்சல் 72

---

3. அகல்பிரணவ வடிவு—அகன்ற ஓங்கார வடிவம்
செம்பகராமன்—நம்மாழ்வார்
செகம்—உலகம்
‡ அகல்ப்ரணவ என்பது சுவடி பாடம்

4. நித்திலம்—முத்து
புரிந்திடு—செய்திடு

5. கலைஞான—ஞானக்கலை
** ரத்தினம் என்பது எதுகை நோக்கி ரற்றினம் என கூறப்பட்டது.
* கலைக்கியான என்பது சுவடி பாடம்

6. எத்திசையி லுள்ளோரு மிறைஞ்சி வாழ்த்த
ஏமருநல் லிளமடவார் கவரி வீச
பக்தியுடன் கவிவாணர் கவிதை பாடப்
பாகவத ரின்னிசைநல் வீணை பாடச்
சத்திநிகர் விழிதிலோத்(த)மை ரம்பை யர்கள்
தாள்வலிந்து நடுசிறந்த வடந்தொட் டாட்ட
வைத்தமாறி தியைஅனுதி னமும் போற்றும்
மதுரகவி யாழ்வாரே யாடீ ரூஞ்சல் 73

7. அம்புவியைப் பல்லுயிரை அயனைக் கொன்றை
அணிவோனை அறுமுகனை மற்று முள்ள
உம்பர்களைப் படைத்தளித்துக் கரக்கு மூலத்
தொருபொருள் பரம்பொருளென் றுரைத்தென் னாது
நம்புமடி யார்கள்மதஞ் சுருளச் செய்யும்
நாவீர னேபரனா னென்று போற்றி
வம்படருஞ் சோலைசூழ் கோளூர் வாழும்
மதுரகவி யாழ்வாரே யாடீ ரூஞ்சல் 74

8. சித்திரைமா தத்துதித்தா னாடீ ரூஞ்சல்
திருமகிழ்மா றனைப்பணிவோ ராடீ ரூஞ்சல்
பத்திரிச தயத்துறைவோ னாடீ ரூஞ்சல்
பதினோருபாட் டினிதுரைத்தோ னாடீ ரூஞ்சல்
உத்தமமுக் குணங்கடந்தோ னாடீ ரூஞ்சல்
உபநிடதம் பகுத்துணர்ந்தோ னாடீ ரூஞ்சல்
வைத்தமாறி தியைஅனு தினமும் போற்றும்
மதுரகவி யாழ்வாரே யாடீ ரூஞ்சல் 75

---

6. இறைஞ்சி—வணங்கி
ஏமரு—சிறப்பான
சத்திநிகர்—வேல்நிகர்த்த
7. அம்புவி—அழகிய உலகம்
அயன்—நான்முகன்
கொன்றையணிவோன்—சிவபெருமான்
உம்பர்—தேவர்கள்
வம்பு—மணம்
8 மாறன்—நம்மாழ்வார்
உத்தம முக்குணம்—சிறந்த மூன்று குணம்

## 5. கோயில் வெள்ளாற்று அம்மன் ஊஞ்சல்

கோயில் வெள்ளாறு, என்ற சைவத்தலத்தின் இறைவன் மல்லேசர். அவர் தேவி பார்வதி; அப்பார்வதியைப் போற்றும் ஊஞ்சலாக இது அமைகின்றது.

வெள்ளாற்றுச் சுவாமியம்மனின் ஊஞ்சலைப் பல்வேறு முறைகளில் கற்பனையில் படைத்துக்காட்டுகின்றார் நூலாசிரியர். ஒருபுறம் மேருமலையும், மற்ெருரு புறம் இமயமலையும் கால்களாக அமைகின்றன. இவ்வுலக அண்டகோளமே உத்திர மாகவும், அரிதின்முயன்று உணரக்கூடிய நான்கு வேதங்களும் கயிறுகளாகவும், ஓம், ரீம் என்னும் மூலமந்திரங்கள் ஊஞ்சல் தொட்டிலாகவும் அமைத்து ஊஞ்சல் உருவாக்கப்படுகிறது.

இப்பாடலின் கருத்தை ஒட்டியே, கோளூர் வைத்த மாநிதிப் பெருமாள் ஊஞ்சலின் பாடலும் இயங்குகின்றது.

பாருமக மேருவிரு கால்க ளாகப்
　　பனிமேகப் படலநடு விட்ட மாகக்
காருலவு மழைமாரி வடம தாகக்
　　கண்ணகன்ற பாருலகம் பலகை யாக
சீருலவு நறுமலர்வி தான நாட்டிச்
　　சிறப்பாக அலங்கரித்த ஊஞ்சல் மீது
வாருலவுங் கனதனப்பெண் ணாண்டி லாள்சேர்
　　வைத்திமா நிதிப்பெருமா ளாடீ ரூஞ்சல்
(வைத்திமாநிதிப்பெருமாள் ஊஞ்சல் பா, 3)

அந்த ஊஞ்சலில் இத்தலத்தின் தேவி பர்வதாம்பிகையியை வைத்து, ஒருபுறம் தனக்கு நிகர் வேறுஎவரும் இல்லாத திருமாலும், மறுபுறம் நான்முகனும் ஆட்டி விடுகின்றனர். அருகிலேயே இசையில் வல்ல கந்திருவர் இன்னிசை கீதம் பாடுகின்றனர். வீரசைவ இறைவன் (சிவன்) மாலைசூட்ட அதற்கு மகிழ்ந்து பர்வதாம்பிகை (பார்வதி) ஊஞ்சலாடுகின்ருள்.

இடை நாடி, பிங்கலைநாடி ஆகிய இருநாடிகளைக் கொண்டு அசையாதவாறு உறுதியாக இரண்டு கால்களை நாட்டினர். சுழுமுனை (சுசுமுனு) என்னும் நாடியை உத்திரமாக அமைத்தனர். கதியடைவிக்கும் வழிமுறையையே கயிருகப் பூட்டிக்கொண்டனர். சொல்வதற்கே அரிதான மிகச்சிறந்த அழகிய பலகைமீதில் அவள் அமர்ந்திருக்கிறாள். கடவுளாம் மல்லேசர் மகிழ நாளும் மகிழ்ந்து, ஆடல் செய்யும் காலத்தில் மகிழ்ந்திருக்கும் பார்வதி தேவியே ஆடீர் ஊஞ்சல் என்று அப்பாடல் முடிகிறது.

இவரது கற்பனை உருவாக்கம் மேலும் தொடர்ந்து பார்வதி தேவியை எப்போதும் இனிதமர்ந்து ஊஞ்சலாட அழைக்கின்றது.

வேதாந்த சித்தாந்தம் கால்க ளாக
விளங்கிரண்டின் சமரசமுத் திரம தாகத்
தீதகன்ற நிசபத்தி கயிற தாகச்
சிலகற்ற மெஞ்ஞான பலகை மீதில்

ஆதி, மத்திமம், அந்தம் இவை இல்லாத அந்த சிவன் வேண்டியருள, பார்வதியே ஊஞ்சலாடுக என்கிறார் புலவர்.

ஊஞ்சலுக்கு இரண்டு பக்கமும் தீபங்கள் வேண்டுமல்லவா? ஒருபுறம் பரிதி தீபமாகவும் மற்றொரு புறம் மதி தீபமாகவும் அமைகின்றன. தோள், துளை, கஞ்சம், நரம்பு, மிடறு ஆகிய ஐவகை இசைகருவிகளின் முழக்கம் அதிருகின்றன. சித்திர சாரணர்களும், தவமுனிவர்களும், அமரர்களும் இவ்வம்மைக்குத் துதிபாடுகின்றனர். இந்நிலையில்தான் பார்வதி ஊஞ்சலாடுவதாக் கவிஞரால் காட்டப்படுகின்றார்.

ஊஞ்சல் பற்றிய மற்றொரு படைப்பைக் கவிஞர் பின்வருமாறு அமைக்கின்றார். துவிதம் ஒருபக்கத்தின் காலாக அமைகிறது. அத்துவிதம் மற்றொருபுறக் காலாக நிறுத்தப் படுகிறது. துவிதாத்துவிதம் (விசிஷ்டாதுவைதம்) என்ற உத்திரம் துவிதத்தையும், அத்துவிதத்தையும் இணைக்கின்றது. நான் நீ என்ற பேதமிலாத பலகை ஊஞ்சற் பலகையாகிறது. அந்த ஊஞ்சலில் ஆடும் தேவியைத் தன்னைக் காக்குமாறு வேண்டுகோள் விடுகின்றார் பக்தர்; கவிஞர்.

இந்நாயகியுடன் மல்லேசர் எப்படியெல்லாம் ஆடுகின்றார்? அப்போது எவையெல்லாம், எவரெல்லாம் ஆடும் திறம் பெற்றனர் என்பதைப் பின்வரும் பாடல்வழி விளக்குகின்றார்.

சீராரும் செஞ்சடையிற் கங்கை யாட
திகழரவ மம்புலியு மாட வாட
ஏராருங் காதிலணி குழைக ளாட
வென்புகொம் பாமையோ டிவைக ளாட
தாராரும் கடுங்கைமுன்னூ லாட வாட
சரஞ்சரமா மக்கமணிக் கொத்து மாட
வாராருந் தனவுமையா டானு மாட
மல்லேசர் திருவடிக ளாடி ரூசல்

'ஆட' என்ற சொல் பயன்பாட்டின் வழி நூலாசிரியர் எல்லா செயல்களையும் கூற முயன்றுள்ளார்.

நான் இந்த மனிதப் பிறவியினை எடுத்து—இந்த உலகத்தில் வாழ்ந்து—சிறந்து உன்னைப் போற்றுமாறு என்னைப் படைத்தாய். அடியார்களின் துன்பமறிந்து, இடமறிந்து, காலமறிந்து செயல்திறத்தால் அவர்களுக்கு அருள்செய்கின்றாய்! தலைவியே தென்சயிலத் தாயே உன்னைப் பலநாளுங் கண்டு தொழுவதற்கு எனக்கு அருள்புரிவாய் என்று வேண்டுகின்றார் புலவர்.

மரபுப்படி நூலின் இறுதிப்பாடல் வாழ்த்துப் பாடலாக அமைகின்றது மல்லிகாற்சுன தேவர், அவன் தேவி பார்வதி, விநாயகன், முருகன், நந்திகேசுரர், தண்டிநகர், தென்சயிலம் எல்லாம் வாழி வாழி என்று வாழ்த்துகின்றார்.

திருமல்லி காற்சுனமா தேவர் தாமும்
தேவிபார்வதி யம்மன் வாழி வாழி
கரிமுகமெஞ் ஞானவினா யகரும் வாசக்
கடம்பமல ரணிவேலர் வாழி வாழி
வரியநந்தி கேசுரமா தேவர் நாளும்
மனம்பொங்குந் தண்டிநகர் வாழி வாழி
சிரமதாம்உண் மைநிலை உருவோர் மற்றும்
தென்செயில மேன்மேலும் வாழி வாழி

என்பது அப்பாடல். இந்த ஊஞ்சல் இலக்கியத்தின் முடிவில் அத்தலத்து இறைவனாம் சிவபெருமானைப் புகழ்ந்து பாடி அவனையும் ஊஞ்சலாடுமாறு அழைப்பதாக ஒரு பாடல் உள்ளது. இதற்கும் இந்த ஊஞ்சல் இலக்கியத்திற்கும் தொடர்பிருப்ப தாகத் தெரியவில்லை.

அந்தப் பாடல் ஆசிரியரால் பாடப்பட்டதாக இருக்கலாம்; அல்லது பிற்காலத்தில் பாடம் கற்றுத் தந்தவரால் சேர்க்கப் பட்டிருக்கலாம்; அல்லது படியெடுப்பாரால் சேர்க்கப் பட்டு மிருக்கலாம். இப்படி வாழ்த்துக்குப் பின்னர் ஒரு பாடலை அமைக்கின்ற முறையினை இந்த ஊஞ்சல் இலக்கியங்களில் காணமுடியவில்லை. எனவே அந்தப் பாடலையும் பதிப்பில் தந்து மிகைப்பாடலாகக் குறிக்கப்பட்டிருக்கின்றது.

# நூல்

1. பொன்சயில வெள்ளிமலை கால்க ளாகப்
பொருவிலண்ட கூடமதுத் திரம தாக
உன்னியுரை மறைநான்குங் கயற தாக
ஓங்கார ரீங்காரந் தொட்டி லாகத்
தன்னிகர்மால் சதுமுகனும் வடந்தொட் டாட்ட
சமீபமதிற் தும்புரருங் கீதம் பாட
மன்னவனாம் மல்லேசர் மாலை சூட்ட
மகிழ்பர்வ தாம்பிகையே யாடி ரூசல் 76

2. இடைபிங்க லையசையாக் கால்க ணாட்டி
யியம்புசுழு முனையெனுமுத் திரம தோட்டி
திடனவத்து வாரவென்ற கயிறு பூட்டி
செப்பரிய மீதான பலகை மீதிற்
கடவுளாம் மல்லேசர் மகிழ நாளும்
கருணைகூர்ந் தாடல்செய்யுங் காலந் தன்னில்
திடமுடனுங் கவர்தானா பல்ல வாகித்
திகழ்பர்வ தாம்பிகையே யாடி ரூசல் 77

---

1. பொன்சயிலம்—மேருமலை
வெள்ளிமலை—இமயமலை
சதுமுகன்—நான்முகன்
தும்புரர்—இசையில்வல்ல கந்திருவர்
பர்வதாம்பிகை—மலைமகள், பாட்டுடைத் தலைவி
மல்லேசர்—வீரசைவ இறைவன் (சிவன்)

2. இடை, பிங்கலை, சுழுமுனை—இம்மூன்றும் நாடிகள்
(திட)னத்துவா—கதியடைவிக்கும் வழி

3. வேதாந்த சித்தாந்தங் கால்க ளாக
விளங்கிரண்டின் சமரசமுத் திரம தாகத்
தீதகன்ற நிசபத்தி கயற தாகச்
சிலகற்ற மெஞ்ஞானப் பலகை மீதில்
ஆதிமத்தி யந்தமிலாள் வேண்டல் செய்ய
அருள்கூரும் வதனத்தி லபின மான
மாதுமைபார் வதியம்மன் பரிவ தாக
மகிழ்வுடனெப் போதுமிருந் தாடி ரூசல் 78

4. துவிதமத்து விதமென்னும் கால்க ணாட்டி
துவிதாத்து விதமெனுமுத் திரம தோட்டி
நவையிலா நிலைவிருப்பக் கயிறு பூட்டி
நாநீயெனும் போதமிலாப் பலகை மீதிற்
தவமெலா முடிவுறவோ ரறிவிற் காணத்
தனியாடல் செயுந்தலைவர் தானே யாகிப்
பவமகல எனையாட்கொண் டருளே செய்யும்
பார்வதாம் பிகையம்ம னாடி ரூசல் 79

5. சீராருஞ் செஞ்சடையிற் கங்கையாட
திகழரவம் அம்புலியு மாட வாட
ஏராறுங் காதிலணி குழைக ளாட
என்புகொம் பாமையோ டிவைக ளாட
தாராருங் கடுக்கைமுன்னூ லாட வாட
சரஞ்சரமா மக்கமணிக் கொத்து மாட
வாராருந் தனவுமையாள் தானு மாட
மல்லேசர் திருவடிக ளாடி ரூசல் 80

---

3. அபினமான—பின்னம்—அபி(ன்)னம், பின்னமில்லாத
ஆதி, மத்தி, அந்தம்—தலை, இடை, கடை
4 துவிதம்—துவைதம்
அத்துவிதம்—அத்வைதம்
துவிதாத்துவிதம்—விசிஷ்டாட்துவைதம்
நவையிலா—ஐயமற்ற
நாநீ—நானும் நீயும்
பவம்—பிறப்பு
5. அரவம்—பாம்பு
வார்—கச்சு
எலும்பு, கொம்பு, ஆமை—இவை சிவனின் அணிகலன்கள்
தாராடுங்கடுக்கை—கொன்றை மலர்மாலை
முன்னூல்—முப்புரிநூல்

6. பரிதிமதி இருபாலுந் தீப மாகப்
பஞ்சவாத்தி யவோசை பலவா யோங்கத்
தெரிவரிய தவமுனிவ ரமரர் தாமும்
சித்தசா ரணர்முதலோர் துதிகள் செய்ய
விரிவான என்னவமுங்கெ டுத்தே யாளும்
வேந்தனாம் மல்லேசர் மகிழ நாளும்
பிரிவாகப் பிரியாம லாடல் செய்யும்
பர்வதாம்பிகை யம்மன் யாடி ரூசல் 81

7. ஏலையினாட் செய்தவத்தால் லிந்த மேனி
எடுக்கவருள் செய்தனையே யிணையி லாத
நிலைமைபெறு மறிவுடல்சா தனைக்கு நாளுந்
நீடியநே ரத்திசைய வருள்செய் வாயே
தலைமையாம் வாழ்வுதவி என்னை யாளும்
தலைவியே தென்சயிலத் தாயே யுன்னைப்
பலநாளுங் கண்டுதொழக் கருணை செய்யும்
பர்வதாம்பி கையம்ம னாடீ ரூசல் 82

8. சாதனைகா லத்துலகப் போக மோடு
தனுவினுட வாசனையு மில்லா தேக
ஓதுகின்ற சித்தமிலா தேகுங் காலத் (து)
ஓங்குகே வலமணுகா தேகுங் காலம்
தீதிருவா சனையகல வென்னை யாளுந்
தென்மல்லி காற்தேசத் தேவ ராகி
மாதுமைபார் வதியம்மன் பரிவ தாக
மகிழ்வுடனெப் போதுமிருந் தாடீ ரூசல் 83

---

6. பரிதிமதி—சூரிய சந்திரன்
பஞ்சவாத்தியம்—ஐந்து இசைக் கருவிகள்
தோல்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக் கருவி, கண்டக்கருவி—என்பன
7. ஏலை—ஏழை;
தென்சயிலத்தாய்—அழகிய மலைமகள்
8. தனு—உடல்
சித்தம்—அறிவு
மல்லிகாற்தேசத்தேவர்—மல்லேசர்

9. ஆதிகா மிகவாதூ ளந்த மாக
அறையுமூ வொன்பதொரு வாக மத்தின்
ஓதுகின்ற வுத்தரவா துளத்தி னாலேழ்
ஆம்படலத் துரைசெய்யு முண்மை ஞானம்
தீதகன்று யான்பெருகக் கருணை சாரும்
தென்மல்லி காற்தேசத் தேவ ராகிக்
காதலுடன் பிரியாம லாடல் செய்யும்
காருணிபார் வதியம்மன் ஆடீ ரூசல் 84

10. திருமல்லி காற்சுனமா தேவர் தாமும்
தேவிபார் வதியம்மன் வாழி வாழி
கரிமுகமெஞ் ஞானவிநா யகரும் வாசக்
கடம்பமல ரணிவேலர் வாழி வாழி
வரியநந்தி கேசுரமா தேவர் நாளும்
மணம்பொங்குந் தண்டிநகர் வாழி வாழி
சிரமதாம்உண் மைநிலை உருவோர் மற்றும்
தென்சயிலம் மேன்மேலும் வாழி வாழி 85

11. *அட்டவீரட் டமதில் வுயர்வ தான
அந்தகா சுரனைச்சங் காரஞ் செய்து
துட்டரைநிக் கிரகஞ்செய் கோவ லூரில்
துரையான வீரட்ட நாதரென்ன
மட்டிலாப் பேரின்பம் என்னே யாண்ட
மாகுரவற் கருள்செய்யும் குருவே யிங்கு
அட்டியிலா தருள்புரிமல் லேசர் வாழும்
அணிந்தருள்பார் விதியுடனே யாடீ ரூசல் 86

---

9. அந்தம்—முடிவு
உண்மை ஞானம்—மெய்யறிவு
தீது—குற்றம்

10. கரி—யானை
* மிகையாக இருந்த பாடல்

## 6. தருமபுரம் தேனமிர்தநாயகி ஊஞ்சல்

### தருமபுரம்

தேவாரப் பாடல்பெற்ற சைவத் தலங்களுள் ஒன்றான சோழ நாட்டில் காரைக்காலுக்கருகில் உள்ள தருமபுரம் என்னும் தலமே இங்கும் பாடல் தலமாய் உள்ளது. இவ்வூரில் திருஞான சம்பந்தர் **யாழ்முரிப்** பதிகம் பாடியுள்ளார். சிறந்த யாழ்வல்லுனராகிய திருநீலகண்ட யாழ்ப்பாணர் (இவர் திருஞான சம்பந்தருடன் சென்று அவர் தமிழிசைப் பதிகங்கள் பாடும்போது உடனிருந்து யாழிசைத்து வந்தவர்) தம்முடைய யாழிசையால்தான் ஞான சம்பந்தர் பாடல்கள் சிறப்புறுகின்றன என்று இவர் கொண்ட அகந்தையை ஒறுக்க ஞானசம்பந்தரால் யாழ்மூரிப் பதிகம் பாடப் பெற்றதாகக் கூறுவர்.

மாதர்ம டப்பிடியும்மட வன்னமு மன்னதோர்
நடை யுடைம்மலை மகடுணையெண மகிழ்வர்
பூதவி னப்படைநின் றிசை பாடவு மாடவு
ரவர் படர்சடைந் நெடு முடியதொர் புனலர்
வேதமொ டேழிசைப்பா டுவ ராழ்கடல் வெண்டிரை
யிரைந் நுரைகரை பொரு துவிப்பிநின் றயலே
தாதவிழ் புன்னைதயங் கும லர்சிறை வண்டறை
யெழில் பொழில் குயில் பயி றரும்பு ரம்பதியே

என்று தொடங்குகின்றது அப்பதிகத்தின் முதல் பாடல்.

தேவாரத்தில் இவ்வூரின் இறைவியின் திருப்பெயர் **மதுரமின்னம்மை** எனவும் இறைவன் திருநாமம் **யாழ்மூரிநாதர்** எனவும் காணப்பெறுகிறது. இவ்வூஞ்சலில் இறைவி **தேனமிர்த நாயகி** இறைவர் **தருமநாதர்** எனக் குறிக்கப்படுகின்றது. இதிலிருந்து தேனமிர்த நாயகி மதுரமின்னம்மையாகி இருக்கலாம் என்று கருதத் தோன்றுகின்றது. திருஞான சம்பந்தர் யாழ்மூரிப் பதிகம் பாடிய பிறகே இவ்விறைவனுக்கு யாழ்மூரி நாதர் என்ற

பெயர் அமைந்திருக்க முடியும். அதற்கு முன்னர் இவ்விறைவன் பெயர் வேறெங்கும் குறிக்கப்பெற வில்லை. இந்த ஊஞ்சலில் 'தருமநாதர்' எனக் குறிப்பிட்டிருப்பது 'யாழ்மூரிநாதர்' என்று வழங்குவதற்கு முன்னர் இருந்த பெயராக இருக்கலாம்.

மதுரம்-தேன்; இனிமை—அமிர்தம் எனவே; மதுர இனிமை என்பது மதுர இன்னம்மை ஆகிப் பின்னர் மதுரமின்னம்மை என்று சிதைந்திருக்கலாமோ என்று எண்ணத் தோன்றுகின்றது. எனவே தேனமிர்தநாயகி என்று குறிப்பது பொருத்தமானதாகத் தோன்றுகின்றது.

சோழநாட்டில் சிறப்பு வாய்ந்த சைவ மடாலயங்களில் தருமபுரம் மடாலயமும் ஒன்று. இந்தத் தருமபுரம் மாயூரத்திற்கு அருகில் உள்ளது. அங்குள்ள இறைவி பெயர் பார்வதி என்பதே. எனவே இந்தத் தருமபுரம் ஊஞ்சலில் குறிக்கப்படும் தருமபுரத்தினின்றும் வேறானதாகும். திருகோவலூருக்கும் தருமபுரம் என்ற ஒரு பெயருண்டு. அத்தலத்து இறைவி **பெரியநாயகி** என்று குறிக்கப் படுவதால் இது அதனினின்று வேறுபட்டதாகத் தோன்றுகின்றது.

## கடவுள் வாழ்த்தும் கவிவாணர் வணக்கமும்

ஊஞ்சல் இலக்கியங்கள் பல கடவுள் வாழ்த்தைக் கொண்டே துவங்குகின்றன. அம்முறைப்படி இதன் ஆசிரியரும், தருமபுரம் தேனமிர்தநாயகி பொன்னூஞ்சல் பாடுவதற்கு, சைவ இலக்கியக் கடவுள் வாழ்த்தின் மரபுப்படி விநாயகனைப் பாடியுள்ளார். அத்துடன் அமையாமல் கவிவாணர்கள் திருவடிகளைத் தொழும் நிலையையும் காண்முடிகின்றது.

பார்புகழும் தருமவிநாய கன்பொற் பாதம்
பணிந்துகவி வாணரடி பரவிப் போற்றி

இப்பாடலின் (பாடல்—1) இறுதி நிலையில், ஊஞ்சலை வியந்து ஊர்புகழ—அமைப்பு கண்டு தேர்புகழும் அந்த ஊஞ்சல்தனில் தருமநாதரின் தேனமிர்தநாயகியை அமர்ந்தாட அழைக்கின்றார் ஆசிரியர்.

## தருமபுரம் தேனமிர்த நாயகி

சிவன் அடியும் முடியும் அறியற்கியலான். அவன் அடியும் முடியும் காணவேண்டி திருமாலும் நான்முகனும் பூமிக்கடியிலும் வானத்திலும் சென்றும் கண்டார்களில்லை. கண்டதாகப் பொய் கூறியதால் நான்முகனும், தாழம்பூவும் சாபம்பெற்றன. அப்படிப் பட்டவன் இவ்விறைவன். ஆனல் இவன் நான் செய்த பிழை பொறுத்து எனது பிறவி ஒழித்து நன்மை செய்தான். நான் முன் வைத்த இந்த அன்பு வாக்கினை விரும்பி ஏற்றான். அப்படிப்பட்ட இறைவனுக்குத் துணைவிதான் இந்த தேனமிர்த நாயகியாவாள் என்கிறார் ஆசிரியர்.

ஊழிக்காலத்தில் அழிக்கும் கடவுளாம் உருத்திரனால் அழியும் உடல் அழியாதவகை எனக்குச் செய்ய உலகில் தரும மென்னும் உருவற்ற நிலை கொண்டு பூஜை செய்து, சிவனை வேண்டி, இம்மை, மறுமை, முத்தி, சித்தி தருமவடிவு அழியாத வகை இறைவன் திருவருள் சேர எங்கும் திகழும் தருமநாதர், தேனமிர்தநாயகியார் பொன்னூஞ்சல் ஆடியருள்க என்றமை கிறது அடுத்த பாடல்.

பாரதப்போரில் தருமபுத்திரர் உரைத்த பொய்யால் ஏற்பட்ட சாபம் சிவபூஜை புரிய நீங்கிற்று என்பது ஒருகதை. அரம்பை என்னும் தேவமடந்தை கல்லாகப் பெற்ற சாபமும் நீங்கி சிறந்த பெண்ணாக வரந்தரும் சிவபெருமான் எப்பொதும் இறந்தும் பிறந்தும் பலபிறவி முறையே அழுந்தும் அடியேனை உய்யும்படி ஆண்டருளிய தருமநாதரின் அந்த இறைவி தேனமிர்த நாயகி உலகம் இன்புறப் பொன்னூஞ்சல் ஆடுக! என்று வேண்டுகிறார் ஆசிரியர்.

### ஊஞ்சல்

புகழ்பெற்றோங்கும் நான்மறையால் கால்களை நாட்டி துள்ளனர். அதற்கு விட்டமாக அறுசாத்திரங்களை அமைத் துள்ளனர். பார்ப்பணரின் சொற்களை கைகளாகக் கொண்டனர். அறுபத்து நான்கு கலைகளால் குறுக்கிலிடும் வரிச்சைச் செய்தனர். கத்தையை—கூரையை முப்பொருளால் அமைத்தனர். ஓம் என் னும் மந்திரம், பஞ்சாங்கம் (திதி, வாரம், யோகம், கரணம் நட்சத்திரம்) இவற்றைக் கயிறாகக் கட்டினார்கள். அப்படிப்

படைக்கப்பட்ட ஊஞ்சலில் தேனமிர்தநாயகி ஊஞ்சலாடியதாகச் சுட்டுகின்றார் ஆசிரியர்.

ஊஞ்சலமைந்த விதத்தினை வேறுவகையில் காட்டுகின்றது மற்றொருபாடல். எட்டுதிக்கு யானைகளையும் (அஷ்டதிக் கஜங்கள்) கால்களாகக் கொண்டனர். மிகஉயர்ந்த பொதிகை மரத்தை விட்டமாக்கினர். ஆதிசேடனைக் (வடம்)கயிறாகக் கொண்டனர். அதற்குப் பூமியாகிய தேவியையே பலகையெனக் கொண்டனர். புகழ்மேவுகின்ற கயிலைமலையை அரியணையாக்கினர். இதற்கு ஒளிதரும் விளக்குகள் வேண்டுமல்லவா? அதற்குச் சந்திரன், சூரியன் இரண்டையும் இலங்கும் தீபமாக்கினர். இத்திருவளர் பொன்னூஞ்சலில் தருமநாதரின் தேனமிர்தநாயகி ஊஞ்சலாடுகின்றார்.

அடுத்துநவமணிகளாலேயே ஊஞ்சல் அமைக்கின்றார் கவிஞர். செழுமைமிக்க பவளத்தைக் கடைந்து கால்களாக நட்டனர். பச்சை எனப்படும் மரகதத்தாலும், சங்காலும் அதற்கான விட்டம் போட்டனர். அங்குப் பயன்படும் கைகள் வைடூரியத்தால் அமைக்கப்பட்டன. அதற்கமையும் வரிச்சை இரத்தினம்கொண்டு அமைத்துள்ளனர். சிறந்த பொன்னாலும், அழகுபொருந்திய முத்தாலும் கத்தையைக் கொண்டு (விதானம்) மேற்கூரை அமைத்தனர். வயிரப்பலகையினை அதில் வைத்து ஆடும் பலகையாக்கினர்.

செம்பவழத் தாற்கடைந்து கால்கள் நாட்டி
சிறந்தபச்சை வளையதனால் விட்டம் போட்டு
இம்பவயி டூரியத்தால் கைகள் சாத்தி
இனிதான ரத்தினத்தால் வரிச்சுச் சேர்த்து
பைம்பொனணி முத்ததனால் கத்தை சாத்தி
பகர்வயிரப் பலகையதால் கயிறு தூக்கி
உம்பர்பு கழுஞ்சல்த னில்தரு மநாதர்
தேனமிர்த நாயகியா ராடீ ரூசல்

என்பது அப்பாடல்.

இதற்கடுத்த பாடல் இதை வேறுவகையில் காட்டிநிற்கின்றது. இந்திர கற்பகத்தருவால் கால்களை நட்டனர். இனிய சண்பகத்தால் வளையென்றழைக்கப்படும் விட்டம் அமைத்தனர். (விட்டத்தை உத்திரம் என்பதும், அதன்மேல் விட்டம் போன்று சிறிய அளவில் அமைக்கப்படுவதை வளை என்பதும் தஞ்சை மாவட்ட வழக்காகும்.) கைகளாகச் சந்தனப் பலகையால் சட்டங்களை

அமைத்தனர். வில்வமரத்திலிருந்து உரிக்கப்பட்ட கயிற்றை வடமாகவும் அமைத்தனர். சரசுவதி இலக்குமி இருவரும் இரண்டு பக்கத்திலும் நின்று, கயிற்றை இழுத்து ஆட்டுகின்றனர் அதிலே இவள் அமர்ந்து ஆடுகின்றாள்.

மலர்களைக் கொண்டே ஊஞ்சலைக் கற்பனையில் படைக்கின்ருர் கவிஞர். மல்லிகை மலர்களைக் கொண்டு கால்கள் அமைத்தனர். மணம் கமழும் முல்லை மலர்களைக் கொண்டு விட்டம் பூட்டினர். மென்மை மிகு செண்பக மலரால் கை படைத்தனர். சிறந்த தாமரை மலர் கொண்டு பலகை உருவாக்கினர். நல்ல பன்னீர் மலரால் கயிறு திரித்து, நாரணன், நான்முகன், தேவர் யாவரும் வணங்கி வாழ்த்த அத்தேனமிர்த நாயகி ஆடுகின்ருள். அதை ஆசிரியர் மிக எளிய சொற்களால் படைத்தளிக்கின்றார்.

மல்லிகையின் மலரதனுல் கால்கள் நாட்டி
மருவுமுல்லை மலரதனால் விட்டம் போட்டு
மெல்லியசெண் பகமலரால் கொடுங்கை சேர்த்து
விளங்குதா மரைமலரால் பலகை யாக்கி.
நல்லபன்னீர் மலரதனால் வடதாக்கி
நாரணன்நான் முகன்தேவர் வணங்கி வாழ்த்த
சொல்லரிய ஊஞ்சல்தனில் தரும நாதர்
தேனமிர்த நாயகியார் ஆடீர் ஊசல் (பாடல்—6)

## வாழ்த்து

ஊஞ்சலிலக்கியத்தின் இறுதியில் அமைகின்ற வாழ்த்துப் பாடல்களில் அத்தலத்து இறைவன் அல்லது பாடல் தலைவன் மட்டும் வாழ்த்தப்படுவதில்லை. அனைவரும் வாழ்த்தப் படுகின்றனர். இங்கமையும் இறுதிப் பாடலின் பின்னிரண்டு அடிகள் ஓலையில் இல்லை.

இதில் ஊர் மக்கள் வாழ்க; பல்லுயிரும் வாழ்க; இந்நூலில் நான் உரைவாணர் அடிபரவியுரைத்த பொருளின் பிழையைப் பொறுத்தவர்களின் பெருமை வாழ்க; இவ்விறைவனைத் தொழுவோர் வாழ்க; என்ற நிலையில் இதன் வாழ்த்துப்பா அமைகின்றது.

உருவளரும் ஊரவர்பல் லுயிரும் வாழி
உரைவான றடிவணங்கி யுணர்த்த விந்தப்
பொருளதனைப் பிழைபொறுப்போர் பெருமை வாழி
பேசுமிவை துதிப்பர்மிக வாழி தாமே

என்பது அப்பாடல்.

□ □

## நூல்

1. சீர்புகழும் தருமபுரம் சிறந்து வாழும்
தேனமிர்த நாயகிபொன் னூஞ்சல் பாடப்
பார்புகழும் தருமவிநா யகன்பொற் பாதம்
பணிந்துகவி வாணரடி பரவிப் போற்றி
ஊர்புகழும் வூரவர்பல் லுயிர்கள் யாவு
மோங்கிவளர்ந் தென்னாளும் உலகம் போற்ற
தேர்புகழும் ஊஞ்சல்தனில் தரும நாதர்
தேனமிர்த நாயகியார் ஆடீர் ரூஞ்சல். 87

2. ஈசரிரு நான்மறையால் கால்கள் நாட்டி
இருமூன்று சாஸ்திரத்தால் விட்டம் பூட்டிப் * *
பூசுரர்சொற் பூர்ணமதால் கைகள் சாத்திப்
புகழறுநாற் கலையதனால் வரிச்சுச் சேர்த்து
ஏசரிய முப்பொருளால் கத்தை சாத்திப்
பிரணவபஞ் சாக்கரத்தால் கயிறு மேரு
தேசுபெறும் ஊஞ்சல்தனில் தரும நாதர்
தேனமிர்த நாயகியார் ஆடீர் ஊஞ்சல். 88

---

1. தருமபுரம்—தலப்பெயர்

தருமவிநாயகர்—தருமபுரத்தில் அமைந்திருப்பதால் விநாயகர் தருமவிநாயகர் எனப்பட்டார், இறைவனும் தருமநாதர் எனப்பட்டார்.

ஊர்புகழும்—உலகம்புகழும்.

2. இரு—பெரிய

நான்மறை—நான்குவேதங்கள்

பூசுரர்—பார்ப்பணர்

அறுநாலு—அறுபத்துநான்கு கலைகள்—(வரிச்சாக)

ஓம் என்னும் மந்திரமும், பஞ்சாங்கமும் (திதி, வாரம், யோகம், கரணம் நட்சத்திரம்) கயிறாகக் கொண்டு ஊஞ்சல் அமைந்துள்ளது.

தேசு—ஒளி

* * போட்டு என்பது வேறு சுவடி பாடம்

3. இருநான்கு திசைக்கரியும் கால்க ளாக
ஏகாந்த பொதிகைமரம் விட்ட மாக
வருமாதி சேடனுடல் வடம தாக
வளர்பூமி தேவியொரு பலகை யாகத்
திருமேவு கயிலைசிம்மா சனமு மாகச்
சந்திரசூ ரியர்இலங்கும் தீப மாகத்
திருவளர்பொன் னூஞ்சல்தனில் தரும நாதர்
தேனமிர்த நாயகியார் ஆடீர் ஊஞ்சல். 89

4. செம்பவழந் தாற்கடைந்து கால்கள் நாட்டி
சிறந்தபச்சை வளையதனால் விட்டம் போட்டு
இம்பவயி டூரியத்தால் கைகள் சாத்தி
இனிதான ரத்தினத்தால் வரிச்சுச் சேர்த்துப்
பைம்பொனணி முத்ததனால் கத்தை சாத்தி
பகர்வயிரப் பலகையத்தால் கயிறு தூக்கி
உம்பர்பு கழுஞ்சல்த னில்தர்மநாதர்
தேனமிர்த நாயகியா ராடி ரூசல் 90

5. இந்திரகற் பகதருவாற் கால்கள் நாட்டி
இனிதான சண்பகத்தால் வளைகள் பூட்டி
சந்தனனற் பலகையதால் கொடுங்கை சேர்த்துச்
சார்ந்தவில்வப் பலகயத்தால் வடமு மாகச்
சுந்தரஞ்சே ருஞ்சலிரு புறமு மாகச்
சொல்மகளும் பூமகளும் வடந்தொட் டாட்ட
செந்திருபொன் னூஞ்சல்தனில் தரும நாதர்
தேனமிர்த நாயகியார் ஆடீர் ஊஞ்சல். 91

---

3. ஆதிசேடன் வடமாகவும், (கயிறு) பூமிதேவி பாலகை யாகவும், கயிலை மலை இருக்கையாகவும், சூரிய சந்திரர்கள் இருபக்க விளக்குகளாகவும் காட்டப் படுகின்றது.

4. பச்சை—மரகதம்
நவரத்தினங்களில், பவளம், மரகதம், மாணிக்கம் வைடூரியம், முத்து, வைரம் ஆகிய ஆறும் குறிக்கப் படுகின்றன.

5. கற்பகத்தரு—பாரிஜாதமரம்
சொல்மகள்—நாமகள்; சரசுவதி
பூமகள்—பூவிலிருக்குந்திரு, இலக்குமி

6. மல்லிகையின் மலரதனால் கால்கள் நாட்டி
மருவுமுல்லை மலரதனால் விட்டம் போட்டு
மெல்லியசெண் பகமலரால் கொடுங்கை சேர்த்து
விளங்குதா மரைமலராற் பலகை யாக்கி
நல்லபன்னீர் மலரதனுல் வடம தாக்கி
நாரணன்நான் முகன்தேவர் வணங்கி வாழ்த்த
சொல்லரிய ஊஞ்சல்தனில் தரும நாதர்
தேனமிர்த நாயகியார் ஆடீர் ஊசல். 92

7. உகமுடிவி லுத்திரனு லழிவ தாகும்
உடல்போக வகையெற்குச் செய்ய வேண்டி
சகமதனில் தருமமெனு மருவ ரூபம்
தான்கொண்டு பூஜைசெய்து சிவனை வேண்டி
இகபரமாம் முத்திசித்தி தரும தேகம்
அழியாவ கைஇறைவ னருள்சேர்த் தெங்கும்
திகழ்தருபொன் னூஞ்சல்தனில் தரும நாதர்
தேனமிர்த நாயகியார் ஆடீர் ஊசல். 93

8. திருமாலும் நான்முகனும் இருவர் தேட
திசைமுகனும் கைதையும்செப் பியபொய் யான
வருவினையை அகற்றவிந்தத் தலத்தில் பூசை
அன்பாகச் செய்தபிழை பொறுத்த வசன
உருவாயென் பிறவியொழித் தலையா வண்ணம்
உதவிஎன்றன் வாக்கதனை உகந்த மூர்த்தி
தருமபுரி ஊஞ்சல்தனில் தரும நாதர்
தேனமிர்த நாயகியார் ஆடீர் ஊஞ்சல் 94

---

6. நாரணன்—திருமால்
நான்முகன்—பிரம்மன்

7. உகமுடிவில்—ஊழிக்காலத்தில்
உருத்திரன்—சிவபெருமான்
இகபரம்—இம்மை, மறுமை; இகமும் பரமும்
திகழ்தரு—விளங்குகின்ற

8. கைதை—தாழம்பூ கண்டகங்கால் முண்டகங்கால்
கைதைகால் நெய்தல்கால் (திருவாசகம் 4, திருமுறை)
உகந்த—விரும்பி ஏற்ற
வாக்கு—பாடல்

9. புகழ்தரும புத்திரர் சொல் பொய்யின் சாபம்
போனதிந்த சிவபூஜை புரிந்த தாலே
திகழரம்பை கல்லான சாபந் தீர்த்துச்
சிறந்தபெண்ணுய் வரந்தருநற் சிவனென் னாளும்
திகழவரும் பிறவியினி லுதித்து மாளும்
நிரையமுழந்து மடியேனை யுய்ய வாண்ட
செகமகிழ்பொன் னூஞ்சல்தனில் தரும னாதன்
தேனமிர்த நாயகிய ராடீ ருஞ்சய்

10. உருவளரும் ஊரவர்பல் லுயிரும் வாழி
உரைவாண றடிவணங்கி யுணர்த்த விந்தப்
பொருளதனைப் பிழைபொறுப்போர் பெருமை வாழி
பேசுமிவை துதிப்பர்மிக வாழி தாமே *

---

9. செகம்—உலகம்

10. உரைவாணர்—ஆதரவு சொல்லளிப்போர்

* மற்ற இரண்டடிகள் சுவடியில் காணப்படவில்லை

# 7. திருக்கோவலூர் பெரியநாயகியம்மன் ஊஞ்சல்

## திருக்கோவலூர்

திருக்கோவலூர் என்பது தமிழ் நாட்டின் நடுநாட்டு நகர்களுள் ஒன்று. தென்னாற்காடு மாவட்டத்தில் தென்பெண்ணை யாற்றின் தென்கரையில் இவ்வூர் அமைந்துள்ளது. இத்திருக் கோவலூர் மலையமான் நாட்டைச் சார்ந்தது. மலையமான் திருமுடிக்காரி என்ற கடையெழு வள்ளல்களுள் ஒருவனாகிய மன்னனின் நாடு எனவே இந்நாடு மலையமான் நாடு என்று அழைக்கப்பட்டது. அது பின்னர் மலாடு என்று மருவிற்று இம் மன்னன் சிறந்த வள்ளலாக மட்டுமன்றி பேராற்றல் மிக்க வீரனாகத் திகழ்ந்துள்ளான். முடியுடை மன்னர் மூவர்க்கும் பிறர்க்கும் இவன் போரில் உதவி புரிந்துள்ளான். இவனது உதவியைப் பெற்றவர்களே போரில் வெற்றிகாண முடிந்தது. எனவேதான் இவன் உதவியை எல்லா அரசர்களும் நாடினர். இவனைப்பற்றி சிறுபாணாற்றுப்படை, புறம், நற்றிணை, அகம் குறுந்தொகை போன்ற சங்க இலக்கியங்கள் சுட்டிச்செல்கின்றன. இவனது சிறப்பைத் தமிழகத்திற்கு எடுத்துக் காட்டிய பெருமை கோவூர்க் கிழாரைச் சாரும்

துஞ்சா முழவின் கோவற் கோமான்
நெடுந்தோர்க்காரி கொடுங்கோல் முன்றுரைப்
பெண்ணையம் பேரியாற்று நுண்மணல்

என்பது (அகம், 35) கோவல் நாட்டைப்பற்றி பழம் இலக்கியங் கள் குறித்தற்கு ஒரு சான்றாகின்றது. மலாட மன்னர்களில் ஒருவராக அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவரான மெய்ப் பொருள் நாயனார் திகழ்ந்தார் என்பதைப் பெரியபுராணம் காட்டும்

பரம ஆரியபுரம், ஆதித்தபுரம், சிவபுரம், விதிபுரம், அச்சுத புரம். சதமகன்ஊர். சுவாராணகர், உரோமசன்ஊர், காளிபுரம், கவரிமாபுரம், திருக்கை வேலர்புரம், கணேசபுரம், வியாழபுரம், நாகபுரம், கபிலபுரம் தருமபுரம் பார்க்கவன்ஊர், மிருகண்டுபுரம், ராகவன்ஊர், கிருட்டினாரணியம் போன்ற பலபெயர்கள் இதற்கு

உண்டு திருக்கோவலூர் ஒரு சிறந்த சைவத் திருப்பதி. இத் தலங்குறித்துத் திருஞான சம்பந்தரும், திருநாவுக்கரசரும் பதிகம் பாடியுள்ளனர். இத்தலத்து இறைவன் வீரட்டேசுரர் ஆவார். இறைவி சிவானந்த வல்லி. அவளே இங்குப் பெரியநாயகி என்று குறிக்கப்படுகின்றாள். இங்கு இறைவிக்கென்று கோவில் தனியாக அமைக்கப்பட்டுள்ளது. அவள் தவஞ்செய்ய சென்ற பொழுதுபெற்றோர்கள் வேண்டாம் என்று கூறியது பற்றி உமை என்ற பெயர் வந்ததென்பர்.[1]

வீரட்டம் என்ற திருக்கோயிலின் எழுபத்து ஒன்பது கல்வெட்டுகள் படியெடுக்கப்பட்டுள்ளனவாம். பராந்தகன், இராசராசன், ராஜேந்திரன், இராசாதிராசன், குலோத்துங்கன் முதலான சோழமன்னர்களுடையவை அவை. இக்கல்வெட்டு களில் இவ்வூர்,

சயங்கொண்ட சோழ மண்டலத்து மலாடான
ஜகந்நாத வளநாட்டுக் குறுக்கைக் கூற்றத்துத்
திருக்கோவலூர்

என்று குறிப்பிடப்பட்டிருக்கின்றதென்பர்[2]

இத்திருக்கோவலூரின் சிறப்பினை — அத்திருப்பதியின் புகழினைப் பொய்கை ஆழ்வார், பூதத்தாழ்வார், திருமங்கை ஆழ்வார் போன்ற பல ஆழ்வார்களும் போற்றிப் புகழ்கின்றனர்.

திருக்கோவலூரில் மேலூர் என வழங்கும் பகுதியில் திருமால் திருக்கோவில் ஒன்று உள்ளது இப்பதியின் இறைவன் திரு விக்ரமன். கிழக்கு நோக்கி அமைந்திருக்கும் இந்த ஆலயத்தில் திருமால் நின்ற கோலத்தில் காட்சி தருகின்றார். மிருகண்டு முனிவருக்கும், பலிச்சக்கரவர்த்திக்கும் திருமால் அருள்செய்த இடமிது.

இந்நூலில் காப்புச் செய்யுள் இடம்பெறவில்லை. கிடைத்த இரண்டு சுவடிகளிலும் காப்புச் செய்யுள் காணப்படவில்லை எனவே தொடக்கத்தின் போதே நூல்பொருள் தோற்றம் பெறுகிறது.

---

1. பக்தி இலக்கியம், டாக்டர் ப. அருணாசலத் தேசிகர், ப. 3.
2. கலைக்களஞ்சியம் தொகுதி 5, ப. 738

பொன்சயில வெள்ளிமலை கால்க ளாகப்
பொருவிலண்ட கூடமதுத் திரம தாக
உன்னியுறை மறைநான்கும் கயிற தாக
ஓங்கார ரீங்காரம் தொட்டி லாகத்
தன்னிகர்மால் சதுமுகனும் வடந்தொட் டாட்ட
சமீபமதிற் றும்புரரும் கீதம் பாட
மன்னவர்வீ ரட்டேசர் மாலை சூட்ட
மகிழ்பெரிய நாயகியே யாடீ ரூசல்

என்று தொடக்கப் பாடல் ஊஞ்சலின் அமைப்பு விளக்கப் பாடலாகத் திருவாசகம்—திருப்பொன்னூசல் போன்று அமைந்துள்ளது.

வளப்பம் பொருந்திய பெண்ணை நதியால் வயல்கள் செழிந்தோங்கி இருக்கின்றது. அப்படிப்பட்ட திருக்கோவலூரில் இருக்கின்றான் வீரட்ட தேசிகன். அவனது அன்பும், இரக்கமும் அம்மையின் ஊஞ்சலுக்கு இரண்டு கால்களாக அமைகின்றன. அவ்விரண்டு கால்களையும் இணைத்துப் போடப்படும் உத்திரம் அவனது அருள் போதனைகளால் உருவாக்கப்பட்டது. அவ்விறைவனது நெறியே நிற்கின்ற செயலே ஊஞ்சல் பலகையை உத்திரத்துடன் இணைக்கின்ற கயிறுகளாக இருக்கின்றன. அப்படிப் படைக்கப்பட்ட சிறந்த ஊஞ்சலில் நீ இருந்து ஆடுக என்று ஆசிரியர் உமையை வேண்டுகின்றார்.

திருக்கயிலாய பரம்பரைத் திருக்கோவலூ ராதீனத்தின் முதற் குருமூர்த்தியாக ஆறுமுக மெஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் இருந்தனர். அவர்கள் ஆறுவித தீட்சைகளைப் பெற்றதற்கும் கதைகள் வழங்கப்படுகின்றன. அந்த நிகழ்ச்சிகள் இவ்வூஞ்சல் பாடல்களில் குறிக்கப் படுகின்றமையின் அந்நிகழ்ச்சிகளைக் குறிப்பது இங்கு அவசியமாகின்றது. அந்நிகழ்ச்சிகள் அறியாத நிலையில் இந்த ஊஞ்சல் பாடல்களுக்கான பொருள் நுகர்வு பெறமுடியவில்லை.

ஆறாம் குகை நமசிவாயர், குழந்தையாக இருந்த ஆறுமுக தேசிகர்க்கு சிவலிங்கதாரணமும் தூலபஞ்ஞாக்கர மந்திரமும் உபதேசித்தார். அவரது பத்தாம் வயதுவரை இதே மந்திரத்தையே இவர் செபித்து வந்தார். பதினோராம் வயதில் ஒரு நாள் இரவில் உமையம்மை குருமூர்த்திகளின் கனவில் தோன்றி

சூக்குமபஞ்சாக்கர மந்திரத்தைச் சொல்லி, அதைச் செபிக்கப் போதித்து மறைந்தாள். இந்நாட்களில் இவர் பெண்ணை ஆற்றில் நீராடி கபிலர் குன்றின்கீழ் அமர்ந்து இட்டலிங்கபூசனை புரிவதை வழக்கமாகக் கொண்டிருந்தார்.

ஆற்றிற் கபிலீச லிங்கமுன்
அடிக்குன்ற நீழலில் லிங்கமே
ஏற்றும் சிவலிங்க பூசனை
யான்செய்யும் காலத்து லிங்கமே

என்பது அவரது கூற்று [3]

ஒருமுறை திருநீற்றுப்பையைக் கரையில் வைத்து விட்டுப் பெண்ணையாற்றில் இவர் நீராடிவிட்டுத் திரும்பிய போது நீற்றுப் பையைக் காணவில்லை. தனது அனுக்கத் தொண்டருடன் நேரடித் தொடர்பு கொள்ள எண்ணிய இறைவன் அப்பையை மறைத்து விட்டான். அதை அறிந்து கொண்ட தேசிகர் இறைவனிடம் நீற்றுப்பை வேண்டினார் முறையிட்டவர் கையிலே திருநீற்றுப் பையும், ஓர் உருத்திராக்கமாலையும் வந்திருந்தன. நீற்றைப்பூசி மாலை கொண்டு தொழும் முறையை விண்ணொளி ஒன்று எடுத்துக் கூறி மறைந்தது.

அடிகள் தனது பதினாறாம் ஆண்டிலே ஒரு நாள் கபிலர் குன்றின் கீழமர்ந்து சிவபூஜை செய்தார். அவர் முடித்துத் திரும்புகையில் இறைவன் ஒரு ஆராத்தியர் (கோயில் பூசனை புரிவோர்) வடிவில் எதிரில் நின்றார் அவருக்கு முகமன் கூறி இருக்கையில் அமரச்செய்தார். அவர் சில சொல்லுவான் தொடங்கி காரணபஞ்சாக்கரத்தை உபதேசித்தார். அது முதல் அப்பஞ்சாக்கரம் செபிக்கக் கூறி மறைந்தார் இறைவர்.

ஒரு நாள் இறைவனை நேரக்கி தனக்குக் கடைத்தேறும் வண்ணம் வாக்கு மனம் கடந்த ஒரு சொல்லினை உபதேசித்து அருளுமாறு வேண்டினார். அன்றிரவே இறைவன் ஞானியர் கனவில் தோன்றி இன்னும் நான்காண்டுகளில் உனக்கு ஒரு வார்த்தை உபதேசம் அருள்வோம் என்றருளினார்.

---

3. சதுர்லிங்க சதகம், பா, 11.

அருளும் ஆராத்திய லிங்கமே
அதீதம் என்றைக்கென்க லிங்கமே
உரைநான்கு வருடத்தின் லிங்கமே
உபதேசம் செய்வதென் லிங்கமே

என்ற பாடல் வழி அது விளக்கப்படுகிறது.[4]

காரண பஞ்சாக்கரம் இடையறாமல் ஒன்பது நாட்களே நடைபெற்றன பத்தாவது நாள் வீரபத்திரக்கடவுள் எதிர்த் தோன்றினார். மகா காரண பஞ்சாக்கரத்தைக் குருநாதருக்கு உபதேசித்தார். அதன் உண்மைப் பொருளை உணர்த்தினார்.

தன் கருத்தை முற்றுவிக்கும் நிலையில் வழக்கம்போல் கபிலர் குன்றின் கீழமர்ந்து சிவபூஜை செய்தார். அவரை நினைந்த மாத்திரத்திலேயே, **வீரட்டநாதன் விமலையொரு பாகனாய்** இடப வாகனத்தின் மீது எழுந்தருளிக் காட்சி நல்கினான். மெய்ஞ்ஞான குருமூர்த்திகளின் மடித்தலத்திலே வாதுளாகமத்தின் உத்தர பாதத்திலே இருபத்தெட்டாம் படலத்தில் உள்ள நிட்டானுபூதியை இட்டான். ஆறுமுக குருவின் அஞ்செவி குளிரப் பாவனாதீத ஒருவார்த்தையை உபதேசித் தருளினான்.

நாம் மேற்கண்ட இந்தச் செய்திகளில் ஒன்றோ இரண்டோ ஒரு பாடலில் அமையுமாறு, ஆசிரியர் அமைத்துப் பாடுகின்றார்.

அருளியொரு பதுதினத்திற் பெண்ணை ஆற்றின்
அரனடியார் *அரசப்பூ அசலந் தன்னில்
இருமூன்றா யுதபாணி வீர பத்திரர்
எனும்சொரூபர் யருளிறைமா கார ணத்தை
சிரமுமிடை நெறிபதுமா சனத்தி ருந்து
செபியாமற் செபியென்றன் தேசி கர்க்கும்
அருளவரு ளிறைத்தியானத் திருக்கா வந்நாள்
அருள்பெரிய நாயகியே ஆடீர் ஊசல்,

என்று அமையும் பாடல் (5) காரண பஞ்சாக்கரம் என்னும் செபம் ஓதி ஒன்பது நாள்கள் முடிந்ததும், மகாகாரண பஞ்சாக்கரம் அருளிப் பெற்றதையும், அதை அவர் பத்மாசனத்தில் இருந்து கொண்டு வாய்விட்டுச் சொல்லாமல் மனத்துள்ளே சொல்லி

4. சதுர்லிங்க சதகம், பா, 63,

செபிக்கும் நிலையையும் அருளிச்செய்த அம்மை என்று வீரட்ட னின் பெரிய நாயகி போற்றப் படுகின்றாள்.

திறமான வாக்குத் தருவது என்றைக்கு என்று தேசிகர் ஆராத்தியராய் வந்த வீரட்டதேசிகனிடம் வேண்டினார். அவர் ஒருபது நாளில் (10 நாள்) அருள்வேன் என்று கூறினார். அதன்படி பத்தாம்நாள் மகாகாரண பஞ்சாக்கரத்தை அருளினார். அவரே அடுத்த கடைத்தேறும் வண்ணம் அமையக்கூடிய வாக்கினை நாற்பத்தெட்டு மாதங்களில் அருளுவதாக உரைக் கின்றார்.

இதுபோன்றே மற்ற பாடல்களும் நாம் மேலே குறிப்பிட்ட நிகழ்ச்சிகளைச் சுட்டுவனவாக அமைகின்றன. அவ்வமைவிற்கு

ஒருநாட்டங் களுமுன்னா துண்மை மோன
முறையாம லுணர்ந்ததிரு வீரட் டேசர்
அருளுமுன் உபயதிரு வடிதியா னத்தின்
அஞ்சலிக்கை சிரமிதையம் மடிமேல் வைத்துப்
பரவுமனோ லயவுண்மை வாழ்வு தன்னிற்
பத்துவித நாதரதி பலவாங் காட்சித்
தெரிசனஞ்செய் செனகுருவுக் கருள்தாய்க் கோவல்
சீர்பெரிய நாயகியே ஆடீ ரூசல்

என்ற பாட்டு தக்கதொரு சான்றாக அமைகின்றது.

## நூல்

1. பொன்சயில வெள்ளிமலை கால்க ளாகப்
பெருவிலண்ட கூடமதுத் திரம தாக
உன்னியுறை மறைநான்குங் கயற தாக
ஓங்கார ரீங்காரந் தொட்டி லாக
தன்னிகர்மால் சதுமுகனும் வடந்தொட் டாட்ட
சமீபமதிற் றும்புரருங் கீதம் பாட
மன்னர்வீ ரட்டேசர் மாலை சூட்ட
மகிழ்பெரிய நாயகியே யாடீ ரூசல் 97

2. சீராரும் பெண்ணையுலா வயல்கள் சூழும்
திருக்கோவல் வீரட்ட தேசி கன்றன்
ஏரார்கா ருண்யமன்புங் கால்க ளாக
இயம்பருட்போ தனைகளுமுத் திரம தாக
நேராயன் னெறிநிற்றல் கயற தாக
நிச்சியஞா னத்துணர்வின் நீங்கா தென்றும்
பேராம விருந்தெனையா ளருட்டா யென்னும்
பெரியநாய கியுமையே யாடீ ரூசல்

---

1. பொன்சயிலம்—மேருமலை
வெள்ளிமலை—இமயமலை
சதுமுகன்—நான்முகன்
தும்புரர்—இசையில்வல்ல கந்திருவர்
பர்வதாம்பிகை—மலைமகள், பாட்டுடைத்தலைவி
மல்லேசர்—வீரசைவ இறைவன்
கயிறு என்பது, கயர், கயிறு, கயறு என்றெல்லாம் அமைந்திருந்தாலும் 'கயறு' என்று பதிப்பிக்கப் பட்டுள்ளது.
2. பெண்ணை—தென்பெண்ணை
ஏரார்—அழகுபொருந்திய
காருண்யம்—கருணை

3. அருணையினிற் றிரோதையுயி ராதி யந்தம்
அங்கயிலிங் காற்சனையும் அருண்மேற் கோவற்
புரிமடத்து ளிறையாதி மலமீ றாகப்
போதனைசெய் கனவிலருட் பெண்ணை யாற்றின்
திறமான கபிலீசர் குன்ற நீழல்
சிவபூஜை செய்பதக கோயில் போக்கி
அருளுமா ராத்தியராய் யடிமை ஆசான்
அருட்பெரிய நாயகியே யாடீ ரூசல் 99

4. அரியவிறை யருளணுவுக் கிருபா லைந்தும்
அவ்விறைகட் டென்றாராத் தியராய் போதித்து
அருளுகா ரணசெபங்கண் மணியெட் டங்குட்
டத்தினுரு வெண்ணிலிசேய்க் கருளுந் தேவை
உரையிலா மோனமென்றைக் கருள்வை யென்னா
ஒருபதுநாள் அருளுவதொன் றோதெண் ணாறா
உரைதிங்க டனிலுணர்த்து கோமென் றாசாற்கு
உணர்த்துபெரி யாம்பிகையே ஆடீர் ஊஞ்சல் 100

5. அருளியொரு பதுதினத்திற் பெண்ணை ஆற்றின்
அரனடியா லரசப்பூ அசலந் தன்னில்
இருமூன்றா யுதபாணி வீர பத்திரர்
எனும்சொரூபர் யருளிறைமா கார ணத்தை
சிரமுமிடை நெறிபதுமா சனத்தி ருந்து
செபியாமற் செபியென்றன் தேசி கர்க்கும்
அருளவரு ளிறைத்தியானத் திருக்கா வந்நாள்
அருட்பெரிய நாயகியே ஆடீரூசல் 101

---

3. திரோதை—மறைப்பு
அங்கலிங்கம்—உடம்பிலிருக்கும் லிங்கம்
அருணை—திருவண்ணாமலை
கோவற்புரி—திருக்கோவலூர்
கபிலீசர்குன்றம்—கபிலீசர்மலை
ஆராத்தியார்—வீரசைவர்; கோயில் பூசனை புரிவோர்.

4. அரியவிறை—காணற்கரியகடவுள்

5. சொரூபர்—வீரபத்திரர் என்னும் வடிவுடையார்
பதுமாசனம்—ஒருவகை யோகநிலை.

6. திருவளரா வணிமூலத் திறைவர் தூபிச்
சிகரகோ புரநடுவாங் கலச நேராய்
அருள்நேசர் தெரிசனஞ்செய் பெண்ணை யாற்றில்
அங்கையிலிங் காற்சனை செய் அன்றி ராவில்
அருளிறைத்தியா னத்திருக்க விடிகா லத்தென்
ஆரியரங் கையின்வாது ளத்தை வைத்துக்
குருவீரட் டேசரருட் சத்தி யென்ன
கூறுபெரி யாம்பிகையே ஆடீ ரூஞ்சல். 102

7. கரமுளவா துளந்தெரிச னஞ்செய் காலங்
கயிலையினின் உமைக்கருணிட் டானு பூதி
ஒருவார்த்தை யுண்மைநிலை யுரையா தோதும்
உணர்வாகு மோனமுத் திரையி னாளும்
பிரியாம லிருந்திடென் னாரி யர்க்குப்
பேசுமொலி யின்படிசா தனைகை வல்லியம்
அருள்வீரட் டேசரருண் மேனி தானாய்
அவிர்பெரிய நாயகியே ஆடீ ரூஞ்சல் 103

8. ஒருநாட்டங் களுமுன்னா துண்மை மோனம்
உரையாம லுணர்த்துதிரு வீரட் டேசர்
அருளாமுன் னுபையதிரு வடிதியா னத்தின்
அஞ்சலிக்கை சிரமிதையம் மடிமேல் வைத்துப்
பரவுமனோ லயவுண்மை வாழ்வு தன்னிற்
பத்துவித நாதரதி பலவாங் காட்சி
தெரிசனஞ்செய் கெனகுருவுக் கருட்டாய் கோவல்
சீர்பெரிய நாயகியே ஆடீ ரூசல். 104

---

6. அருள்நேசர்—அடியார்கள்
7. கரமுளவாதுனம்—கையிலுள்ள வாதுளாகமம், இருபத்தேழு ஆகமங்களுள் ஒன்று
நிஸ்பரர்—ஒன்றுமில்லாதநிலை
அனுபூதி—அனுபவிக்கும் செல்வம் (கந்தரனுபூதி—கந்தரை அனுபவிக்கும் செல்வம்)
கைவல்லியம்—அனுகூலம், ஏகமானதன்மை
8. உபய திருவடி—இரண்டு கால்கள்

9 திருவருட்சாம் பவியனிரு கால்க ணாட்டி
சிந்தயமை நடுநிலையுத் திரம தேற்றி
திரமாயன் னிலைநிற்குங் கயிறு சாத்தி
செப்பிலுய ருணர்வுண்மை பலகை மீதின்
வரவுபோக் கிராப்பகலில் லாத வின்ப
வாங்குமனா தீதகோ சரமா யெங்கும்
புரணாதீ தனுபவமென் னாரி யற்குப்
பூர்த்தியருட் பெரியவுமை ஆடீ ருஞ்சல் 105

10. நிர்வயதே சத்திநிரஞ் சனமே நாட்டி
னிலகுமா சூனியருமே னூரி னுக்கு
அருளுநிட் களவீட்டின் மாலிங் காங்க
வனுபவஞ் சையோகம் வாழ்வு மேலாய்
மருவியிறு மாப்புறுக நிதமெப் போதும்
மன்னுமென்ற னாரியர்க்கு வீரட் டேச
குருசொரூபே நீயாகி யருட்டா யென்னுங்
கோவலில்வாழ் பிரகதம்பா ளாடீ ரூசல் 106

---

9. மனாகோசரம்—மனமாகிய இடம்
10. நிர்வயம்—வசமற்ற தேசம்
மன்னும் என்ற ஆரியற்கு—நிலைத்திருக்கும் மல்லன மன்னனுக்கு
பிரகதாம்பாள்—பெரியநாயகி

# 8. ஆறுமுக தேசிகர் ஊஞ்சல்

## ஆறுமுக தேசிகர்

இவர் தென்பெண்ணை ஆற்றின் தென்கரையில் அமைந்துள்ள, தமிழ் நாட்டின் நடுநாடாகிய திருக்கோவலூரில் உள்ள வீரசைவமடத்தின் தலைவர். இந்த மடத்துத் தலைவர்கள் ஞானியார் அடிகள் என்று அழைக்கப் படுகின்றனர். இவர் தான் இந்தத் திருக்கோவலூரர் வீரசைவ மடத்தின் முதல் ஞானியார் அடிகள். **கோவல் ஆதீனக் குருமணி** என்று இவர் போற்றிப் புகழப்படுகின்றார்.[1] இவர் திருக்கயிலாய பரம்பரைத் திருக்கோவலூராதீன முதற் குருமூர்த்திகள் ஸ்ரீலஸ்ரீ **ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள்** என்று அழைக்கப்படுகின்றார்.

இவர் சுப்பிரமணிய ஐயர் என்பவருக்கும், சுப்பாம்மாள் என்பவருக்கும் குழந்தையாக 1744 ஆம் ஆண்டு (கலி 1474, ஆநந்த ஆண்டு) திருக்கோவலூரிலே அவதரித்தார். ஆனால் இவர் தாய், தந்தையரால் வளர்க்கப்படவில்லை. கோவல் மடத்தினர் குமரையர்—வள்ளியம்மை தம்பதியர் இவரைச் சீரும் சிறப்பும் பெற வளர்த்தனர். அவர்கள் இவரை இளம் பருவத்திலேயே ஆறாம் குகை நமச்சிவாயர் முதற்குரவரிடம் ஒப்படைத்து, சிவலிங்க தாரணம், தூலபஞ்சாட்சர உபதேசம் இவற்றைச் செய்வித்து அருளச்செய்தனர். மேலும் இவர், சூக்கும பஞ்சாக்கரம், காரண பஞ்சாக்கரம், மகாகாரண பஞ்சாக்கரம், பாவாணுதீத ஒரு வார்த்தை போன்றனவும் இறைவர்களால் பெற்றவர்.[2]

---

1. கோவல் ஆதீனக்குருமணி, வரலாறு, ப. 2
2. மேற்படி, பக். 29, 35, ›7, 41.

திருவருணைக்குகை நமச்சிவாயர் பரம்பரையிலே ஆறாவது குருமூர்த்தியாக எழுந்தருளி இருந்தவர்கள் ஆறுமுகக் குருவிடம் தானேசென்று அவருடைய ஞான ஆற்றலை உணர்ந்து, **ஞானியார்** என்று பெயர் சூட்டினார்கள். வடமொழியில் நிலவிய **நிட்டானு பூதியைத்** தமிழிலே மொழிபெயர்த்து யாவரும் பயனடையுமாறு செய்தார் தேசிகர். ஞானியாராகப் பொறுப்பேற்ற இத்தவச் செம்மல் அளித்தருளிய **நூல்கள்** பின்வருமாறு.

| | **நூல்** | **செய்யுள்கள்** |
|---|---|---|
| 1. | நிட்டானுபூதிசாரம் | 91 |
| 2. | வீரசைவ உண்மையகவல் | 1 |
| 3. | சதுர்லிங்க சதகோத்தர சதகம் | 113 |
| 4. | இட்டலிங்கத் திருத்தல மாலை | 17 |
| 5. | சிவசோடமாலை | 16 |
| 6. | ஆசைச்சோடசமாலை | 10 |
| 7. | உய்யப்பத்து | 10 |
| 8. | ஓலப்பத்து | 10 |
| 9. | கரதலப் பதிகம் | 10 |
| 10. | ஆடுதுறைக்குற்றம் பொறுத்தோர் தோத்திரம் | 4 |
| 11. | சண்முகர் உலா | 120 |
| 12. | தேன்பாங்கு | 10 |
| 13. | மாசிலாமணிப் பதிகம் | 11 |
| 14. | சிவசிவ பதிகம் | 11 |
| 15. | சிவசிவ ஹரஹர பதிகம் | 11 |
| 16. | கரதலநாயக பஞ்சகம் | 5 |
| 17. | இஷ்டலிங்கப்பதிகம் | 10 |
| 18. | கரதலத் திருப்புகழ் | 3 |
| 19. | வீரட்டேசுவர அனுபவ கலித்துறை | 12 |
| 20. | இலிங்கப்புலம்பல் | 219 |
| 21. | அருள்வாம உண்மைவிளக்கம் | 113 |
| 22. | பிரதம துர்க்க நிச்சயம் | 22 |
| 23. | வெற்றருலா | 48 |
| 24 | உண்மையுலா | 113 |
| 25. | பரமஉபதேச ஒடுக்கம் | 12 |
| 26. | சிவாத்துவைத கும்மி | 27 |
| 27. | ஞானிகள் நிலைமை | 8 |

| | | |
|---|---|---|
| 28. | மேன்மைப் பதிகம் | 82 |
| 29. | வீரட்டேசுவர தோத்திரக்கலிப்பா | 16 |
| 30. | சண்முகரகவல் | 1 |
| 31. | வீரட்டேசுவர மகா குரு தோத்திர மங்களம் | 5 |

இத்துணைச் சீர்பெற்ற இப்பெருமான் மீது பாடப்பட்டது இவ்வூஞ்சல். இதில் இவரது அருளும், இறைவன் மீது கொண்ட காதலும் சிறப்பிக்கப்படுகின்றன.

இந்த ஊஞ்சலில் காப்புப்பாடல் காணப்படவில்லை. நூலின் தொடக்கம் ஊஞ்சலின் அமைப்பைச் சுட்டி நிற்கின்றது. நல்வினை, தீவினை இரண்டும் ஒப்பு என்னும் கால்களை நாட்டினர். இயம்புகின்ற நடுவுநிலைமை என்னும் உத்திரம் ஏற்றினர். சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைசகி என்னும் நான்கு வகை வாக்கினையும் அசையாமல் கயிறு என்னும் மூச்சினை நிறுத்தப் பண்ணினர். சொல்லுதற்கு அரிதானமையின் பேச்சற்ற பெருநிலம் எனப்பெறும் மெய்ஞ்ஞான பலகையின் மீதில் ஆறுமுகதேசிகரை அமர அழைக்கிறார் ஆசிரியர். திருவாருங் கோவலூர் சிவகுன்றாதித் திருப்பாதிரிப் புலியூர்க்குத் தேவனாக இருக்கின்ற அந்தத் தேசிகர் அருள், ஆனந்தம் ஆதியாக அனைத்தையும் கடந்திருந்தவர்.

இதிலமைந்துள்ள மற்றப் பாடல்கள் வீரசைவத்தின் கருத்துகளை விளக்கும் வகையில்தான் அமைகின்றது. மற்ற ஊஞ்சல்களைப் பகுத்துக் கண்ட முறைப்படி இந்நூலைப் பகுத்துக்காண இயலவில்லை.

அருவப் பொருளாய் அதுவே, மாறாததாய், (நிரஞ்சனம்) சொல்ல முடியாததாய் (சூனியம்) பின்னர் உருவமற்றதாய் அமைகின்றது. அதுவே பின்னர் உருவமுடையதாயும் உருவெடுக்கிறது.

உருவங்கொண்டதன் பின்னும், உருத்திரன், அரி, அயன் என நின்று உயிர்களுக்காகக் கருணையினால் படைப்பு முதலிய தொழில்கள் செய்து, கன்மங்களினால் பிறப்பின் இருள் ஒழியுங் காலந்தன்னில் திருவுளத்து இச்சைக்கு இசைந்த பக்குவர்க்காகத் தேசிகராய்—குருவாய் ஒருவார்த்தை உபதேசம் செய்ய எண்ணி அருள்திருமேனி கொண்டு உலவிவரும் கோவல் வாழ் ஆறுமுக தேசிகர் போற்றப்படுகின்றார்.

வேதங்களின் முடிவாம் உபநிடதம் தொந்தத்தசி (துவம்+ தத்+அசி) என்பதன் பொருளாகச் சீவனும் ஈசனும் என்ற நிலை நீக்கியவர். அதாவது உயிருடன் இருக்கும்போதே கடவுள் நிலை அடைந்த ஜீவன் முக்தர் ஆறுமுக தேசிகர். நன்கு தெளியும்படி சொல்லப்படுகின்ற சுத்த பிரமமும் ஒன்றேயாகும் உண்மைநிலை சேருவதற்கான வழிநிலையைக் காட்டியவர். இரவும், பகலும், மறப்பு நினைப்பு இடம் நீத்தவர் இவர். பிரமந்தானாக இருந்த படியே இருப்பதற்கு ஏழையேன் எனக்கு அருள்மேனி கொண்டு இன்பம் தருபவரே என அவரை விளிக்கிறார் ஆசிரியர்.

ஆரணமீ றோதுதோம் பதார்த்த சுத்தம்
ஆகியதே நிசவங்க மாகு மென்ன
காரணமே ழுங்கழன்ற தற்ப தார்த்தம்
கழறுசுத்த மாகியதே லிங்க மென்ன
தாரணலிங் காங்கமசி பதசம் பந்தன்
சமாசவத்து விதபத்தி தற்கு பாய
ஆரியராய் போதகஞ்செய் தெனையாள் கோவல்

என்று நூலாசிரியர், கோவல் குருமணியாம் ஆறுமுக தேசிகரை வேண்டுகின்றார்.

வேத முடிவு ஓதுகின்ற 'தொம்' பத அர்த்தப் பொருள் சுத்தமாகியதோர் நிஜ **அங்கமா**கும் என்ன.

காரண அவத்தைகள் ஏழும் கழன்ற தற்பத அர்த்தப் பொருள் விளங்குகின்ற சுத்தமாகியதோர் **இலிங்கம்** என்ன,

தரித்திருக்கும் இலிங்காங்கம் அசிபதம்: அதன் சம்பந்தன் என்றும், இதற்குச் சமரச அத்துவிதபத்தி உபாயம் என்றும், ஆசாரியனாக நின்று உபதேசம் செய்து என்னையாண்ட கோவல் என்று அதற்குப் பொருளுரைத்தல் வேண்டும்.

அருள் நோக்கான பார்வையினால் ஆணவத்தை நீக்கினாய்; அருள் வினையால் என்னுடைய கருவி கரணங்களில் உள்ள மாலையை நீக்கினாய்; தொடுதல் தீட்சையால் உடம்பிலுள்ள கன்ம அவத்தையை நீக்கினாய்; இவ்வாறு பார்வையால், உளத்தால், கரத்தால், பாதத்தால் அரிய வேதங்களின் முடிபு நீதானே யாகினாய். **அத்துவித ஆனந்தம்** அருள் செய்யுமாறு உனது அருள் மேனியை எனக்காக இங்குக் கொண்டுவந்தாய். அப்படிச் சீரும்

சிறப்பும் மிக்க ஆறுமுக தேசிகனே ஆடீர் ஊஞ்சல் என்றழைக்கிறார் ஆசிரியர்.

அறிகருவி (நானேந்திரியம்) செயல்கருவி (கர்மேந்திரியம்) இரண்டும் மலத்தன்மையின் நீங்கிட நீ வழி செய்தாய். வேத தீட்சை, மந்திர தீட்சை, கிரியா தீட்சை ஆகியவற்றைச் செய்து முறையே, இட்ட, பிராண, பாவ லிங்கங்களைப் பிரதிட்டை செய்வர். கோவல் ஆறுமுகதேசிகர் மூவகை லிங்கங்களுக்கும் முறையே உரு, சுவை, நிறைவு என்ற மூன்றையும் சமர்ப்பித்து அதனால் உற்றவினையை நீக்கும் அறிவுடன் கூடிய அத்துவித பத்திக்கு அருளும் தன்மைகொண்டவர்; என்றெல்லாம் ஆசிரியர் போற்றுகின்றார்.

அடுத்த பாடல் லிங்கத்தின் நிலைகளைத் தெளிவாக எடுத்தியம்புகின்றது. உடலில் சேர்த்துக் கொள்வதாகிய கிரியா தீட்சை எனப்படுவது இட்டலிங்கம். உயிரே லிங்கமாக அமைகின்ற அருவுருவம் எனப்பெறும் வேததீட்சை பிராண லிங்கம். அது கோமுகத்தில் அமைகிறது. அருவமாய கோளகத்தில் நீயே லிங்கமாக மாறிய நிலையான பாவலிங்கம் அமையும். இம் மூன்றையும் கொண்டு ஒருருவாய் அமைந்தவன் நீ. மகாஞான லிங்கந் தன்னைக் (கனலிங்கம்) கிரியை, பூசனை, தியானம், தற்பாவம் இவை தன்னால் கேட்கின்ற மகாலிங்க அங்கமாகும். உபாயம் அருளவரும் திருமேனி சாத்தும் கோவல் ஆறுமுக தேசிகனே ஆடீர் ஊஞ்சல் என்று விளிக்கின்றார் ஆசிரியர்.

அகரமே பீடமாகவும், இட்டலிங்கமாகவும், உகரமே கோமுகமாகவும் பிராண லிங்கமாகவும், மகரமே கோளகமாகவும் பாவ லிங்கமாகவும் அமைகின்ற நிலையை ஆசிரியர் விளக்குகின்றார். பரவாக்கு அக்கர மூன்றும் பரவும் மாலிங்கம் புகழும் சச்சிதானந்தம் என்ன, பூரணமான சித்கலை, சித்நாதம், சித்பிந்து என்றும், நீங்காத சித்பிரணவம் இலிங்கமென்றும் அருள்கின்றவராகிய கோவலூர் தேசிகர் ஊஞ்சலாட அழைக்கப்படுகின்றார்.

அகரமே பீடமிட்ட மென்று கார
மாங்கோமு கம்பிராண லிங்கம்...
மகரமே கோளகமாம் பாவ லிங்கம்
மாம்பரவக் கரமூன்றும் மகாக னலிங்கம்

புகலுமதே சச்சிதா னந்த மென்ன
பூரணசித் கலைநாத பிந்து வென்ன
அகலறுசிற் சொல்மகா லிங்க மென்ன
அருட்கோவ லாறுமுக ஆடீர் ஊஞ்சல்

என்பது ஆசிரியரின் வாக்கு.

அதைத் தொடர்ந்த பாடல் ஒரு வரைபடத்தால் விளக்குந் தன்மையதாய் அமைந்துள்ளது. கோளகத்தில் மாலிங்கம்-பிரணவம் அமைகின்றது. கண்டத்திலே வகரம் சரலிங்கம் நிற்கின்றது. கோமுகத்திலே சிகரம் சிவலிங்கம் இருக்கின்றது; கீழ்க்கண்டத்தில் மகரம் குரு லிங்கம் பிறக்கின்றது. பீடத்திலே நகரம் ஆசார லிங்கம் அமைகின்றது. எல்லாம் ஒருங்கிணைய ஒன்றுகூட்ட **நமசிவாய** என்னும் ஐந்தெழுத்தாலான மந்திரம் உருவாகும் என்பதை ஆசிரியர் இப்பாட்டலின் கண் விளக்கிச் சொல்லி யுள்ளார்.

# நூல்

1. திருவாருங் கோவலூர் சிவகுன் றாதித்
   திருப்பாதி ரிப்புலியூர் தேவே என்றன்
   இருவினையும் சமமாகும் கால்கள் நாட்டி
   இயம்புநடு நிலையெனும்உத் திரம தேற்றி
   ஒருநான்கு வாக்கசையாக் கயிறு பூட்டி
   உரையற்ற மெஞ்ஞான பலகை மீதில்
   அருளானந் தாதிதாங் கடந்தி ருந்த
   ஆறுமுக தேசிகனே ஆடீ ரூசல் 107

2. *நிருவயமே நிரஞ்சனசூ னியம தாகி
   நிஷ்களமாய் நிஷ்களமுஞ் சகள மாகி
   உருவாய சகளமா யேக ருத்(தி)ர
   ஓதரியு மயனுமாய்உ யிர்கட் காக்க
   கருணையினாற் படைப்பாதி தொழில்கள் செய்து
   கன்மசன்மத் திருளொழியுங் காலந் தன்னில்
   திருவுளத்திச் சைக்கிசைவாம் பக்கு வர்க்காய்
   தேசிகரா யொருவசனஞ் செப்ப எண்ணி
   அருண்மேனி சாத்திவரும் கோவ லூர்வாழ்
   ஆறுமுக தேசிகனே யாடீ ரூசல் 108

---

1. திருவாருங்கோவலூர்—திருக்கோவலூர்
   சிவகுன்று—சிவ்கிரி (தென்னாற்காடு மாவட்டம், கண்டாசிபுரம் அருகில் உள்ளது)
   இருவினை—நல்வினையும் தீவினையும்
   இயம்பு—எடுத்துச்சொல்லத் தகுந்த
   ஒருநான்கு வாக்கு—சூக்குமை. பைசந்தி, மத்திமை வைகரி என்ற நான்கும்
   மெஞ்ஞானம்—மெய் + ஞானம் = மெஞ்ஞானம் உண்மை அறிவு

2. *இப்பாடலில் ஓரடி மிகுந்து காணப்படுகின்றது
   நிர்வயம்—தன்வயப்படாதது; இறைவனின் தொடக்க நிலை, ஒன்றன் வயப்பட்டில்லாது தனித்திருப்பது.
   நிரஞ்சனம்—நிறைவுள்ளது, மாறாதது

3. அருமறைநீ யதுவானா யென்னும் வாக்(கி)ய
அருத்தமாய்ச் சீவேசர்க் கவத்தை நீக்கி
உரைசெய்சுத்த பிரமமு மொன்றே யாகும்
உண்மைநிலை சேருதற்கோ ருபாயங் காட்டி
இரவுபக லில்லொழிந்து பிரமந் தானாய்
இருந்தபடி யேயிருப்ப தேழை யற்காய்
அருள்மேனி சாத்திவரும் கோவ லூர்வாழ்
ஆறுமுக தேசிகனே யாடீ ரூசல். 109

---

சூனியம்—ஒன்றிதுல்லாதது, சொல்லமுடியாதது
நிஷ்களம்—நிட்களம், உருவமற்றது
சகளம்—உருவம்
நிஷ்களமும் சகளமும்—அருவமும் உருவமும்
ருத்திரன்—சிவன்
அரி—திருமால்
அயன்—நான்முகன்
கன்மம்—கர்மம், விதி
சன்மம்—ஜென்மம், பிறவி
கன்மசன்மம்—விதியால் வந்த பிறவி
இருள்—அஞ்ஞானம்
பக்குவர்—ஞானிகள்
தேசிகர்—குரு
வசனம்—மந்திரம்

3. அருமறைநீ அதுவானாய் எனும் வாக்கியம்—
தத்துவமசி—தத்—அது, தோம்—நீ அசி—ஆனாய்
அதுநீஆனாய்—நீ அது ஆனாய்; நீயதுவானாய்
சீவேசர்—ஜீவ + ஈசர்; உயிருடன் இருக்கும்போது கடவுள் நிலை அடைந்தவர்; ஜீவன்முக்தர்
அவத்தை—துன்பம்
சுத்தபிரமம்—பரம்பொருள்
இரவு பகல்—இன்பதுன்பம்
இருந்தபடியே —பரம்பொருளாக இருந்தபடியே; சும்மா இருப்பது
இருந்ததனை இருந்தபடி இருந்து காட்டி
(திருவிளையாடற்புராணம், பாயி 14)

4. ஆரணமீ றோதுதொம் பதார்த்த சுத்தம்
ஆகியதே நிசவங்க மாகு மென்ன
காரணமே ழுங்கழன்ற தற்ப தார்த்தம்
கழறுசுத்த மாகியதே லிங்க மென்ன
தாரணலிங் காங்கமசி பதசம் பந்தன்
சமரசவத்து விதபத்தி தற்கு பாய
ஆரியராய்ப் போதகஞ்செய் தெனையாள் கோவல்
ஆறுமுக தேசிகனே ஆடீ ரூசல் 120

---

4. ஆரணம்—வேதம்
துவம்—ஓம் என்ற பதத்தின் பொருள்படும் அங்கம்
பதார்த்தம்—பதஅர்த்தம், சொல்பொருள்
காரணம் ஏழு—எழுவகை காரண அவத்தைகள்
கழன்ற—நீக்கிய (தத்—**லிங்கம்**)
தாரணலிங்காங்கம்—தரித்திருக்கின்ற லிங்கமும்அங்கமும்
**(அசி—லிங்காங்கம்)**

அத்துவிதம்—அ + துவிதம், இரண்டற்ற, ஒருமித்த,

உபாய ஆரியர்—உபாயம் சொல்கின்ற தேசிகர்; பதார்த்த சுத்தம், அங்கம், தற்பதார்த்தம், லிங்கம், தாரணலிங்கம், அசி, பதம், சம்பந்தம், சமாசம், அத்துவிதம், ஆகிய பத்திற்கும்(ஆசிரியராக இருந்து) விளக்கம் தந்த தேசிகர் என்று கூட்டுக.

| | | | |
|---|---|---|---|
| அங்கம் | — | லிங்கம் — | லிங்காங்கம் |
| \| | | \| | \| |
| உடல் (உயிர்) | — | மார்பிலிருக்கும் லிங்கம் | உயிர் + லிங்கம் |
| \| | | \| | \| |
| தத் | | துவம் | அசி |

5. அருள்நோக்கப் பார்வையிலா ணவத்தை நீக்கி
அந்நினைவால் கரணமதில் மாயை நீக்கிப்
பரிசத்தால் தனுவதினிற் கன்மம் நீக்கிப்
பார்வைதிரு உளங்கரமும் பாதத் தாலே
அருமறையீ றின்முடிவு தானே யான
அத்துவித ஆனந்தம் அருள வெண்ணி
அருள்மேனி யென்றதனுக்காய் வந்த கோவல்
ஆறுமுக தேசிகனே ஆடீ ரூசல் 121

6. அறிகர ணத்துடலின் மலமா யாதி
அக்ன்றிட *வேதமந்(தி)ரம் கிரியா தீக்கை
நெறியாகச் செய்திட்ட பிராண பாவ
நிசலிங்கப் பிரதிட்டை யால்மேல் செய்து
திரிவிதலிங் கத்தினுக்கு முருவ மாதி
செய்துசமர்ப் பணத்தினுறு வினையைப் போக்கும்
அறிவத்து விதபத்திக் கருளுங் கோவல்
ஆறுமுக தேசிகனே ஆடீ ரூசல் 122

---

5. கரணம்—செய்கை
கருவி—மனம்முதலிய கருவிகளால் (எண்ணம்) மாயை நீக்கி
தனு—உடல்
பரிசம்—ஸ்பரிசம்; உணர்ச்சி, தொடுதலால் கன்மம் நீக்கி
அத்துவிதம்—இரண்டற்றது
அத்துவிதானந்தம்—இரண்டற்ற மகிழ்ச்சி
அருள் நோக்கத்தால் ஆணவம் நீக்கி,
மனம்முதலிய கருவிகளால் மாயை நீக்கி
தொடுதலால் கன்மம் நீக்கி எனக்கொள்க.

6. மலம், மாயாதி—மலம், மாயை (ஆதி) கன்மம்
கிரியை—செயல்
இட்ட, பிராண, பாவ, நிஜலிங்கம்—இட்டலிங்கம், பிராணலிங்கம், பாவலிங்கம்
இட்டலிங்கம்—உடலில் சேர்த்துக் கொள்வது (கிரியா தீட்சை)
பிராணலிங்கம்—உயிரேலிங்கம் (வேததீட்சை)
பாவலிங்கம்—நீயே லிங்கமாக மாறுவது (மந்திரதீட்சை)
பிரதிட்டை—நிலை நாட்டுவது
திரிவிதலிங்கம்—மூன்றுலிங்கம் (இட்ட, பிராண, பாவம்)
சமர்ப்பணம் (என்னிடத்தில்) சேர்ப்பது
* வேதமும் மந்திரமும் என்பது சுவடி பாடம்

7. உருவாய பீடமதி னிட்ட லிங்கம்
உருவருவாம் கோமுகத்திற் பிராணலிங்கம்
அருவாய கோளகத்திற் பாவ லிங்கம்
ஆகியவோ ருருமகா கனலிங் கத்தைக்
கிரியாபூ சனைதியானம் தற்பா வத்தால்
கேளுமகா லிங்காங்க மாமு பாயம்
அருளவரும் திருமேனி சாத்துங் கோவல்
ஆறுமுக தேசிகனே யாடீ ரூசல் 123

8. அகரமே பீடமிட்ட மென்று கார
மாங்கோமு கம்பிராண லிங்க மென்ன
மகரமே கோளகமாம் பாவ லிங்க
மாம்பரவக் கரமூன்றும் *மாலிங் கம்தான்
புகலுமதே சச்சிதா னந்த மென்ன
பூரணசித் கலைநாத பிந்து வென்ன
அகலறுகிற் சொல்மகா லிங்க மென்ன
அருட்கோவ லாறுமுக ஆடீர் ஊஞ்சல் 124

---

7. ஓம் = அ + உ (ஓ) + ம் = ஓம்
அகரம்—பீடம்—இட்டலிங்கம்
உகரம்—கோமுகம்—பிராணலிங்கம்
மகரம்—கோளகம்—பாவலிங்கம்
மூன்றும் இணைந்தது மகாலிங்கம்
சத்—உண்மை
சித்—அறிவு
ஆனந்தம்—இன்பம்
என்பதை கலை, நாதம், பிந்து என்பவற்றுடன் கூட்டுக

8: உருவருவாம்—அருவ உருவம்
கோமுகம்—பசுமுகம்
கோளகம்—ரூபம்
மகாகனலிங்கம்—மகாலிங்கம்
பீடத்தில் இட்டலிங்கம், கோமுகத்தில் பிராண லிங்கம், கோளகத்தில் பாவலிங்கம் என்க.

* பாவலிங்கம் என்பது சுவடி பாடம்,

9. சிரசுகோ ளகத்திரெண்டு லிங்கம் செப்பும்
கோமுக கண்டத்தி ரண்டு லிங்கம்
அரையென்னு கடிபீடத் திரண்டு லிங்கம்
ஆசாரந் திகழ்பீடம் ஆதி யாக
உரையாறும் ஆறாறா முப்பத் தாறின்
ஒன்றாறா பெருக்கிருநூற் றிருபத் தாறாய்
அருளுமுறை ஒடுங்கேக லிங்க நிட்டை
அருட்கோவ லாறுமுக ராடூ ரூசல் 125

10. பிரணவகோ ளகமதனின் மாலிங் கந்தான்
பேசுநக ரபீடா சார லிங்கம்
மரைமகரங் குருலிங்கங் கண்டந் தன்னில்
அஞ்சிகரம் சிவலிங்கம் கோமு கத்தின்
உருவ(ா)கரம் சரலிங்கம் கண்டம் தன்னில்
உரையகரம் கரமபிரசாத லிங்க மந்(தி)ரம்
அருளிகொள்க னாட்டத்தே வெனையாள் கோவல்
ஆறுமுக தேசிகனே யாடூ ரூசல் 126

---

9. சிரசுகோளகம்—தலைப்பகுதியாகிய கோளகம்
ஆசாரபீடம் ஆதி—ஆசாரலிங்கம் முதலானவை (216)
சிரசாகிய கோளகத்தில்—(1) ஆசாரலிங்கம்
(2) குருலிங்கம்.
கோமுகக் கண்டம்—(1) குருலிங்கம்
(2) சிவலிங்கம்
அரைஎனும்பீடம்— (1) பிரசாதலிங்கம்
(2) மகாலிங்கம்

இந்த ஆசாரலிங்கம் தொடர்ந்த ஆறும் ஆறால் பெருக்க $6 \times 6 = 36$ ஆகும். அது மேலும் ஆறால் பெருக்கப்பட $36 \times 6 = 216$ ஆகும் என்பது பாடலின் கருத்து.



↓ — கோளகம்—பிராணலிங்கம்
← கண்டம்—சரலிங்கம்
← கோமுகம்—சிவலிங்கம்
← கண்டம்—குருலிங்கம்
↑ — பீடம்—ஆசாரலிங்கம்

ய
வா
சி
ம
ந

11. ஆதாரத் தாசார லிங்க மாதி
ஆக்கினைமா லிங்க (மதற்) கப்பால் நான்கு
ஓதுயர்வு பிரமரந்(தி)ரஞ் சிகிச்சக்க ரத்துக்
குயர்வுபச் சிமசக்க ரத்தின்... ...
மிதுயர்(ச) களலிங்கஞ் சூனிய லிங்க
மேல்னிரஞ் சனமுனிர் வயலிங் கத்தோ(டு)
ஆதியுரு வதுமருவித்து எனையாள் கோவல்
ஆறுமுக தேசிகனே ஆடீ ரூசல் 127

12. நிர்வயலிங் கத்தாதி அந்த மாக
நிமலவத்து விதவுண்மை நிமாய வுன்னற்
சொருபானு *பவசொருபபர மமதாய் வாழ்க
தூயகுரு லிங்கசரம் வாழ்க வாழ்க
திருநீறு மணிமந்(தி)ரம் வாழ்க வாழ்க
தீர்த்தமொடு பிரசாதம் வாழ்க வாழ்க
அருளெவையும் அறிவித்தாட் கொண்ட கோவல்
ஆறுமுகா ரியசுரூபா வாழ்க வாழ்க 128

---

11. ஆதாரம்—மூலாதாரம் தொடர்ந்த ஆறு என்க; இந்த ஆதாரங்கள் ஆறையும் லிங்கத்துடன் பொருத்துவர்
மூலாதாரம்—ஆசாரலிங்கம்
சுவாஸ்திட்டானம்—குருலிங்கம்
மணிபூரகம்—சிவலிங்கம்
அணாகதம்—சங்கமலிங்கம்
விசுத்தி—பிரசாதலிங்கம்
ஆக்ஞா—மகாலிங்கம்
மாலிங்கமதற்கப்பால் நான்கு—ஆக்ஞாவிற்கும் மேலிருக்கும் நான்கு ஆதாரங்கள், பிரமாந்திரம், சிகிச்சக்கரம் பச்சிமசக்கரம் (ஒன்று குறைபடுகின்றது)
மருவித்து—தோற்றுவித்து

12. நிபாதம்—சேர்தல்
உன்னல்—நினைத்தல்
சொருபானுபவம்—உருவக்காட்சியனுபவம்
சரம்—அடியார்கள் (சங்கமர்கள்)
மணி—உருத்திராட்சம்

* பவசொருபபர என்பதில் சீர் மிகுந்திருக்கின்றது, என்றாலும் பொருள் நோக்கி அவ்வண்ணமே பதிப்பிக்கப் பெற்றுள்ளது.

# 9. வள்ளி தெய்வானை ஊஞ்சல்

## வள்ளி

தமிழ்க்கடவுளாகிய முருகன் தமிழ் அக இலக்கண முறையில் களவு நெறியில் கலந்து மணந்த மனைவியாவாள்வள்ளி. இவள் விஷ்ணுமூர்த்தியின் வலக்கண்ணிலே பிறந்தவள் என்று புராணம் கூறும். இவள் குமரனை மணம் செய்து கொள்ள வேண்டும் என்று தவஞ் செய்தாள். அவளருகில் தவஞ் செய்து கொண்டிருந்த சிவமுனிவர் அந்த இடத்தில் மேய்ந்த மான் ஒன்றைக் கண்டதாகவும், வள்ளிநாச்சியார் அந்த மான் வயிற்றில் பிரவேசித்ததாகவும் கூறுவர். மாறாக வள்ளிக்கிழங்கு நடுவதன் பொருட்டுக் குறவர்கள் தோண்டியிருந்த வள்ளிக்குழியில் பிறந்துக் கிடந்ததாகவும், அவளை வேட அரசன் எடுத்து வளர்த்தான் என்றும் கூறுவர். வள்ளிக் குழியிலிருந்து அவள் கிடைத்ததால் **வள்ளி** என்று பெயரிட்டழைதத்தான் என்பர்[1]. இவளின் உண்மைப் பெயர் குமரி என்றும், தெய்வானையிடம் மாறுபட்டதால் மான் வயிற்றில் உதித்தவள் என்றும் கூறுவர் [2]

நாரதர் முருகனிடம் இவ்வள்ளியின் அழகுகளைப் புனைந்து கூறினார். அது கேட்ட முருகன், வேடன் உருக்கொண்டு வள்ளி மலை வந்து வள்ளியுடன் வேடிக்கையாக உரையாடிக் கொண்டிருந்தார்.

அப்போது அங்கு வேடர்கள் வந்திடவே முருகர் வேங்கை மரமாய் நின்றார். பின்னர் பழையபடி வேடராயிருந்து வேடர்கள் வரவும், முதியவராக தோற்றங் கொண்டார். அவரைக் காவலில்விட்டு வேடுவர்கள் அகன்றனர் அவள் தாகம் எடுப்பதாகக் கூற, இருவரும் ஒரு சுனைக்குச் சென்றனர். அங்கு முருகன் விநாயகனை நினைக்கவே அவன் யானை உருவம்

---

1. 'வந்தான் முதலெடுத்த வள்ளி குழியில்', வள்ளியம்மை புராணம், கந்தபுராணம், பாடல், 86.
2. அபிதான சிந்தாமணி, ஆ. சிங்காரவேலு முதலியார் ப, 1398.

கொண்டு வந்தான். அது கண்டு அச்சங் கொண்ட நாச்சியார் விருத்தரை (முதியவர்) கட்டித் தழுவினாள். பின்னர் தனது உண்மை உருவினைக் காட்டி அவளை மணந்து கொண்டான் முருகன்.

## தெய்வானை

முருகன் வேதநெறியில் மணந்த மனைவி தெய்வானை. இவள் திருமாலின் மகளாகக் கூறப்படுகின்றாள். குமரனை மணக்க எண்ணிய இவள் சரவணப் பொய்கைக் கரையில் தவம் செய்தாள். தவத்திற்கு முருகன் தோன்றி 'நீ இந்திரனிடம் வளர்வாயாக! உன்னை நான் மணக்கிறேன்' என்று கூறி மறைந் தானாம். அதன் படியே இவள் தவம் களைந்தாள்; குழந்தை உருவமாக மாறினாள். அக்குழந்தையை எடுத்து ஐராவதம் என்னும் வெள்ளையானை இந்திரனிடம் கொடுத்தது. அவளைப் பின்னர் முருகன் மணந்து கொண்டான். யானையால் வளர்க்கப் பட்டதால் இப்பெயர் பெற்றாள் என்றும் கூறுவர்.

தேவர்களை வாட்டிய சூரபன்மனைக் கொல்வதற்கு சிவ பெருமான் நெற்றிக்கண்ணிலிருந்து உதித்த முருகன் தேவர்களின் சேனைக்குத் தலைவனாகி (தேவ சேனாதிபதி) சூரபன்மனை அழித்தான். இந்த வெற்றிக்குப் பரிசாக இந்திரன் மகிழ்ந்து தன் மகளாகிய தேவ சேனையைச் சுப்பிரமணியருக்கு மணஞ்செய்து கொடுத்தான். இத்திருமணம் திருப்பரங்குன்றத்தில் நடைபெற்ற தாகக் கூறுவர். தேவர்களின் சேனைக்குத் தலைவன் என்ற முறையிலும், இந்திரன் மகள் தேவசேனைக்குத் தலைவன் என்ற முறையிலும் முருகன் தேவசேனாதிபதி யாகின்றான்.

**தேவசேனையைத் தேவயானை** எனத் தமிழ் நூல்கள் கூறும் இந்தச் சொல்லையே அருணகிரி நாதரும் தம் திருப்புகழில் **வேத குஞ்சரி** என அமைத்துள்ளார். இவ்வூஞ்சல் முழுதும் தெய்வ யானை எனவே இவள் விளிக்கப் பெறுகிறாள். தேவசேனா, தேவ யானை, தெய்வானை, தேவானை, திருமகள், சசிவல்வி, என்பன தெய்வானையின் வேறு திருப்பெயர்களாகும். தெய்வயானை முருகனின் கிரியா சக்தியாவாள்.

## வள்ளி—தெய்வானை

முருகப் பெருமானின் இருமனைவியர்களான வள்ளி, தெய் வானை ஆகிய இருவர் புகழ்பாடி ஊஞ்சலாட்டத்திற்கு அழைக்

கின்றார் ஆசிரியர். ஒருத்தி மலையரசனுக்கு (நகபதி) மகளாகத் தோன்றியதையும் மற்றவள் மகபதிக்கு (இந்திரன்) மகளாகத் தோன்றியதையும் விளக்கிக் காட்டிப் பின்வருமாறு அக்கவிஞர் பாடலை அமைக்கின்றார்.

நகபதிக்குப் புதல்வியென வந்து தோன்றி
ஞாலமெல்லாம் புரந்தருளு மங்கை பாலன்
செகபதியாய் வந்தகும ரேசன் மேவுஞ்
சிந்தைமகிழ் மாமயிலே தேனே! மானே!
ககனபதி மேவிமிக மகிழ்ச்சி கொண்ட
கார்மேக வண்ணனுக்குங் ககனம் வாழு
மகபதிக்கு நன்மகளீர் ஆடி ரூஞ்சல்
வள்ளிதெய்வ யானைமின்னே ஆடி ரூஞ்சல்

(பாடல்-7)

**ஊஞ்சலமைவு**

கொடிகள் உயர்ந்து காணப்படும் புதுமைமிகு கயிலாயத்தில் தோரணங்களால் அலங்கரிக்கப்பட்ட மண்டபத்தில் வேதம் ஓதுகின்றனர். மிக உயரமாக அமைந்திருக்கும் அரியணை பொற்பீடமாய் அமைந்துள்ள அழகான மணிகளுடன் கூடிய ஊஞ்சலில் இவ்விருவரும் ஏறி அமர்ந்திருக்கின்றனர். அங்கு இரத்தினத்தால் சரங்கள் தொங்கவிட்டுப் புதிதாக நெய்யப்பட்ட பீதாம்பரத்தை மேலே விதானமாகக் கட்டி அழகுடன் அமைந்திருக்கும் அந்த ஊசலில் ஆடுவீராக என்று இருவரும் அழைக்கப் படுகின்றனர்.

ஊஞ்சலின் அமைப்பினை மற்றொரு பாடல் காட்டுகின்றது செம்மையான பவளத்தால் நெடிய தூண்கள் போன்று ஊஞ்சலின் கால்கள் அமைக்கப்பட்டன. சிறந்த தன்மையுடைய வயிடூரியத்தால் விட்டம் பூட்டினர். அழகிய பொன்னும் மணியும் சேர்த்தமைக்கப்பட்ட சங்கிலியால் வடம் அமைத்தனர். கிடைத்தற்கருமையான மரகதத்தால் பலகையை உருவாக்கினர். உம்பர்களும் புகழ்கின்ற அளவுக்குச் சிறப்புப்பெற்ற விசுவகர்மா என்னும் தெய்வத் தச்சன் இந்த ஊஞ்சலைச் செய்தான் என்று குறிக்கப் படுகின்றது.

அந்த ஊஞ்சலில் ஆடும் வள்ளி தெய்வானையின் இயல்புகளை ஆசிரியர் ஆங்காங்கே பல பாடல்களின் வழிச் சுட்டிச்

செல்கின்றார். வேதியர்களும், எப்போதும் தவமிருக்கும் இயல்புடையோரும், இவர்களது ஊஞ்சலைப் பற்றிச் சிறப்பாகக் கூறி இவ்விருவர்தம் புகழ் பரப்புகின்றனர். அவர்கள் இருவரும், தொல்லுலகில் உள்ள தொண்டரெல்லாம் தொழுது போற்றும் அளவு இறைநிலை பெற்றதாகக் காட்டப்படுகின்றனர்.

பங்கையாச னத்திலிருந்து வாகை பூத்த
 பகவானு மகவானும் பாவை யேழும்
அங்கையிலே அமைத்தசன மாகக் கொண்ட
 அகத்தியரோ டெழுமுனிவர் ஆசி கூறச்
செங்கையிரு மூன்றுடைய குகவேள் நாளும்
 சிந்தைமகிழ்ந் தேமருவும் தேவி யாரும்
மங்கையர்க்கெல் லாமரசே யாடி ரூஞ்சல்
 வள்ளிதெய்வ யானைமின்னே ஆடீ ரூஞ்சல்

(பாடல்—3)

என்று அவர்தம் சிறப்புகள் தெளிவாகக் காட்டப்படுகின்றன. இந்தப் பாடலின் **செங்கை யிரு மூன்றுடைய குகவேள்** என்று சுட்டப்படுவது மிகவும் அழகாகக் காணப்படுகின்றது. ஒவ்வொரு புறமும் உள்ள ஆறு கரங்களாலும் இருதேவியரை மருவும் முருகன் என்பதைத்தான் ஆசிரியர் இங்ஙனம் காட்டுகின்றார்.

## பலர் புரியும் தொண்டு

இவர்கள் ஊஞ்சலாடுகையில் பலரும், பலவகைகளில் தொண்டு புரிந்து, துணைசெய்து அமைகின்றனர். அருக்கனும், இமவானும் (இமயமலை அரசன்) தீபம் காட்டுகின்றனர். தேவர்கள் எல்லாம் முன்னம் விதித்தபடியே இவர்களுக்கு மலர் சூட்டுகின்றனர். கற்பகத்தரு உலவும் அயிராணி இவர்களுக்குத் திலகம் தீட்டுகின்றாள். தாமரையில் இருக்கும் இலக்குமி யானவள் அணிகள் பூட்டுகின்றாள். நாரதர் வீணை மீட்டுகின்றார். அழகிலே மிகுந்த ஊர்வசி வடந்தொட்டு ஆட்டுகின்றாள். இப்படியெல்லாம் தனது கற்பனையை ஓடவிட்டு அவ்விருவரையும் ஊஞ்சலாட்டுகின்றார் கவிஞர்.

கன்னலிளங் கமுகுமிளங் கதலி நாட்டிக்
கைகமணி மண்டபத்தில் கமலந் தூக்கி
மின்னணைய படகுமேற் கட்டிச் சேர்த்து
விரைமலரால் அலங்கரித்து

என்று தொடர்ந்து சிறப்புப் பேசி ஆட்டப்படுகின்றனர் வள்ளியும் தெய்வயானையும்.

தனி ஒருவர்க்கோ, இறைவன் இறைவி இவருள் ஒருவர்க்கோ ஊஞ்சல் அமையாமல் இறைவியர் இருவர்க்கு அமைந்த ஊஞ்சல் இது ஒன்றே என்பது இவ்வூஞ்சலின் சிறப்பாக அமைகின்றது. இதுவரை கிடைத்துள்ள ஊஞ்சல் இலக்கியங்கள் இருவருக்கு இணையாகப் படைக்கப்பட்ட நூல் இருப்பதாகத் தெரியவில்லை. மண ஊஞ்சல்களில் ஆணும் பெண்ணும் போற்றப்படுவது இதனின்றும் மாறுபட்டது என்பதும் இங்குக் கருதத் தக்கது.

## நூல்

1. செம்பவளத் தால்நெடிய தூண்கள் நாட்டிச்
சி(றந்)தவயி டூரியத்தால் விட்டம் பூட்டி
அம்பொண்மணிச் சங்கிலியால் கயிறு கோர்த்து
அரியபசு மரகதத்தால் பலகை சேர்த்து
உம்பர்புகழ் விசுவகர்மன் விதியின் மார்க்கம்
உற்பவித்த ரத்(தி)னமணி ஊஞ்சல் மீது
வம்பிலகு தனமயிலே ஆடி ரூஞ்சல்
வள்ளிதெய்வ யானைமின்னே ஆடீ ரூஞ்சல் 129

2. துசம்பெருகு நவகயிலா சத்தில் வந்தே
தொசம்பிலகு மண்டபத்தில் சுருதி கூற
உசந்திடுசிம் மாசனம்பொற்பீட மீதே
ஓங்கியசிங் காரமணி ஊஞ்சல் மேவி
இசைந்திடும்பீ தாம்பரமேற் கட்டிச் சேர்த்து
இலங்குநவ ரத்(தி)னத்தால் சரங்கள் நாட்டி
வசனமணி மாதரசே ஆடி ரூஞ்சல்
வள்ளிதெய்வ யானைமின்னே ஆடீ ரூஞ்சல் 130

---

1. உம்பர் — தேவர்
விசுவகர்மன் — தேவதச்சன்
வம்பு — கச்சு, வாசனை

2. துசம் — கொடி
தொசம் — தோரணம்
உசந்திடு—உயர்ந்திடு

3. பங்கையா சனத்திலிருந் துவகை பூத்த
பகவானு மகவானும் பாவை யேழும்
அங்கையிலே அமைத்தசன மாகக் கொண்ட
அகத்தியரோ டெழுமுனிவர் ஆசி கூறச்
செங்கையிரு மூன்றுடைய குகவேள் நாளும்
சிந்தைமகிழ்ந் தேமருவுந் தேவி யாரு
மங்கையர்க்கெல் லாமர(சே) (யா)டீ ரூஞ்சல்
வள்ளிதெய்வ யானைமின்னே ஆடீ ரூஞ்சல் 131

4. அருக்கனிம வானிருவர் தீபங் காட்ட
அமரரெல்லாம் விதிப்படியே மலர்கள் சூட்ட
தருக்குலவு மயிராணி திலகந் தீட்ட
தாமரைப்பொன் மாதுபணி தமையே பூட்ட
இருக்குன்றா நாரதரும் வீணை மீட்ட
எழிலரம்பை யுருவசியும் வடந்தொட் டாட்ட
மருக்குலவுங் கோதையரே ஆடீ ரூஞ்சல்
வள்ளிதெய்வ யானைமின்னே யாடீ ரூஞ்சல் 132

5. கன்னலிளங் கமுகுமிளங் கதலி நாட்டிக்
கனகமணி மண்டபத்தில் கமலந் தூக்கி
மின்னனைய படகுமேற் கட்டிச் சேர்த்து
விரைமலரால் அலங்கரித்து விந்தை யாகப்
பின்னலிட்ட கருங்குழலார் கவரி வீசிப்
பேருலகைப் புரந்தகும ரேசன் வேட்ட
மன்னனும்வந் திருந்துதொழ ஆடீ ரூஞ்சல்
வள்ளிதெய்வ யானைமின்னே ஆடீ ரூஞ்சல் 133

---

3. பங்கையாசனம் — தாமரைமலர் இருக்கை
பகவான் — திருமால்
மகவான் — இந்திரன்
எழுபாவை — சப்த கன்னியர்

4. அருக்கன் — சூரியன்
இமவான் — இமயமலை அரசன்
தரு — கற்பகத்தரு
அயிராணி — இந்திராணி
தாமரைப்பொன்மாது — இலக்குமி

5. கன்னல் — கரும்பு
இளங்கதலி — வாழைக் கன்று

6. வேதியரு மாதவருஞ் சூதன் தானும்
வேதாந்த வாகமங்கள் வியப்பாய்க் கூற
சோதிமணி (சப்ரமஞ்ச) மீதில் மேவி
தொல்லுலகில் தொண்டரெல்லாம் தொழுது போற்ற
ஆதிசிவ சம்புலிங்க மிடமே வாழும்
அகிலாண்ட அம்மனுக்கும் அழகார் கங்கை
மாதினுக்கு மருமகளே ஆடீ ரூஞ்சல்
வள்ளிதெய்வ யானைமின்னே ஆடீ ரூஞ்சல் 134

7. நகபதிக்குப் புதல்வியென வந்து தோன்றி
ஞாலமெலாம் புரந்தருளு மங்கை பாலன்
செகபதியாய் வந்தகும ரேசன் மேவும்
சிந்தைமகிழ் மாமயிலே தேனே மானே
ககனபதி மேவிமிக †மகிழ்ச்சி கொண்ட
கார்மேக வண்ணனுக்குங் ககனம் வாழும்
மகபதிக்கு நன்மகளீர் ஆடீ ரூஞ்சல்
வள்ளிதெய்வ யானைமின்னே ஆடீ ரூஞ்சல் 135

---

படகு — விதானம், மேல்முகடு
விரை — மணம்

6. சப்ரமஞ்சம் — மேற்கட்டியுள்ள சிங்காரக் கட்டில்
அகிலாண்டம்மன் — பார்வதியம்மை
கங்கையம்மன் — கங்கை தேவி

7. நகபதி — மலைராசன்
ஞாலம் புரக்கும் மங்கை — உலகம் காக்கும் பார்வதி
ககனம் — வானம்
ககனபதி — இந்திரன் ஊர்
மகபதி — இந்திரன்
† மகிட்சி என்பது சுவடி பாடம்

# 10. திருமண ஊஞ்சல்

நாம் இங்குப் பதிப்பிற்கு எடுத்துக் கொண்ட ஊஞ்சல் இலக்கியங்களுள் இது ஒரு தனிவகையினது. மற்ற ஊஞ்சல் இலக்கியங்கள் இறைவனையோ, தலைவனையோ பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு கற்பனையில் ஊஞ்சல் அமைத்துப் புலவனால் பாடப்படுவது. ஆனால் இந்த மண ஊஞ்சல் அவ்வாறின்றி பாட்டுடைத்தலைவர்கள் வாழ்ந்த காலத்தில் அவர்களை முன்னிருத்தியே—நேருக்கு நேர்—சமகாலத்தில் பாடப்பட்டது இவ்வூஞ்சல். அதனால் தான் நாம் முன்னர் கண்ட ஊஞ்சல் அமைப்பு, ஊஞ்சலாட்டம், பலர் அவர்களுக்குச் செய்யும் பணிவிடைகள் போன்றன குறைந்து செய்தி சொல்லும் பாங்கிலேயே மிகுதியும் இவ்வூஞ்சல் செல்கின்றது.

ஒரே மேடையில் நடைபெற்ற மூன்று திருமணங்களைப் புலவன் எதிரிற்கண்டு இவ்வூஞ்சலைப் படைத்திருக்க வேண்டும். இந்த ஊஞ்சல் கொண்டு அறியப் பெறும் மூன்று மணமக்கள் பின்வருமாறு :

| | மணமகன் | | மணமகள் |
|---|---|---|---|
| 1. | குளத்தூரய்யன் | — | சீதை |
| 2. | வீரமணி | — | கல்யாணி |
| 3. | பரசுராமன் | — | பொன்னாள் |

இந்நூலின் வழி அறிகின்ற செய்தியை ஒரு கோடிட்டு முறையில் காண்பது தெளிவிற்கு வழி வகுக்கின்றது:




### முதல் மணமக்கள்

வெங்கடேசுரன் என்பவரின் மகன் **குளத்தூரய்யன்** என்பவன் ராமசுப்பன் என்பவரின் மகளான **சீதை**யை மணக்கின்றான். இவர்கள் ஊர் பற்றிய செய்தி இடம் பெறவில்லை.

### இரண்டாம் மணமக்கள்

தென்கரந்தை என்னும் ஊரினைச் சார்ந்த சங்கர நாராயணன் என்பவரின் மகன் **வீரமணி** என்பவன் **கல்யாணி** என்பவளை மணக்கின்றான். கல்யாணியின் தந்தை ஊர் குறித்த செய்தி நூலில் இல்லை.

### மூன்றாம் மணமக்கள்

சினேகபுரி என்ற ஊரில் வாழ்கின்ற இரண்டு குடும்பங்களுக்குள்ளே திருமணம் நடைபெற்று இருக்கின்றது. இன்றைய நிலையிலும் பல கிராமங்களில் அந்தக் கிராமத்துப் பெண் அங்குள்ள ஆண்மகன் ஒருவனால் மணக்கப்படுவதைக் காண்கிறோம். குளத்தூரய்யன் என்பவனின் மகன் **பரசுராம**னுக்கும், முத்துசாமி என்பவரின் பேரனும், ராஜேந்திரன் என்பவரின் மகளுமான **பொன்னா**ளுக்கும் திருமணம் நடைபெற்றுள்ளது.

இவற்றுள் முதல் தம்பதியருக்கு முதலிரண்டு பாடல்களும், அடுத்த மூன்று பாடல்கள் வீரமணி தம்பதியருக்கும், மற்ற ஏழு பாடல்கள் பரசுராமன்—பொன்னாள் இருவருக்குமாக அமைக்கப்

பட்டுள்ளன. இந்த ஊஞ்சலின் இறுதியில் ஒரு பாடல் எந்த மணமக்களையும் குறிப்பிடாமல் பொதுநிலையில் வாழ்த்துவது போன்று அமைந்துள்ளது. அப்பாடல் இந்த ஊஞ்சலை சார்ந்ததா என்பதை உறுதிசெய்ய இயலவில்லை

இங்குச் சுட்டப்படுகின்ற குளத்தூரய்யன் இருவரும் ஒருவரல்லர். முதல்நிலையில் வரும் குளத்தூரய்யன் **மணமகனாக** வர, பின் மூன்றாம் நிலையில் வரும் குளத்தூரய்யன் மணமகனின் **தந்தையாக** வருகின்றார். முன்னவர் எப்பகுதியைச் சார்ந்தவர் என்று குறிக்கப்படவில்லை. பின்னவர் சினேகபுரியைச் சார்ந்தவர் என்பது சுட்டப்படுகின்றது.

இந்த ஊஞ்சலில் நாம் காப்புநிலையில் அமைந்த இரண்டு பாடல்களைக் காண்கிறோம். அப்பாடல்கள் இரண்டும் (2, 5) வெவ்வேறு இயல்பு பெற்றுள்ளன.

மங்கையர்களால் பெரிதும் விரும்பப்படுகின்ற அழகுமிக்கவனாக இருந்தான் வேங்கிடேசுரன் என்பவரின் மகன். அழகிலும், சிங்கம் போன்று கம்பீராமான தோற்றத்துடனும் காணப்படுகின்ற குளத்தூரய்யன் என்பவனே அவன். அவனுக்கும் ராமசுப்பயோகன் என்பவரது செல்வியும், இனிய மொழியையுடையவளுமான சீதை என்பவளுக்கும் பாடப்படுகின்ற இந்த ஊஞ்சலுக்கு, கந்தனின் முன்னர் தோன்றிய ஐங்கரனை காப்பிலே பாடுகின்றார் ஆசிரியர். இது காப்புப் பாடும் மரபுபற்றியே அமைக்கப்பட்டதாகத் தோன்றுகின்றது. காப்பாக இப்பாடல் அமைந்தது என்பதைவிட செய்தியையே பாடல் உருவிலாக்கி இறுதி வரியை மட்டும் அக்காப்பு நிலைக்குக் கொண்டு சென்றிருக்கின்றது என்று கூறலாம்.

மங்கையர்க ளதிமோக மதன ரூபன்
வரும்வேங்க டேசுரன்தன் மதலை யானோன்
திங்கள்வத னஞ்சிறந்த புகழ்ச்சிங் கேறு
சிந்தைமகி ழுங்குளத்தூ ரய்யன் வேட்ட
இங்கிதஞ்சே ராமசுப்ப யோக னீன்ற
இனியமொழி சீதை(த)ன்மே லூஞ்சல் பாட
துங்கமிகுங் கந்தனுக்கு முன்னந் தோன்றும்
தொந்திவயி றைங்கரன்றாள் துணை காப்பாமே.

இரண்டாவதாகச் சுட்டப்படுகின்ற காப்புப் பாடல் பரசுராமன் — பொன்னாளை வாழ்த்திப் பாடும் வகையில் தொடங்கு

கின்றது. இதுவும் செய்தி அறிவிக்கும் அளவிலேயே தனது கருத்தை முழுமையாகச் செலவிடுகின்றது. உலகமே புகழும் வண்ணம் செல்வச் சிறப்பில் மிகுந்துள்ள ஊர் சினேகாபுரி என்பது. அவ்வூரில் வாழ்கின்ற குளத்தூரய்யன் புகழ்பெற்றவன்; அவனீன்ற செல்வன்தான் பரசுராமன். அவனுக்கு மனையாளாக வாய்க்கப் பெற்றிருக்கின்ற பொன்னாள் ராஜேந்திர பூபன் என்பானின் புதல்வி. இவ்விருவருக்கும் ஊஞ்சல் பாட **காசி விசுவேசர் விசாலாட்சி** ஈன்ற **கருத்த வினாயகன்** தாளைக் காப்புக்கு அழைக்கின்றார்.

இங்குக் காசி என்று குறிப்பிடப்படுவது தென்காசியாகும். இந்தக் கோயிலைப் பதினைந்தாம் நூற்றாண்டில் பராக்கிரம பாண்டியன் அமைத்து விசுவநாதரையும், விசாலாட்சியையும் பிரதிட்டை செய்தான். இங்கு விநாயகன் **கருத்த விநாயகன்** என்று நயம்படச் சுட்டப்பெறுகிறான். வடக்கே உள்ள காசியில் அமைந்திருக்குக்கும் தொண்டி விநாயகர் சிந்தாமணி, ஆகியவர்களின் வடிவம் செந்தூர வண்ணத்தா லமைந்தவை. மக்களின் கருத்தில் இருக்கும் விநாயகன் என்பதோடல்லாமல் இங்குக் கருங்கற் சிலை வடிவத்தில் கரிய நிறயத்தில் அமைந்திருப்பதால் **கருத்த விநாயகர்** என்று கூறியதாகவும் கொள்ளலாம். எனவே, இப்பதி உத்திர காசியன்று; தென்காசி எனலாம்.

இங்குப் பாடப்படும் மூன்று மணமக்களின் ஊஞ்சல்களில் இரண்டாவதாகப் பாடப்படுகின்ற வீரமணி கல்யாணிக்குக் காப்புப் பாடல் காணப்படவில்லை. பாடல் விடுபட்டிருக்கவும் வாய்ப்பில்லை. ஏனெனில் அதன்முன்னர் அமைந்த ஊஞ்சல் காப்பு (குளத்தூரய்யன்—சீதை) தனியே அமையாமல் இரண்டே பாடல்களில் காப்புடன் வாழ்த்தும் முடிவதைக் காண்கிறோம். ஆனால் இவ்விரண்டாம் மணமக்களின் தொடக்கப்பாடலே **ஆடீர் ஊஞ்சல்** என்ற ஊஞ்சல் மரபுப்படி செல்கின்றது.

முதல் மணமக்களை வாழ்த்த காப்பாகச் சுட்டப்பட்ட பாடலுடன் ஒரு பாடலே காணப்படுகின்றது.

வேதகுல சம்பன்ன ராக வாழும்
மிக்கதவ யோகனெனும் வியப்பா லைந்து
பூத(மெனும்) வரம்புகள்அ மைத்தான் வேதன்

வேங்கிடசுரன்; அவனது புதல்வனும், மருமகளும் அடுத்து.

ஏதமிலாத் தருமநிதி யாக வந்த
　　எங்கள்கு ளத்தூரய் யனிதாய் வேட்ட
சீதமதி வதனமின்னே ஆடீ ரூஞ்சல்
　　சீதைமட மாமயிலே ஆடீ ரூஞ்சல்

என்ற நிலையில் சுட்டப்பட்டுப் பாடல் முடிகின்றது.

அடுத்த இரண்டு பாடல்களும் தென்கரந்தை நாட்டின் சிறப்புக்கூறி, வளம்காட்டி மணமக்களின் முன்னோர் கூறி வாழ்த்தும் நிலையில் அமைகின்றது.

மேகத்தைச் சூழ்ந்து செழித்தோங்கும் சோலைகள்; கவி தாவிப் பலா சுவைக்கும் மரங்கள்; முத்துப்போன்று செம்மையான நெல்விளையும் வயல்கள்; இப்படியெல்லாம் வளங்கொழிக்கின்றது தென்கரந்தை. அது வாரிதிசூழும் உலகினிலும் அதிகமான வளம்பொருந்துகின்ற தென்கரந்தையாக மற்றுமொரு பாடலில் காட்டப்படுகின்றது. வீரமணியானவன் தருமநிதியாக வந்த அமுத சீலனாகவும், குபேரனாகவும், சங்கர நாராயணனின் மூத்தமகனாகவும் குறிக்கப்படுகிறான். அவன் வழக்குரைஞனாக இருந்திருக்கின்றான் என்பதை,

**வீரமணி வித்தாரன் நீதிபதி**

என்பதால் அறிகிறோம். அவள் பருவரதியாகவும், காரிணைய குழலாளாகவும் குறிக்கப்படுவதன்றி பிற செய்திகள் எதையும் அறிய இயலவில்லை வீரமணியின் தந்தை நாரியார் அதி மோகனாகவும், மதன ரூபனாகவும் சுட்டப்படுகின்றார்
அதையடுத்தப் பாடல்,

மேருவரை கயில......கல்களாக
　　விளங்கியநற் சதுர்வேதம் விட்ட மாகச்
சீருலவு வ...சதி எண்ணாக மங்கள்
　　சிறந்திடும்நல் வடமதாகத் திவ்விய மான
ஏருலவெண் பதிபுராணம் பங்கை யாக
　　இந்திராணி உருவசியும் வடந்தொட் டாட்ட
பேருலவு சிவசயில நாதர் வேட்ட
　　பேதைகலி யாணிமின்னே ஆடீ ரூஞ்சல்

என்றமைகின்றது.

கல்யாணி—வீரமணி மணமக்களின் ஊஞ்சல் அமைப்பைச் சுட்டி நிற்கின்றது இதன் அடுத்தப் பாடல். ஊஞ்சலின் இரண்டு புறமும் அமைகின்ற கால்கள் பவளத்தாலே உண்டாக்கப்பட்டிருக்கின்றன. அழகுமிகுந்த மாணிக்கத்தால் இரண்டு கால்களையும் இணைக்கின்ற விட்டம் அமைத்தனர். மேலும் அதில் வயிரக் கொடுங்கை சாய்த்து, பொன்னாலான பலகையில் முத்துவடங்களைப் பூட்டி அமைத்துள்ளனர். அந்த ஊசலில் பரசுராமனும் பொன்னாளும் அமர்ந்திருக்கின்றனர். பல பெண்கள் கூடி ஆட்டி மகிழ்வித்தும், கவரி வீசியும் இன்புறுத்துகின்றனர் மணமக்களை.

தென்பாண்டி நாட்டில் அமைந்திருக்கின்ற இந்தச் சினேகபுரி என்னும் ஊர் பனைமரங்களால் சூழப்பட்டிருந்தது. அந்தப் பனங்கள்ளின் வாசம் எழுகாதம் வீசுமாம். உறவுமக்கள் பலருக்கும் உதவிசெய்யும் மனப்பாங்கு கொண்ட பொன்னாளின் தாத்தா முத்துசுவாமி இங்கு வேதியராகக் குறிக்கப்படுகின்றார். முத்துசுவாமியின் பேத்தியை மணந்த இப்பரசுராமன் அக்குழலணங்குக் காரிகையுடன் ஆடுமாறு போற்றப்படுகின்றான்.

இங்குக் காட்டப்பெறும் மூன்று இணை மக்களும் பார்ப்பணர் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் போலும் குளத்தூரய்யன் என **அய்யன்** என்றே இருவர்—(ஒருவர் மணமகன், மற்றவர் வேறு மணமகனின் தந்தை) சுட்டப்படுகின்றனர். மேலும் இராஜேந்திர பூபன் என்பவனின் தந்தை, மணமகளின் தாத்தா முத்துசுவாமி **வேதன் முத்துச்சுவாமி** என்று குறிக்கப்படுகின்றார். இதிலமைந்திருக்கின்ற சீதை,கல்யாணி, பரசுராமன்,பொன்னாள் என்பன பார்ப்பணர் இன்றைய நிலையிலும் வைத்துவழங்குகின்ற பெயர்களாகளாகக் காணப்படுகின்றன. வீரமணி என்ற பெயர் பார்ப்பனரிடம் இன்று வழங்கப்படுவதாகத் தெரியவில்லை. அக்காலத்தில் இப்படி வழங்கப்பட்டதா என்பது பற்றியும் புலப்படவில்லை. ஒருவேளை இது கலப்புத் திருமணமாக இருக்கலாமோ என்றும் எண்ணத் தோன்றுகின்றது.

இந்த ஊஞ்சல் கிழக்கிந்திய கம்பெனி ஆட்சி காலத்தில் பாடப்பட்டதால் அந்தக் கம்பனியாரும் (Company) வாழ்த்தப் படுகின்றனர். அப்போது வட்டாட்சியராக (Thasildor) **ராமசுப்பர்** என்பர் இருந்த செய்தியும் இதன்வழி புலப்படு கின்றது. எனவே இது கிழக்கிந்திய கம்பெனி ஆட்சிகாலத்தில் 1857க்கு முன்னர் பாடப்பட்டது என்பது தெரிகிறது. இந்தச் சுவடியின் குறிப்பில் இது 1857 ஆம் ஆண்டு எழுதப்பட்டதாகக் குறிப்புக் காணப்படுகின்றது. எனவே இந்த ஊஞ்சல் மிகப்பிற் காலத்தில் பாடப்பட்டது என்பதை உணர முடிகின்றது.

## நூல்

1. மங்கையர்க ளதிமோக மதன ரூபன்
வரும்வேங்க டேசுரன்தன் மதலை யானோன்
திங்கள்வத னஞ்சிறந்த* புகழ்ச்சிங் கேறு
சிந்தைமகி ழுங்குளத்தூ ரய்யன் வேட்ட
இங்கிதஞ்சே ராமசுப்ப யோக னீன்ற
இனியமொழி சீதைதன்மே லூஞ்சல் பாட
துங்கமிகுங் கந்தனுக்கு முன்னந் தோன்றுந்
தொந்திவயி றைங்கரன்றாள் துணைகாப் பாமே 136

2. வேதகுல சம்பன்ன ராக வாழும்
மிக்கதவ யோகனெனும் வியப்பா லைந்து
பூதமெனும் வரம்புகள்அ மைத்தான் வேதன்
பூபன்வேங்கி டேசுரன்தன் புதல்வ னானோன்
ஏதமிலாத் தருமநிதி யாக வந்த
எங்கள்குளத் தூரய்ய னினிதாய் வேட்ட
சீதமதி வதனமின்னே ஆடீ ரூஞ்சல்
சீதைமட மாமயிலே ஆடீ ரூஞ்சல் 137

---

1. மதன ரூபன்—மன்மதன்போன்ற அழகிய வடிவினன்
மதலை—குழந்தை
வதனம்—முகம்
குளத்தூர் அய்யன்—வேங்கடேசுரன் மகன்
மணமகன் குளத்தூர் அய்யன்; மணமகள் சீதை
துங்கம்—தூய்மை
*புகட்சி என்பது சுவடி பாடம்

2. சம்பன்னன்—மறைகுல செல்வன்
ஏதமிலா—குற்றமில்லாத

3. கருமுகில்கள் தவழ்ந்துலவு பொழில்கள் சூழக்
கவிதாவிப் பலவினறைக் கழனி சூழ
வருகனலின் முத்துவிளைந் தொளிக ளோங்கும்
வளந்திகழ்தென் கரந்தைநகர் வாச ரானோர்
தருமநிதி யாகவந்த அமுத சீலன்
சதுர்வேதன் வீரமணி தனதன் வேட்ட
பருவரதி யானமயி லாடி ரூஞ்சல்
பாவைகலி யாணிமின்னே ஆடீ ரூஞ்சல் 138

4. வாரிதிசூ ழுலகினிலு மதிக மான
வளம்பொருந்தும் தென்கரந்தை வாச னானார்
நாரியற்க ளதிமோக மதன ரூபன்
நலந்திகழும் சங்கரநா றாய ணேந்திரன்
நேரியில்பாய் வரும்வீர மணிவித் தாரன்
நீதிபதிக்கு மங்கலநாண் மாலை சூடக்
காரிணைய குழலணங்கே ஆடீ ரூஞ்சல்
கலியாண வல்லிமின்னே ஆடீ ரூஞ்சல் 139

5. தேசமெலாம் புகழ்சினேக புரியின் வாசன்
செல்வமிகும் பான்மைதிகழ் திவ்(விய)ய மான
தேசமுறும் புகழ்குளத்து ரய்ய னீன்ற
நீதனென வரும்பரசு (ராம)ன் வேட்ட
வாசனைசே ராசேந்(தி)ர பூப னீன்ற
மங்கைபொன்னாள் மின்னரசிக் கூஞ்சல் பாட
காசிவிசு வேசர்விசா லாட்சி யீன்ற
கருத்தவினா யகன்துணைத்தாள் காப்ப தாமே 140

---

3. கவி—குரங்கு
கனல்—கன்னல்—கரும்பு
தென்கரந்தை நகர்—தென்பாண்டி நாட்டு கரந்தை என்னும் ஊர்
தனதன்—குபேரன்
கல்யாணி—தலைவியின் பெயர்
மணமகன் வீரமணி; மணமகள் கல்யாணி;
4. சங்கரநாராயணன்—வீரமணியின் தந்தை
5. குளத்தூரய்யன்—மணமகன் பரசுராமனின் தந்தை
பொன்னாள்—இராஜேந்திர பூபனின் மகள்; மணமகள்.

6. அற்புதச்செம் பவளநெடுங் கரங்கள் நாட்டி
அணிபெறுமா ணிக்கமதால் விட்டங் கூட்டிப்
பொற்புமிகுந் திடவயிரக் கொடுங்கை சாய்த்துப்
பொற்பலகை மீதில்முத்து வடங்கள் பூட்டி
விற்புருவ மடவார்கள் கவரி வீச
மேதினியெ லாம்புகழு மூஞ்ச லேறி
சற்புருட னெனும்பரசு ராமன் வேட்ட
தையல்பொன்னாள் மின்னரசே யாடீ ரூஞ்சல் 141

7. பனசபல வாசமெழு காதம் வீசும்
பகரரிய சினேகபுரிப் பதியில் வாழும்
கனசனங்கள் பரிபால னாக நாளும்
கருணைபுரி வேதன்முத்து சுவாமி யீன்ற
மனசினிய ராசேந்திர தீர வேட்கும்
மருகனென வரும்பரசு ராமன் வேட்ட
வனசமலர் வதனமின்னே ஆடீ ரூஞ்சல்
பொன்னான மாமயிலே ஆடீ ரூஞ்சல் 142

8. வருக்கைகத லிக்கனியின் மதுக்கள் மூலம்
வளம் பொருந்துஞ் சினேகபுரி வாச றானார்
தருக்கைநிக றாதலியசற் புருட னென்று
சதுர்வேத முழங்குமுத்து சாமி வேட்டு
திருக்கருணை மிகவிளங்கு சுப்ப யோகன்
சிறந்ததுணை ராசேந்திர தீர னீன்ற
மருக்கமழ் பூவணங்கே ஆடீ ரூஞ்சல்
மங்கைபொன்னா ளானமின்னே யாடீ ரூஞ்சல் 143

---

6. பனசபலா—முட்பலா
காதம்—தூரம் குறிக்கும் அளவு

7. முத்துசாமி—மணமகளின் பாட்டன்
வனசமலர்—தாமரை மலர்.

8. தரு—கற்பகவிருட்சம்
வருக்கை—பலாவில் ஒரு வகை

9 தண்டரளம் விளைசாலி வயல்கள் சூழுந்
தண்பனைசூ ழுங்கமலத் தடங்கள் சூழும்
விண்டுரைசெய் தமிழ்வாணர் மிகுந்து சூழும்
விளங்குசதுர் வேதன்கவி மேன்மை சூழும்
எண்டிசையும் புகழ்சினேக புரியில் வாசன்
எங்கள்குளத் தூரய்ய னீன்ற சீலன்
கொண்டல்நிகர் வரும்பரசு ராமன் வேட்ட
கோதைபொன்னா ளானமின்னே ஆடீ ரூஞ்சல். 144

10. சந்தனா ச(ல)மருவுந் தாம்பிர பருணி
தானிகருங் கடணைநதி சயில பாதம்
வந்தனஞ்செய் தனுதினமு மகிமை யோங்கும்
வளவைகுளத் தூரய்யன் மதலை யான
சுந்தரஞ்சேர் புகழ்பரசு ராம தீர
சுமுகனுயர் மங்களநாண் மாலை சூட்டும்
கொந்தலருங் குழலணங்கே யாடீ ரூஞ்சல்
கோதைபொன்னு மாமயிலே ஆடீ ரூஞ்சல். 145

11. மேருவரை கயி(லாயம் கால்)க ளாக
விளங்கியநற் சதுர்வேதம் விட்ட மாகச்
சீருலவு விஞ்சதியெண் ணாக மங்கள்
சிறந்திடுநல் வடமதாகத் திவ்விய மான
ஏருலவெண் பதிபுராணம் பலகை யாக
இந்திராணி யுருவசியும் வடந்தொட் டாட்ட
பேருலவு சிவசயில நாதர் வேட்ட
பேதைகலி யாணிமின்னே ஆடீ ரூஞ்சல். 146

---

9. சாலி—நெல்
பணை—பண்ணை
கமலத்தடம்—தாமரைக்குளம்
சதுர்வேதன் கவி—வேதம்

10. கடணைநதி—தாமிரபருணியின் கிளைநதி, கடனாநதி

11. கர்ணிகர்—கர்ணம், கணக்குப் பிள்ளை
கும்பினியார்—கிழக்கிந்திய கம்பெனி (East India Company)
தாசில்—வட்டாட்சியர், தாசில்தார் (Thasildar)

12. பூதலமெம் லாம்வாழி அமரர் வாழி
புகன்மறையோர் வாழிதமிழ்ப் புலவோர் வாழி
நீதமுறுங் கும்பினியார் வாழி தாசில்
நிறைராம ராயர்கர் ணீகர் வாழி
வேதமுணர் மால்முத்து சுவாமி வாழி
மிகுராம சுப்பயரா சேந்திரன் வாழி
மாதவஞ்செய் சீதைகலி யாணி பொன்னாள்
மகிழ்ந்தாடு பொன்னூசல் வாழி தானே. 147

---

12. வரை—மலை
சதுர்—நான்கு
உருவசி—ஊர்வசி

## விளக்கம்

**அயிராணி**

இந்திராணியே அயிராணி என்று குறிக்கப்படுகின்றாள். இவள் இந்திரனின் மனைவி. பாற்கடலில் அமுதத்துடன் தோன்றியவள். இந்திரனைப் போன்று வச்சிரம், சூலம், கதை முதலானவற்றைத் தரித்து, யானை மீது ஊர்ந்துவரும் சக்தி இவளுக்கு உண்டு. இளமையாக எப்போதும் இருக்கின்ற எழுமாதர்களில் இந்திராணியும் ஒருத்தி. இந்திரனாகப் பட்டம் பெற்று வருபவர்கள் இவளைக் காதலியாகக் கொள்வது மரபு. சயந்தன் இவ்விந்திராணியின் மகன். பாண்டவராகப் பிறக்கும் இந்திரன் பொருட்டு துருபாதன் யாகத்தில் துரௌபதியாகப் பிறந்தவள். நகுஷன் இந்திரபதம் பெற்றுத் தன்னைப் புணரவர அவனை நோக்கி நீ சத்த இருடிகள் சுமக்கும் பல்லக்கில் என்னிடம் வரின் உடன்படுவேன் என்று மறுத்தவள் என்று, பல்வேறு கதைகள் இவள் தொடர்பாகக் குறிக்கப்படுகின்றன.

**ஆதிநாதன்**

ஆழ்வார் திருநகரி ஆலயத்துறையும் இறைவன் ஆதிநாதன் எனப்படுகின்றார். இவர் ஆதிநாதன், ஆதிபிரான், ஆதிமால் என்றெல்லாம் இவ்வூஞ்சலில் குறிக்கப்படுகின்றார். இவரை நம்மாழ்வாரும் பிறரும், பொலிந்துநின்றான், பொலிந்து நின்ற பிரான், என்று அவரது நின்றகோலத்தைப் போற்றிப் புகழ்கின்றனர்.

**ஆழிப்படையான்**

ஆழி—சக்கரம்; சக்கரத்தை (படை—ஆயுதம்) ஆயுதமாக உடையவன். சக்கராயுதன்; திருமால்.

**உடையநங்கை**

ஆழ்வார்களில் எல்லாம் சிறப்பித்துப் போற்றப்படும் நம்மாழ்வாரின் தாய் இந்த உடையநங்கை. இவரது கணவர் காரி

என்பவர். இவள் ஈன்ற குஞ்சரம் நம்மாழ்வார் என்பதை,

'நங்கையீன்ற குஞ்சரம்'

என்ற தொடர் விளங்குகின்றது.

**எதிராசன்**

11ஆம் நூற்றாண்டில் தோன்றிய வைணவ சமய ஆசாரிய புருஷராகிய ஸ்ரீமத் ராமாநுஜரே எதிராசர் ஆவார். இவர் திருப்பெரும்பூதூரில் அவதரித்து வைணவ சித்தாந்தத்தையும், ஆழ்வார்கள் பாசுரங்களையும் பரப்பியவர். நாலாயிரத்திவ்வியப் பிரபந்தத்தைச் சேர்ந்த திருவரங்கத்தமுதனார் அருளிய இராமாநுச நூற்றந்தாதி எதிராசரைப் பற்றிய நூலாகும்.

**கடணைநதி**

கடணைநதி பொதியமலையில் தோன்றி முக்கூடல் என்னும் இடத்தில் தாமிர வருணியில் கலக்கும் உபநதியாகும்.

**கலைஞானம்**

கலைஞானம் கலைக்கியானம் எனப்படும். கலைஞானம் நாற்பத்துநான்கு என்பர். அக்கிர இலக்கணம், இலிகதம், கணிதம் வேதம், புராணம், வியாகரணம், நீதிசாஸ்திரம், சோதிட சாஸ்திரம். தருமசாஸ்திரம் யோக சாஸ்திரம், மந்திரம், சகுனம், சிற்பம், மருத்துவம், உருவம் இதிகாசம், காவியம், அலங்காரம் மதுரபாடனம், நாடகம், நிருத்தம், சுத்தபிரமம், வீணை, வேணு, மிருதங்கம், தாளம், அத்திரபரிச்சை, கனகபரிச்சை, இரதப் பரிச்சை, கஜபரிச்சை, அசுவபரிச்சை, இரத்தினப்பரிச்சை, பூபரிச்சை, சங்கிர, இலக்கணம், மல்யுத்தம். அகருஷ்ணம், உச்சாடணம், வித்துவேஷணம், மதனசாஸ்திரம், மோகனம் வசீகரணம், இரசவாதம், தாதுவாதம், காருடம், நட்டம், முட்டி, ஆகாய பிரயோகம், காவியக மனம், பரகாஸ்பிரவேசம், அதிரிச்சியம், இந்திரஜாலம், மகேந்திரஜாலம், அக்னிதம்பம், வாக்குத்தம்பம், சுக்கிலத்தம்பம், கன்னத்தம்பம், கட்சத்தம்பம், அவத்தை, பிரயோகம் ஆவன.

**காரியார்**

இவர் திருக்குருகூரில் இருந்த வேளாளக் குடும்பத்தைச் சார்ந்தவர். இவரது தந்தை போர்க்காரியார். இவருக்குக் காரி

முதலியார் என்பது பெயர். இவர் ஆழ்வார் பிரான் நம்மாழ்வாரின் தந்தையார். இவரது மனையாள் உடையநங்கை.

**கும்பினியார்**

கம்பெனி (company) என்ற ஆங்கிலச் சொல்லைத் தமிழில் **கும்பினியார்** என்று அழைக்கின்றனர். இங்குத் திருமண ஊஞ்சலில் அந்தக் கும்பினியார் பற்றிய குறிப்பு வருகின்றது. ஆங்கிலக் கிழக்கிந்திய கம்பெனியை (English For India Company) இந்த ஊஞ்சல் இப்படிக் குறிக்கின்றது. கும்பினி—கும்பினியார் என்று வழங்குவதை கி. பி. 18, 19ஆம் நூற்றாண்டில் முகிழ்ந்த இலக்கியங்களில் காணலாம்.

இந்தக் கிழக்கிந்திய கம்பெனி ஆங்கில நாட்டின் அரசி எலிசபெத் இராணியிடம் அனுமதி பெற்று வாணிபம் நடத்துவதற்காக கி. பி. 1600 ஆம் ஆண்டு இந்தியாவிற்கு வந்தது. இவர்கள் இந்தியாவின் குழப்பம் உட்பூசல்கள் இவற்றைப் பயன்படுத்தி ஆட்சி செய்கின்ற நிலையைப்பெற்றுவிட்டனர். மதுரை, கோவை போன்ற இடங்கள் இவர்களின் தலைமை இடங்களாக அமைந்தன. அந்தக் கும்பினியரையும் இறுதியாக அமைந்த வாழ்த்துப் பாடலில் (திருமண ஊஞ்சல், பா 11) இந்த ஊஞ்சல் சுட்டிச் செல்கின்றது.

**குலசேகராழ்வார்**

திருவஞ்சைக் களத்தில் சேர அரச பரம்பரையில் தோன்றியவர் குலசேகராழ்வார் சேரகுலமும், வைணவகுலமும் தழைக்கப் பிறந்ததனால் இவர் 'குலசேகரர்' ஆனார் என்பர். வீரப்போர் புரிந்து வெற்றிபல கண்ட இவர் பின்னால் திருமால் அடியாரானார். பக்தி மேலீட்டால் பாசுரங்கள் பாடினார். இவர் இராமன் மீது பித்துக் கொண்டிருந்தார். வடமொழியும் தமிழ் மொழியும் நன்குணர்ந்தவர். வடமொழியில் **முகுந்தமாலை** என்னும் நூலையும், தமிழ் மொழியில் **பெருமாள்திருமொழி** என்னும் நூலையும் பாடினார். இது 105 இனிய பாசுரங்களின் தொகுப்பாகும். கவிதை நயமும் பக்திச் சிறப்பும் இவர் பாடல்களின் தனித்தன்மையை விளக்குகின்றன.

**கோகுலம்**

கோகுலம் என்பது பசுக்களின் கூட்டம் எனப் பொருள்படும். கிருஷ்ணன் ஆயர்பாடியில் வளர்ந்தபோது ஆநிரை மேய்த்த வரலாறு பாகவதத்தில் கூறப்பெற்றுள்ளது.

**கோளூர்**

கோளூர் திருக்கோளூர் என்று அழைக்கப்பெறும். இது திருநெல்வேலியிலிருந்து 23 கல் தொலைவில் இருக்கின்றது. ஆழ்வார் திருநகரியை அடுத்து, அதன் தென்கிழக்கில் ஒருகல் தொலைவில் உள்ளது. கோள்+ஊர்; கோளூர் என்று வழங்கப் பட்டதென்பர். இங்கு வீற்றிருக்கும் திருமால் வைத்த மாநிதி பெருமாள் என்றழைக்கப் படுகின்றார். இவ்வூரில் உறைந்திருக்கும் சிவன் சேரசோழபாண்டீச்சுரர் என்று அழைக்கப்படுகின்றார். மதுரகவியாழ்வார் பிறந்த ஊர் இதுவேயாகும்.

**சித்திரகவி**

ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் எனக் கவிகளை நான்கு வகையாகப் பிரிப்பர்.

ஆசு—நினைத்தமாத்திரம் பாடக்கூடியது.
மதுரம்—இனிமையான கவிதை.
சித்திரம்—தாமரை, தேர் நாகம், கோமூத்ரி திரிபங்கி, தேன் போன்ற உருவங்களில் (சித்திரங்களில்) அடங்கும்படி பாடப் பெறுவது

வித்தாரம்—சருக்கம், காண்டம் போன்ற பல பிரிவுகளை உள்ளடக்கி நூற்றுக்கணக்கில் பாடல்கள் அமைவதாகும்.
இங்குச் சடகோபர் சித்திரகவி என்று சுட்டப்பெறுகின்றார்.

**சித்து**

சித்து என்ற சொல்லுக்கு அறிவு என்ற பொருளை அறிஞர்கள் குறிக்கின்றனர். சித்து உடையவர்கள் சித்தர்கள். அந்தச் சித்தர்கள் அறிஞர், மேதை, பேரறிவாளர், நுண் அறிவினர், விஞ்ஞான, மெய்ஞ்ஞான அறிவுடையார் என்றெல்லாம் பலவாறு வழங்கப்படுவர். மறைத்து செய்யும் தந்திரச் செயல்களும் சித்து என்று மககள் வழக்கில் இடம்பெறுகின்றது. கலம்பகத்தின் 18 உறுப்புகளுள் **சித்து** என்பது ஒன்று.

வாதம், மருத்துவம், யோகம் ஞாமம், என்ற நான்கு நெறிகளும், அணிமா, லகிமா போன்ற எண்வகை ஆற்றல்களும் சித்துக்களாம். இவற்றைப் பெற்ற சித்தர்கள் **'பதினெண் சித்தர்கள்'** என்றழைக்கப் படுகின்றனர், ஆனால் இவ்வரையறையைச் கடந்தும் பலர் சித்தர் பட்டியலில் இடம்பெறுகின்றனர்,

**சிவசயிலம்**

சிவசயிலம் பாவநாசத்திற்கு மேற்கே நான்குகல் தொலைவில் உள்ளது. இதன் அருகாமையில் சுமார் ஒன்றரை கல் தொலைவில் தான் ஆழ்வார் குறிச்சி உள்ளது.

**சினேகாபுரி**

கல்யாண ஊஞ்சலில் இவ்வூர் வருகிறது. இது எங்குளது என்பது தெரியவில்லை. இவ்வூஞ்சலிவரும் செய்திகள் தென்பாண்டி நாட்டைச் சார்ந்ததால் இவ்வூரும் தென்பாண்டி நாட்டில் உள்ளதாக உணரலாம்.

**தாமிரபருணி**

ஆண்பொருநை நதி தாமிரபருணி என மருவி வழங்குகின்றது. நெல்லை மாவட்டத்தில் பொதிய மலையில் தோன்றிநெல்லை மாவட்டத்தில் திருச்செந்தூரருகே கடலில் கலக்கின்றது.

**திருமழிசையாழ்வார்**

தொண்டை நாட்டின் ஒரு பகுதியாகிய திருமழிசையில் பிறந்தவர். இவர் பக்திசாரர் என்றும் அழைக்கப்படுவார். பெற்றோரை இழந்த இவர் ஒரு தாழ்ந்த குலத்தவரால் எடுத்து வளர்க்கப்பட்டார். இவர் திருச்சந்த விருத்தம், நான்முகன். திருவந்தாதி இரண்டையும் பாடியருளினார். ஊஞ்சலில் திருமழிசையாழ்வார் என்பது **சீர்மழிசை ஆழ்வார்** என்று சுட்டப் பட்டிருக்கின்றது.

**தென்மல்லிகாற்சுனம்**

அர்ச்சுனம் என்பது மருதமரம். வடக்கே உள்ள அர்ச்சுன க்ஷேத்திரம் ஸ்ரீசயிலம் என்னும் திருப்பருப் பதமாகும். இதனைத் தலைமருது என்பார்கள். இடையே உள்ளது மத்தியார்ச்சுனம் என்னும் இடைமருதாகும். நெல்லை மாவட்டத்தில் உள்ள புடார்ச்சுனம் புடைமருதாகும். இவற்றுக்குப் புறம்பாக உள்ள இந்த அர்ச்சுனக்ஷேத்திரம் ஸ்ரீசயிலத்துக்குத் தெற்கே இருப்பதால் தென்மல்லிகார்ச்சுனம் ஆயிற்று. தலை, இடை தடை என்பது போலத் தென் என்ற சொல்லை அழகிய என்ற பொருளில் கொண்டாலும் பொருந்தும்.

**தேனமிர்தநாயகி**

தேவாரத்தில் தருமபுரத்தின் இறைவியின் பெயர் **மதுர மின்னம்மை** என்று குறிக்கப் பெறுகின்றது. இறைவன் திருப்பெயர் **யாழ்மூரி** நாதர் எனக் குறிப்பிடப்படுகின்றது. ஆனால் இந்த ஊஞ்சலில் இறைவி தேனமிர்த நாயகியாகவும், இறைவன் தரும நாதராகவும், குறிக்கப்பட்டுள்ளனர். தேனமிர்தநாயகி என்பது மதுரமின்னம்மை என்று மாற்றம் பெற்றிருக்கலாம் என்று கருதத் தோன்றுகின்றது. திருஞான சம்பந்தர் யாழ்மூரிப் பதிகம் பாடிய பின்பே இந்தத் தலத்து இறைவனுக்கு யாழ்மூரிநாதர் என்ற பெயர் அமைந்திருக்க முடியும். அதற்கு முன்னர் இவ்விறைவன் பெயர் வேறெங்கும் குறிக்கப்பெறவில்லை. இந்த ஊஞ்சலில் தருமநாதர் எனக் குறிக்கப்பட்டிருப்பது யாழ்மூரிநாதர் என்று வழங்குவதற்கு முன்னர் இருந்த பெயராக இருக்கலாம்.

**நகபதி**

நகம்-என்பது மலை. மலைக்குத் தலைவன் என்றபொருளில் வந்தது. வள்ளிப் பிராட்டியின் வளர்ப்புத் தந்தையாகிய நம்பி ராசனை இத்தொடர் குறிக்கும்.

**நாரதர்**

இவர் மகதியாழைக் கையில்கொண்டிருப்பார். இவர் தட்சன் குமரராகிய அரியசுவர்கள், சுபல சுவர்களுக்கு ஞானோபதேசம் செய்து ஞானிகளாக்கினமையால் தட்சனால் நிலையில்லாது எங்கும் திரிந்து கொண்டிருக்கச் சபிக்கப்பட்டவர். இசையில் வல்லவர். மூவுலகிலும் சஞ்சரிப்பவர் அதனால் திரிலோக சஞ்சாரி என்றழைக்கப் பெறுவார்.

**பத்தவதாரம்**

திருமால் உலகை உய்விக்க பத்து அவதாரம் எடுத்ததாகக் கூறுவர்.

அவையாவன: மச்சாவதாரம், கூர்மாவதாரம், வராகாவதாரம், நரசிம்மாவதாரம், வாமனாவதாரம், திருவிக்ரமாவதாரம், பரசு ராமாவதாரம், ராமாவதராம் கிருஷ்ணாவதாரம் பலராமாவ தாரம் அல்லது புத்தவதாரம் என்பனவாகும். பலராமர் இறைவ னுடைய அவதாரம் என்பதைச் சிலர் ஏற்றுக் கொள்ளவில்லை.

எனவே அவர்கள் புத்தாவதாரத்தை பத்தாவதாரங்களுள் ஒன்றாகக் கருதினர்.

### பல்லாண்டு

சீரும், சிறப்பும் பெற்றுப் பலகாலம் வாழ்க என்று வாழ்த்தும் மரபு பல்லாண்டு என்று சுட்டப் பெறுகின்றது. நாலாயிரத் திவ்வியப்பிரபந்தத்தில் **திருப்பல்லாண்டு** பெரியாழ்வார் திருமொழியின் முதல் பத்தாக அமைகின்றது. அதுபோன்றே சைவத் திருமுறைகளில் ஒன்பதாம் திருமுறையில் சேந்தனார் அருளிய பல்லாண்டு திருப்பல்லாண்டு எனச் சுட்டப்பெறுகின்றது.

### பூதத்தாழ்வார்

கடல் மல்லை எனப்படும் மாமல்லபுரத்தில் தோன்றியவர் பூதத்தாழ்வார். திருமாலைப் **பூதம்** எனப்பாடியதால் இப்பெயர் பெற்றார் எனக் கருதுவர் இவர் இரண்டாம் திருவந்தாதியைப் பாடியவர்.

### பேயாழ்வார்

இவர் திருமயிலையில் பிறந்தவர்; திருமாலைப் பாடிப் புகழ் பெற்றவர். இறைவன் மீது ஆறாக் காதல் கொண்டதால் பேயாழ்வார் என அழைக்கப்பட்டார் என்பர். இவர் நூறு வெண்பாக்களைக் கொண்ட அந்தாதி பாடினார் (மூன்றாம் திருவந்தாதி).

### பொய்கையாழ்வார்

இவர் காஞ்சியில் பிறந்தவர். இவர் சங்ககாலப் பொய்கையார் அல்லர்; முதலாழ்வாராய் போற்றப்படும் மூவருள் ஒருவர். வெண்பா யாப்பில் அந்தாதி முறையில் அமைந்த 72 பாசுரங்கள் பாடியுள்ளார் இவர்.

### பொதிய வெற்பு

தென்பாண்டி நாட்டில் திருக்குற்றாலமும் அதைச் சார்ந்த இடத்தில் உள்ளமலை பொதியமாகும். இங்கு அகத்தியர் இருந்து மாணாக்கர்களுக்கு தமிழ் போதித்ததாகக் கூறுவர். இங்குச் சந்தன மரம்மிகுதியாதலால் சந்தனப் பொதிகை என்பர். இப்பொதிகையின் சிறப்பைக் கம்பன்,

தென்தமிழ் நாட்டு அதன் பொதியில் திருமுனிவன்
தமிழ்ச் சுங்கம் சேர்கிற் பீரேல்
என்றும் அவன்உறைவிடமாம் ஆதலினால்
அம்மலையை இறைஞ்சி ஏகி
பொன்திணைந்த புனல்பெருகும் பொருநை எனும்
திருநதி பின்பு ஒழிய நாகக்
கன்றுவளர் தடஞ்சாரல் மயேந்திரமா
நெடுவரையும் கூறும் காண்டிர்

(கம், கிட்கிந்தா, 31)

என்ற பாடல்வழி விளக்குகின்றார்.

**மதுரகவியாழ்வார்**

இவர் நம்மாழ்வாரின் சீடர்; இவரது பிறப்பிடம் திருக்கோளூர் ஆகும். அயோத்திக்கு ஒருமுறை சென்றபோது அங்கு ஓர் ஒளியினைக் கண்டு அதனைத் தொடர்ந்து பின்பற்றி வர நம்மாழ்வாரை வந்தடைந்தனர் என்பர். திருக்குருகூரில் வந்து சேர்ந்து மதுரகவியார் அவர் சீடரானார். நம்மாழ்வாரின் பாடல் களனைத்தையும் தம்கரத்தால் ஓலையில் எழுதிப் பெருமைப் பெற்றவர் இவர் என்பர். திருமாலை விட்டு ஆழ்வாரையே தம் தெய்வமாகக் கருதி வழிபட்டவர் கண்ணிநுண் சிறுத்தாம்பு என்பது இவரால் பாடப்பட்டது

**மனுநீதி**

நீதிமுறை வகுத்த மன்னனை மனு என்று கூறுவர். மனுக்கள் பதினான்கு எனவும் கூறுவர். பிருது என்பவன் ஆதிமனுவான சுவாயம்பு மனுவின் வழித்தோன்றல் என்று புராணங்கள் குறிக்கும். பிருது என்பவன் நல்லவன்; வேனன் என்பவன் கொடியவன்.

**வகுளம்**

வகுளம் என்பது மகிழம்பூ வாகும். இது நம்மாழ்வார் விரும்பி யணிந்த மாலையாதலால் நம்மாழ்வாருக்கு மகிழ்மாறன் என்ற பெயர் வந்தது. மகிழம் என்ற சொல்லே திரிந்து வகுளமாயிற்று. மகிழம் என்ற தமிழ்ச்சொல்லில் ம என்பது வ எனவும் கி என்பது கு வாகவும் ழம் என்பது ளம் ஆகவும் திரிந்து வகுளம் என சமஸ் கிருதத்தில் அழைக்கப்பெற்றது. மகிழ் மாறன் வகுளாபரன் வகுளபூஷணன் என்று அழைத்தது இதுபற்றியே போலும்.

**வயிரவர்**

வயிரவராகச் சிவன் சென்று, தனக்கும் மும்மூர்த்திகளைப் போன்று ஐந்து தலை இருப்பதாகச் செருக்கடைந்த பிரமனது நடுத்தலையைக் கிள்ளி எறிந்தான். வயிரவர் சிவமூர்த்தியின் கட்டளைப்படி அழிவுக் காலத்தில் வேத ஞானியை உருவகித்து உலகங்களைத் தன் நெற்றி விழியால் தீயாக்கி உலவுவோர். அந்தகாசுரனைச் சூலத்தால் குத்தினார்; அவன் பணிந்து வேண்டியதும் அவனுக்கு அனுக்கிரகம் செய்தார்.

வயிரவர் பலர் உண்டு என்பர். கால வயிரவர் அசிதாங்க வயிரவர், குரோத வயிரவர், சண்ட வயிரவர், கபால வயிரவர், குவோத வயிரவர், விபூஷணவயிரவர், மார்த்தாண்ட வயிரவர், சுதந்தர வயிரவர், சுவேச்சா வயிரவர், உலோக வயிரவர், உக்கிர வயிரவர், பிறச்சை வயிரவர்,நின்மாண் வயிரவர், பூஷ்ணவயிரவர் என்பவர்கள் அவள்களுள் முக்கிய மானோர் ஆவர்.

**வரகுணமங்கை**

இது தென்பாண்டி நாட்டைச் சார்ந்த வைணவ நவ திருப்பதிகளுள் ஒன்று. ஸ்ரீவைகுண்டத்தைச் சார்ந்த நத்தம் என்ற பகுதியே வரகுணமங்கையாகும் இறைவன் விஜயாசனப் பெருமாள் இறைவி வரகுண வல்லித் தாயார். உரோமச முனிவரும் அக்கினியும் இவ்விறைவனை வழிபட அவர்களுக்கு இறைவன் வரங்களை வழங்கியமையால் இவ்வூர் வரகுணமங்கையாயிற்று என்பர்.

**வழுதிவளநாடு**

ஆழ்வார் திருநகரி என்னும் குருகையும் அதைச் சார்ந்த இடங்களும் வழுதிவளநாடு எனப்பெறும். நம்மாழ்வாரின் முன்னோர்களில் ஒருவராகிய திருவழுதி என்ற பாண்டியன் பெயரைக் கொண்டு இந்நாடு வழுதிவள நாடாயிற்று. இவ்வூரையடுத்த பெருங்குளம் இறைவன் பெயர் வழுதீசர் என்பது குறிப்பிடத்தக்கது.

**விசயன்**

பஞ்சபாண்டவர்களில் ஒருவனாகிய அருச்சுனனின் பத்துப் பெயர்களுள் ஒன்று.

## பின்இணைப்பு—I

# ஊஞ்சல் இலக்கியங்கள் (கிடைத்தவை)

| வரிசை எண் | நூல் | ஆசிரியர் | பதிப்பும் இடமும் | ஆண்டு |
|---|---|---|---|---|
| 1. | ஆதிகேசவப் பெருமாள் ஊசல் | — | நிரஞ்சன விலாச அச்சியந்திர சாலை, சென்னை | 1926 |
| 2. | உலவிற்குலம் சித்தி விநாயகர் ஊஞ்சல் | ச. குமாரசாமி குருக்கள் | கலாநிதி யந்திர சாலை, பருதித்துறை | 1936 |
| 3. | ஊசல் (கம்பை சந்நிதி முறை) | — | கலாரத்னாகர அச்சுக்கூடம் சென்னை | 1903 |
| 4 | ஊசல் (செங்குந்தர் பிரபந்தத் திரட்டு) | மயிலை நாதர் | (ப, ஆ) காஞ்சி நாகலிங்க முனிவர் | 1926 |
| 5. | ஊசல் (திருப்போரூர் சந்நிதி முறை) | சிதம்பரசுவாமிகள் | சென்னை | — |
| 6. | ஊசற்பாட்டு | நாகூர் முகமது புலவர் | அல் அமின் புக்டிப்போ, மதுரை | 1924 |
| 7. | ஏகநாயகர் ஊசல் (திருவிடைமருதூர் மகா லிங்கசுவாமி கோவில் கும்பாபிஷேக மலர்) | — | திருவாடுதுறை ஆதினம் | 1970 |
| 8. | கைலாச பிள்ளையார் ஊஞ்சல் | அ. குமாரசாமிப் புலவர் | (ப. ஆ) கைலாசப்பிள்ளை, யாழ்ப்பாணம் | — |
| 9. | கொம்மிச்சந்த ஊசல் (வந்நிய பூபதிகள் கல்யாணக் கொத்து) | — | — | — |

| | | | |
|---|---|---|---|
| 10. சிவப்பிரகாசபண்டார சந்நிதிகள் திருவூசல் | — | சுப்பிரமணிய பண்டார சந்நிதானம் | 1970 |
| 11. சீரங்க நாயகர் ஊஞ்சல் (அஷ்ட பிரபந்தம்) | பிள்ளைப்பெருமாள்ஐயங்கார் | ஆசிரியற் நூற்பதிப்புக்கழகம், சென்னை | 1955 |
| 12. சீரங்க நாயகியாரூசல் | கோனேரியப்பனையங்கார், | வை. மு. கோ, சென்னை | 1958 |
| 13. சுன்னாகம் ஐயனார் ஊஞ்சல் | முத்துக்குமார கவிராயர் | புலவரகம், சுன்னாகம் | 1952 |
| 14. ஞானத் திருவூசல் | — | நிரஞ்சனவிலாச அச்சியந்திர | 1926 |
| 15. திருப்பொன்னூசல் (திருவாசகம்) | மாணிக்க வாசகர் | சாலை, சென்னை. | — |
| 16. திருப்பொன்னூசல் (மீனாட்சி சுந்தரம்பிள்ளை பிரபந்தத் திரட்டு) | மீனாட்சி சுந்தரம்பிள்ளை | கமர்சியல் அச்சுக்கூடம், சென்னை | 1926 |
| 17. திருவல்லிக்கேணி பெருமாள் பிள்ளையின்பம் பொன்னூசல் | டி. எஸ். ராஜகோபாலன் | சாம்பா பப்ளிஸிங் கம்பெனி, சென்னை | 1977 |
| 18. திருவல்லிக்கேணி பெருமாள் பொன்னூசல் | டி. எஸ். ராஜகோபாலன் | புக்ஸ் இந்தியா பிரைவேட். லிமிட்டெட், சென்னை | — |

| வரிசை எண் | நூல் | ஆசிரியர் | பதிப்பும் இடமும் | ஆண்டு |
|---|---|---|---|---|
| 19. | திருவூஞ்சல் (துரோபதையம்மன் சந்நிதி முறை) | சௌந்தராச உடையார் | — | 1948 |
| 20. | திருவூசல் (காந்திமதியம்மை திருக்கல்யாணப் பாடல்) | — | — | — |
| 21. | திருவூசல் (வந்நிய பூபதிகள் கல்யாணக் கொத்து) | முத்துலிங்கம் பிள்ளை | கலாரத்னா அச்சுக்கூடம், சென்னை | 1884 |
| 22. | திருவேங்கடனார் பொன்னூசல் | டி. எஸ். ராஜகோபாலன் | சாம்பா பப்ளிஸிங் கம்பெனி, சென்னை | 1978 |
| 23. | நகுலேசர் ஊஞ்சல் | — | — | — |
| 24. | நம்மாழ்வார் ஊஞ்சற் கவிதை (Bullation of the Govt. Oriental Manuscript library) | — | Govt. Mans. Library, Madras. | 1949 |
| 25. | பசுவந்தனை திருவூசல் | சொக்கலிங்கம் செட்டியார் | சென்னை | — |
| 26. | பாஸ்கர சேதுபதி திருமண ஊசல் | — | கலாரத்னா அச்சுக்கூடம் (சென்னை) | — |

| | | | |
|---|---|---|---|
| 27. பெரியகாண்டியம்மன் ஊசல் (அண்ணன் மார் சாமி கதை) | சக்திக்கனல் (ப.ஆ) | வெற்றிவேல் பதிப்பகம், தஞ்சை | 1977 |
| 28. வரதராசப் பெருமாள் ஊஞ்சல் | — | — | — |
| 29. ஸ்ரீ ஞானசம்பந்தசுவாமிகள் திருவூசல் | ராய—சொ. | சென்னை | 1912 |
| 30. ஸ்ரீ முத்துக் குமார சுவாமிகள் ஊஞ்சல் | உ. வே. சா | கபீர் அச்சுக்கூடம், சென்னை | 1944 |
| 31. ஸ்ரீ திருப்போரூர் பச்சை நாயகியார் ஊஞ்சல் | கந்தசாமி முதலியார் | திரிசிரபுரம் இந்திரசாலை | 1952 |
| 32. சலாவத்து பாட்டு (ஊஞ்சல்) | — | அல்அமின் புக்டிப்போ, மதுரை | — |

**குறிப்பு:** நூல் என்ற தலைப்பின்கீழ் அடைப்பில் கொடுக்கப்பட்டுள்ளன அந்த ஊஞ்சல் இலக்கியம் எடுக்கப் பட்ட நூலைக் குறிக்கும். ஊஞ்சலே நூல் தலைப்பாயின் அடைப்பின்றி இருக்கும்.

பின்னிணைப்பு—2

## ஊசல் இலக்கியங்கள்

(பெயரளவில் அறிய வருவன)

1. அத்தியடி விநாயகர் ஊஞ்சல், அ. குமாரசாமிபுலவர்
2. அராலி முத்துமாரியம்மன் ஊஞ்சல், அ.குமாரசாமிபுலவர்
3. அல்வாய் விநாயகர் மீது ஊஞ்சல், க. சின்னத்தம்பி உபாத்தியாயர்
4. அறம்வளர்த்தம்மன் ஊசல், ஆழ்வாரப்பப்பிள்ளை
5. ஆறாதார ஊஞ்சல்
6. ஊச்ல், (திருப்போரூர் இன்னிசைப்பா) சிங்காரவேலு முதலியார்
7. ஊசல், சி. தம்பிப்பிள்ளை
8. ஊஞ்சல், அ குமாரசாமிப்புலவர்
9. ஊஞ்சல், கோபால்சாமி நாயக்கர்
10. ஊஞ்சல், வெலம்போடியார்
11. ஊஞ்சல், லாலி, பத்மாசினியம்மாள்
12. ஊஞ்சல் பதிகம், வண்ணை செல்லையா
13. ஊஞ்சல்பாட்டு, முகமது புலவர்
14. எயிலம்மை ஊஞ்சல், இராம. சண்முகம்
15. ஏழாலை அத்தியடி விநாயகர் ஊஞ்சல் பதிகம், குமாரசாமிப்புலவர்
16. கச்சிகொண்ட பாண்டீசர் ஊஞ்சல், ஆழ்வாரப்பப்பிள்ளை
17. கதிரேசர் ஊஞ்சல்
18. கந்தவன நாதரூஞ்சல், குமாரசாமி முதலியார்
19. கலியாண ஊஞ்சல்
20. கலியாணபுர அங்கயற்கண்ணம்மை ஊஞ்சல், இராமாநுஜம்பிள்ளை
21. கவாணவத்தை வைரவர் ஊஞ்சல், ஏரம்பையர்

22. காந்திமதி அம்மன் ஊஞ்சல்
23. காரைக்குடி மீனாட்சிசுந்தரேசர் திருவூஞ்சல்
24. காரைநகர் திண்ணபுர சுந்தரேசர் திருவூஞ்சல், காரைநகர் த நாகமுத்துப்புலவர்
25. காலிக்கதிரேசர் ஊஞ்சல், ஏரம்பையர்
26. கும்பாழவளை விநாயகரூஞ்சல், அளவெட்டி த. சபாபதி பிள்ளை
27 குலசேகரம் அறம்வளர்த்த அம்மன்மீது ஊஞ்சல், ஆழ்வாரப்பப்பிள்ளை
28. குவாலாலம்பூர் சிவபெருமான் ஊஞ்சல், ஏரம்பையர்
29. கைலாசப்பிள்ளையார் ஊஞ்சல், அ. குமாரசாமிப்புலவர்
30. கொங்கணரூஞ்சல்
31. கொழும்பு முத்துவிநாயகர் ஊஞ்சல், மணிப்பால். அ. சுவாமிநாதமுதலியார்
32. சங்ககிரி சென்னகேசவப் பெருமாள் ஊஞ்சல், முத்துசுவாமி கோனார்
33. சந்திரசேகர விநாயகரூஞ்சல், முருகேசபண்டிதர்
34. சித்திவிக்னேசுரர் ஊஞ்சல், வைத்திலிங்கம்பிள்ளை
35. சித்திவிநாயகரூஞ்சல், வே. அகிலேசப்பிள்ளை
36 சிவகாமியம்மன் ஊஞ்சல், வே. அகிலேசப்பிள்ளை
37. சிவகாமியம்மன் ஊஞ்சல், தம்பிப்பிள்ளை
38. சிவப்பிரகாசர் ஊஞ்சல்
39. சிவபெருமான் ஊஞ்சல்
40. சீரங்கநாயகர் திருவூசல்
41. சீரங்கத்து நாயகி திருவூசல்
42. சுப்பிரயமணிய பிள்ளைபேரில் கல்யாண ஊஞ்சல்
43. சுப்பிரமணியர் ஆறாதார ஊசல்
44. செயங்கொண்ட சோழீசர் ஊசற்றிருநாமம், முருகப்பச் செட்டியார்
45. தகைலட்டி விநாயகரூஞ்சல், சி. கணேசய்யர்
46. திருக்கடன்மல்லை தாயற் ஊசற்பிரபந்தம், பெ. அன்னம்மாள்
47. திருக்கல்யாண ஊசல், ஐயாசாமிப்பிள்ளை
48. திருக்குருகூர் வல்லியார் ஊசல்
49. திருப்பெரும்பேற்று முருகன் திருவூசல், பா. சிங்காரவேலு முதலியார்
50. திருப்போரூர்முருகன்மீது ஊசல்,சிங்காரவேலு முதலியார்
51. திருமண ஊசல்

52. திருவரங்க ஊசற்றிருநாமம், பிள்ளைப்
பெருமாளையங்கார்
53. திருவரங்கத்து ஊசற்றிருநாமம், பிள்ளை
உலோகாச்சாரியார்
54. திருவரங்கத்து ஊசல்
55. திருவூஞ்சல் (துரோபதையம்மன் சந்நிதி முறை)
சௌந்தராச உடையார்
56. திருவூஞ்சல், (கதிர்காமநாதர் திருவருட்பா)
வெள்ளையப்பச் செட்டியார்
57. தில்லையாட்டி மாரியம்மன் திருவூஞ்சல், அ. குமாரசாமிப்
புலவர்
58. துணவை அரசடியிற் சண்முகர் ஊஞ்சல்,
அ. குமாரசாமிப்புலவர்
59. தென்கோவை வெள்ளெருவை விநாயகரூஞ்சல்,
அ. குமாரசாமிப்புலவர்
60. தொண்டைமண்டல வேளாளரூசல், திருமலையன்
பாளையம் கொண்டல்வண்ட முதலி
61. நகுலேசர் ஊஞ்சல், அ. குமாரசாமி புலவர்
62. நகுலேசர் ஊஞ்சல், ஆ. வேலுப்பிள்ளை
63. பத்திரகாளி ஊஞ்சல், வே அகிலேசப்பிள்ளை
64. பத்திரகாளி ஊஞ்சல், கணபதி ஐயர்
65. பரசமய கோளரியார் திருவூசல், அங்கப்பநாவலர்
66. பரமதேசிகர் ஊஞ்சல் அனந்தநாத சுவாமிகள்
67. பருத்தித்துறை சித்திவிநாயக ரூஞ்சல்
68. பார்த்தசாரதி பெருமாள் ஊசற்றிருநாமம்,
ஆ. திருவேங்கடப்பிள்ளை
69. பாலையடிவால விக்னேசுவரர் ஊஞ்சல்
70. பிள்ளையார் ஊஞ்சல்
71. பிள்ளையார் ஊசற்றிருநாமம், முத்துத்தாண்டவப்
பிள்ளை
72. பெரியபுல கணபதீசுவரர் ஊஞ்சல், கந்தப்பிள்ளை
73. பொன்பற்றிச் செல்வியம்மை ஊசல், சக்கரைப்புலவர்
74. போக்கலை வள்ளிமணவாளர் திருவூசல், லட்சுமண
செட்டியார்
75. மண்டலக்கோட்டை வண்டுவனப் பெருமாளூஞ்சல்,
சர்க்கரைப்புலவர்
76. மண்டூர் கந்தசாமி மீது லீலாசங்கர மாணவரூசல்
77. மணவாளமாமுனி ஊசற்றிருநாமம், அனந்த கிருஷ்டின
ஐயங்கார்
78. மயிலணி ஊஞ்சல் ,முருகேசப்பண்டிதர்

79. மயிலூர் குமரநகர் பொன்மாரியம்மன் ஊஞ்சல்,
பொன்னுசெல்லையபாரதி
80. மயிலை சுப்பிரமணியர் ஊஞ்சல், மயில்வாகனப்புலவர்
81 மாணிக்குறி வாமனபுரீசர் ஊஞ்சல்
82. மாதகற் பிள்ளையார் ஊஞ்சல், ஏரம்பையர்
83. மாரியம்மை ஊஞ்சல்
84. மானிடரூசல்
85. மீனாட்சி சுந்தரேசர் திருவூசல், சொக்கலிங்கஞ்
செட்டியார்
86. மீனாட்சியம்மை ஊசல், சுப்பிரமணிய ஐயர்
87. மீனாட்சியம்மன் ஊசற்பாட்டு
88. முத்தாலம்மன் ஊஞ்சல், வீரப்பன்செட்டி
89 முத்துமாரியம்மை ஊஞ்சல், பேரம்பலப் புலவர்.
90 முருகன் ஊசல், சிதம்பர சுவாமிகள்
91. மூளாய்ச் சித்திவிநாயகர் ஊசல், குமாரசாமி முதலியார்
92. வடிவேலர் ஊஞ்சல் பதிகம், வண்ணை செல்லையா
93. வண்ணைநகர் ஊஞ்சல், சதாசிவப்பண்டிதர்
94 வண்ணை வெங்கடேசப் பெருமாள் ஊஞ்சல், வண்ணை
செல்லையா
95. வதுளைக்கதிரேசர் ஊஞ்சற் பதிகம், வல்லை
வைத்திலிங்கம் பிள்ளை
96. வல்லிபுரமாயன்மீது ஊஞ்சல், தா. முருகேசப்பிள்ளை
97. வல்லை வைத்தியேசர் ஊஞ்சல், வல்லை வைத்தியலிங்கம்
பிள்ளை
98. வள்ளி மணவாளர் திருவூசல், சொக்கலிங்கஞ் செட்டியார்
99. வன்னியர்கள் ஊஞ்சல் பாமாலை,
சே. மு. மாணிக்கவாசக நாயக்கர்
100. விநாயகரூஞ்சல், சிவசம்புலவர்
101. வீரபத்திரர் ஊஞ்சல், சின்னத்தம்பி
102. வேதாந்த தேசிகர் ஊஞ்சல்
103 வேதாரேணியர் ஊஞ்சல், கணபதிபிள்ளை
104. வேலனை மகாகணபதி பிள்ளையார்மீது திருவூசல்
105. வைரவர் ஊஞ்சல்
106. ரங்கநாயகர் திருவூசல், வ. ஞா. கணேசப் பண்டிதர்
107. ரங்கநாயகர் திருவூஞ்சல்
108. ரங்கநாயகன் நலுங்கு ஊசல், ஜானகி அம்மாள்

□ □ □

## பின்னிணைப்பு—3

## ஊஞ்சல் இலக்கியம் (சுவடிகள்)

1. அங்கயற்கண்ணம்மை பொன்னூஞ்சல்
2. அரங்கநாதரூசல்
3. அரங்கநாயகன் பேரில் ஊசல்
4. அழியா விலங்கியம்மன் ஊசல்
5. ஆயிரவர் பேரில் ஊஞ்சல்
6. ஆவுடையார் பேரில் ஊஞ்சல்
7. ஊஞ்சல் முதலியன
8. ஊஞ்சற் கவிதைகள்
9. காரநாதர் முத்தாலம்மை ஊஞ்சல்
10. குமாரபுரி முத்தாலம்மை ஊஞ்சல்
11. குமாரபுரி முத்தாலம்மன் ஊசல்
12. கொங்கணரூசல்
13. சட்டைநாதர் திருப்பொன்னூசல்
14. சடகோபரூஞ்சல்
15. சடகோபரூசல்
16. சிவகாமி அம்மை ஊஞ்சல்
17. சிவகாமி அம்மன் ஊஞ்சல்
18. சிவகிரியூஞ்சல்
19. சிவப்பிரகாசர் ஊஞ்சல்
20. தருமபுரம் தேனமிர்தநாயகி பொன்னூஞ்சல்
21. தன்னை விநாயகர் ஊஞ்சல்
22. திருவரங்க ஊசல்
23. திருவூசல்
24. திருவூஞ்சல்
25. நம்பெருமான் ஊஞ்சல்
26. நம்பெருமாள் ஊஞ்சல்
27. நாச்சியார் ஊஞ்சல்
28. நாச்சியார் ஊசல்

29. பத்மாசினிபேரில் ஊஞ்சல்
30. பச்சைநாயகி பேரில் ஊஞ்சல் பதிகம்
31. பரசமயகேளரி ஊஞ்சல்
32. பெரியநாயகி அம்மன்பேரில் ஊஞ்சல்
33. பொன்னூசல் முதலியன
34. மதுரகவியாழ்வார் ஊஞ்சல்
35. மதுரகவியாழ்வார் ஊசல்
36. மாணிக்குழி வாமனபுரீசர் ஊசல்
37. மாரியம்மன் ஊசல்
38. மாரியம்மை ஊசல்
39. வள்ளியம்மன் தெய்வயானைபேரில் ஊஞ்சல் பாட்டு
40. விஜய ராகவப்பிள்ளை ஊஞ்சல்
41. விஜயராகவப் பெருமாள் ஊஞ்சல்
42. வேளாளர் ஊஞ்சல்
43. வைத்தமாநிதிப் பெருமாள் ஊஞ்சல்
4 . வைத்தமாநிதிப் பெருமாள் ஊஞ்சல்
45. ரங்கநாயகன் ஊஞ்சல்
46. ஸலாவத்துப் பாட்டு

இவை அரசினர்க்கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம் சென்னை, அரசினர்க் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம் திருவனந்தபுரம் பல்கலைக்கழகம், டாக்டர் உ. வே. சாமிநாதையர் சுவடிகள் நூலகம் சென்னை, தஞ்சை சரசுவதி மகால் நூலகம், சென்னை தியேசாபிகல் சொசைட்டி நூலகம் (அடையாறு நூலகம்) ஆகிய நூலகங்களிலிருந்து எடுக்கப் பட்டன.

# துணைநூற் பட்டியல்

1. அரங்கராசன், ச., பொருள் கோள், பாலமுருகன் பதிப்பகம், மருதூர், 1981.

2. இராகவையங்கார், மு., கட்டுரை மணிகள், நாராயணையங்கார் எம். ஆர்., (பதி) மானாமதுரை.

3. கோவல் அதீனக் குருமணி, ஆறுமுக மெஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் (ஞானியார்) வரலாறு, ஞானியார் மடாலய வெளியீடு, 1967.

4. சண்முகம் பிள்ளை மு., (பதி) திருவேங்கட நாதன் வண்டுவிடு தூது, தமிழ்நாடு தொல்பொருள் ஆய்வுத்துறை, சென்னை, 1981.

5. சிவகாமி, ச., (பதி) திருக்குருகூர் திருவேங்கடநாதன் பிள்ளைத் தமிழ், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், 1980.

6. சுந்தரமூர்த்தி., (பதி) சங்கர மூர்த்திக் கோவை, தமிழ்நாடு தொல்பொருள் ஆய்வுத்துறை, சென்னை, 1981.

7. சுப்பிரமணியன் ச. வே, (பதி) இலக்கணத்தொகை யாப்பு—பாட்டியல், தமிழ்ப்பதிப்பகம், சென்னை, 1978.

8. சுப்பிரமணியன் ச. வே., & திருநாவுக்கரசு க. த, (பதி) தமிழ் இலக்கியக் கொள்கை பகுதி—2, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம். சென்னை, 1977.

9 சுப்பிரமணியன் ச. வே., & விஜயலட்சுமி ர., (பதி) தமிழ் இலக்கியக் கொள்கை, பகுதி—7 உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1962.

10. சுப்பிரமணிய பிள்ளை இ. மு. நெல்லை மாவட்டக்கோவில் வரலாறு, அறநிலையத்துறை, தமிழக அரசு, 1962

11. தமிழவன் (மொ. பெ) மலையாள நாட்டுப் புறப் பாடல்கள், 1978.

12. தேவநேயப் பாவாணர், ஞா. முதல் தாய்மொழி, தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை.

13. பெருமாள், ஏ. என்., கும்மிப்பாடல்கள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், 1980.

14. ——., தமிழக நாட்டுப்புறக் கலைகள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் சென்னை, 1980.

15. ராமன், மு. கோ., சுவடியியல் பயிற்சிக் கையேடு உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் சென்னை 1982.

16. ராஜகோபாலாச்சாரியார். கே., இலக்கண விளக்கம், அணியியல், ஸ்டார் பிரசுரம், சென்னை, 1969.

